

॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

[ ஸ்ரீஸூக்திமாலா மலர் 9 ]

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை
மணிப்ரவாளநடையிலும்
ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸம்ஸ்க்ருதத்திலும்
அருளிச்செய்த

# கத்ய
# வ்யாக்யானங்கள்

தர்சந ஸ்தாபகரான எம்பெருமானார் அருளிய
கத்யத்ரயத்துடன் கூடியது.

[ ப்ரமாணத்திரட்டு முகவுரையுடன் கூடியது ]

பதிப்பாசிரியர்:-
ஸ்ரீ.உ.வே.K.ஸ்ரீநிவாஸஅய்யங்கார், அட்வகேட்



கிடைக்குமிடம்:-
S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

விலை ரூ. 2-00] விஜயஃு சித்திரைமீ [தபாற்கூலி 0-37

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.



॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை
மணிப்ரவாளநடையிலும்
ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸம்ஸ்க்ருதத்திலும்
அருளிச்செய்த

# கத்ய
# வ்யாக்யாநங்கள்

தர்சந ஸ்தாபகரான எம்பெருமானார் அருளிய
கத்யத்ரயத்துடன் கூடியது.

[ஸ்ரீஸூக்திமாலா மலர் 9]

[ப்ரமாணத்திரட்டு முகவுரையுடன் கூடியது]


பதிப்பாசிரியர்:—

K. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் திருச்சி

விலை ரூ. 2—0—0

தபால் கூலி அணா 2.

[விஜய ஹூ சித்திரை மீ]

ஸ்ரீ:

## மணவாள மாமுனிகள் அருளிச்செய்தவை

வாழி யெதிராசன் வாழி யெதிராசன்
வாழி யெதிராசனென வாழ்த்துவார்—வாழியென
வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர்தலை.

சாறுவாகமதநீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரிமுறித்திட
மாறுசெய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்தறமிகுத்துமேல்
வந்தபாசுபதர் சிந்தியோடும்வகை வாதுசெய்த வெதிராசரு
கூறுமாகுருமதத்தொடோங்கிய குமாரிலன்மதமவற்றின்மேல்
கோடியதர்க்கசரம்விட்டபின் குறுகிமாயவாதியரைவென்றிட
மீறிவாதில்வரு பார்க்கரன்மத விலக்கடிக்கோடி யெறிந்துபோய்
மிக்கயாதவமதத்தை மாய்த்த பெருவீரர் நாளுமிக வாழியே.

சங்கரபாற்கரயாதவ பாட்டபிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர்மாய்குவரென்றுசதுமறைவாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலை யென்றுமிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமை யாறமெனத்துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளிபராங்குசமுன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்
மன்னியதென்ன ரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள் சூழ்வயல்நாளும் சிறந்தபெரும்பூதூர்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே.

—○—

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை.

நமது தர்ஸநஸ்தாபகரான எம்பெருமானார் அருளிச்செய்த திவ்யக்ரந்தங்கள்,- 1. ஸ்ரீபாஷ்யம், 2. வேதாந்தஸாரம், 3. வேதாந்த தீபம், 4. வேதார்த்தஸங்க்ரஹம், 5. கீதாபாஷ்யம், 6. நித்யக்ரந்தம், 7. ஸரணாகதிகத்யம், 8. ஸ்ரீரங்ககத்யம், 9. ஸ்ரீவைகுண்ட கத்யம் என்னும் ஒன்பதேயாகும். இவற்றுள் முதல் மூன்றும் ப்ரஹ்மஸூத்ரங்களை விவரிப்பவையாகவும், நான்காவது ப்ரதாநமான பல வேதவாக்யங்களை விவரிப்பதாயும், ஐந்தாவது கீதையின் கருத்தைக் காட்டுவதாயும், ஆறாவது ஸ்ரீ வைஷ்ணவனுடைய நித்யாநுஷ்டாநப்ரகாரத்தை உபதேசிப்பதாயும், கடைசி மூன்றும் நம ஸித்தாந்தத்திற்கே உயிர்நிலையாயிருக்கும் ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையும், அதை அநுஷ்டிக்கும் ப்ரகாரத்தையும் விரிவாகவும் தெளிவாகவும் உபதேசிப்பவையாயும் அமைந்துள்ளன. ப்ரபத்திவைபவத்தைப் பேசுவதாலும், அஷ்டாக்ஷரம், த்வயம், சரமச்லோகம் என்னும் ரஹஸ்ய த்ரயங்களை-முக்கியமாக ப்ரபந்நனுகிற கைக்குழந்தைக்குத் தாய்ப்பால் போலேதாரகபோஷகபோக்யமாயிருக்கும் த்வயத்தை-விவரிப்பதாலும், பகவத்ஸ்வரூபரூபகுண விபூதிகளைத் தெளிவாக உபதேசிப்பதாலும் மற்ற கிரந்தங்களைக்காட்டிலும் நம் ஆசாரியர்கள் 'கத்யத்ரயம்' என்னும் ஸமுதாயநாமத்தைப்பெற்ற இம்மூன்று திவ்யக்ரந்தங்களையும் மிகவும் ஆதரித்துப்போருவர்கள். இக்காரணங்களாலேயே, மற்ற கிரந்தங்களில் ஈடுபடத் தகுந்த ஜ்ஞாநஸக்த்யாதிகளும் அவகாசமும் இல்லாதவர்களும், இக்கத்யத்ரயங்களின் பொருளையாவது ஒரு ஸதாசாரியன் மூலமாகக் கற்று உணரவேண்டுமென்பது தெளிவாகும்.

இப்படிப்பட்ட பெருமைபொருந்திய இந்த கத்யத்ரயங்களுக்குப் பல மஹாசார்யர்கள் வியாக்கியானமருளியிருப்பதாக ப்ராசீந க்ரந்தங்களிலிருந்து வெளியாகிறது. மணவாளமாமுனிகளருளிய தத்வத்ரய வ்யாக்யாக்யாநம் ஈச்வரப்ரகரணம் இரண்டாவது சூர்ணையில் "'ஹேயப்ரத்யநீகத்வமாவது,—ஆஸ்ரிதருடைய ஹேயநிராஸகத்வத்துக்கு அடியான ஹேயப்ரதிபடத்வமென்னவுமாம்' என்னுமொரு யோஜனையுமுண்டிறே கத்யவ்யாக்யாநங்களிலே நஞ்சீயர் ஆச்சான்பிள்ளை முதலான ஆசார்யர்கள் அருளிச்செய்தது" என்று அருளியிருப்பதிலிருந்து நஞ்சீயரும் பெரியவாச்சான்பிள்ளையும் கத்யவ்யாக்யாநமருளியுள்ளனர் என்று விளங்குகிறது. பெரியவாச்சான்பிள்ளையின் கத்ய

வ்யாக்யாந ஸ்ரீஸூக்திகள் ப்ராசீநர்களான ரஹஸ்யவிவேககாரர், ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷகாரர் முதலானோரால் எடுக்கப் பட்டுள்ளன. பெரியதிருமுடியடைவு முதலான நூல்களிலும் பெரிய வாச்சான்பிள்ளை கத்யவ்யாக்யாநமருளியதாகக் காட்டப்பட்டுள்ளது. தத்வத்ரயவ்யாக்யாநத்திலேயே ஈச்வரப்ரகரணம் ஆறுவது சூர்ணையில் "'அநுகூலஜ்ஞாநமே ஸ்வரூபமாயிருக்க, ஜ்ஞாநாநந்தங்களென்று பிரித்துச் சொல்லுகிறது இரண்டுமுண்டாகைக்காக' என்றிறே இவர் தாம் இட்டருளின கத்யவ்யாக்யானத்திலே அருளிச்செய்தது" என்று அருளியிருப்பதிலிருந்து பிள்ளைலோகாசார்யரும் கத்யவ்யாக்யாநம் அருளியிருப்பதாகத் தெரிகிறது. ஸ்ரீவேதாந்ததேசிகன் அருளிச்செய்த கத்யபாஷ்யத்தில் முதல் சூர்ணையில் "அஸ்மந்மாதரமித்யபி ஸ்ரீவிஷ்ணு சித்தாதய: படந்தி வ்யாசக்ஷதே ச,—'யாமுநமுநிவம்ஶஜநநோ புநஶ்ச விசேஷேண அஸ்மந்மாதரமிதி' இதி" என்றும், சது:ச்லோகீ இரண்டாவது ச்லோக பாஷ்யத்தில் "உக்தம் ச ஸ்ரீவிஷ்ணுசித்தைர் கத்ய வ்யாக்யாநாரம்பே,—'மாத்ருத்வைகரூபாம் ஶ்ரியம் ப்ரபத்யதே। மாதா ஹி ஹிதாதபி புத்ரஸ்ய ப்ரியமேவ பஶ்யதி, பிதா தூபயம் பஶ்யதி; அதோ தண்டதரத்வஹீநதைவ அவலம்பநமஸ்யாம் தஶாயமாஸீத்॥' இதி" என்றும் அருளியிருப்பதிலிருந்து ஸ்ரீராமாநுஜருடைய ப்ரியசிஷ்யர்களில் ஒருவரான ஸ்ரீவிஷ்ணுசித்தரென்னும் எங்களாழ்வான் ரஸகநமானதொரு கத்யவ்யாக்யாநத்தை வடமொழியில் அருளியுள்ளாரென்று தெரிகிறது. ஸ்ரீதேசிகக்ரந்தங்களிலேயே பலவிடங்களில் வ்யாஸார்யர் என்னும் பெயரையுடையவரும், எங்களாழ்வானுடைய சிஷ்யரான நடாதூரம்மாளென்னும் வரதகுருவின் சிஷ்யருமான ச்ருதப்ரகாசிகாசார்யர் அருளிய கத்யவ்யாக்யாந ஸ்ரீஸூக்திகள் எடுக்கப்பட்டுள்ளன.

இப்படிப் பல மஹாசார்யர்கள் பாஷ்யமிட்டிருந்தபோதிலும், பெரியவாச்சான்பிள்ளையருளிய விரிவான மணிப்ரவாள வ்யாக்யானமும், ச்ருதப்ரகாஶிகாசார்யர் வடமொழியிலருளிய ஸங்க்ரஹமான ஶரணாகதிகத்யவ்யாக்யாநமும், தேசிகனருளிய கத்யத்ரபாஷ்யமுமே இப்போது ப்ரசாரத்திலுள்ளன. இவற்றில் தேசிகபாஷ்யத்தின் க்ரந்தமாலைப் பதிப்பு தற்சமயம் ஸுலபமாயிருக்கிறபடியால், துர்லபமான மற்ற இரண்டு வியாக்கியானங்களை மட்டும் இங்கு அச்சிட்டுத் தருகிறோம். ச்ருதப்ரகாசிகாசார்யருடைய பாஷ்யம் தெலுங்குலிபி

யில் மட்டும் க்ரந்த முத்ராபகஸபையாரால் அச்சிடப்பட்டுள்ளது. பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம் க்ரந்தமுத்ராபக ஸபையாரால் தெலுங்குலிபியிலும், அதற்குப் பல வருஷங்கட்கு முன் (1882-ல்) திருமழிசை மஹாபாஷ்யம் ஸ்ரீ உ. வே. ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமியால் தமிழ்லிபியிலும் அச்சிடப்பெற்றுள்ளன. இவ்விரண்டு பதிப்புகளுக்குள்ளும் மிகுந்த பாடபேதங்கள் காண்கின்றன. ஶரணாகதிகத்ய வ்யாக்யாநத்தின் பிற்பாதியில் இரண்டு பதிப்புகளும் மிகவும் வேறுபடுகின்றனவாகையால் தமிழ்ப்பதிப்பை மேலேயும் தெலுங்குப்பதிப்பைக்கீழேயும் தந்திருக்கிறோம். மற்றவிடங்களில் முக்கியமான பாடபேதங்களைக் குறித்திருக்கிறோம்.

ச்ருதப்ரகாசிகாசார்யரின் வ்யாக்யாநத்தில் தெலுங்குப்பதிப்பில் சில பாடப்பிறழ்வுகளும் அச்சுப்பிழைகளும் காண்கின்றன. அவற்றைக்காட்டுவோம். இரண்டாவது சூர்ணையில் (அநவதிகாதிஶயப்ரிய) என்னும் பதத்தை வ்யாக்யானம் செய்யுமிடத்தில் "ப்ரயோஜநாந்தரத்வாபாவேபி ஸாவதிகாதிஶய ப்ரியத்வவ்யுதாஸார்த்தம் அநவதிகாதிஶயப்ரியத்வமுக்தம்" என்று பாடம் காண்கிறது. "ப்ரயோஜநாந்தரத்வாபாவேऽபி" என்பது அந்வயிக்கவில்லை. "ப்ரயோஜநாந்தரார்த்தத்வ வ்யுதாஸாய அநந்யப்ரயோஜநத்வம்" என்னும் முன் வாக்யத்திற்போலவே "ப்ரயோஜநாந்தரார்த்தத்வாபாவேऽபி" என்றிருக்கவேண்டுமென்பது தெளிவு. ஐந்தாவது சூர்ணையில் (பரமயோகி... ஸ்வரூபஸ்வபாவ) என்னுமிடத்து வ்யாக்யாநத்தில் "பரமஸ்வரூபம்-- நியந்த்ருஸ்வரூபம்। பரமஸ்வபாவ:—ஸௌலப்யநிரூபகாதந்யோ நிருபாதிகதர்ம: ஸ்வபாவ:" என்று காணும் பாடம் நிரர்த்தகமாயுள்ளது. இப்பாடத்தை அப்படியே கொண்டு "ஸௌலப்யத்தை நிரூபிக்கக்கூடிய ஸ்வபாவத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஸ்வபாவம்" என்று ஒரு பண்டிதரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இம்மொழிபெயர்ப்பும் நிரர்த்தகமாகவேயுள்ளது. "பரமஸ்வாபவ:— ஸௌலப்யம்। நிரூபகாதந்யோ நிருபாதிகதர்ம: ஸ்வபாவ:" என்பது சரியான பாடம். ஸ்வரூபஶப்தத்தால் ஸ்வரூபநிரூபகதர்மமான நியந்த்ருத்வமாகிற பரத்வமும், ஸ்வபாவஶப்தத்தால் (ஸ்வரூப) நிரூபகாதந்யமான நிரூபிதஸ்வரூபவிஶேஷணமான ஸௌலப்யமும் சொல்லப்படுகின்றனவென்று கருத்து. இவ்வர்த்தம் தேசிகபாஷ்யத்திலும் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது. "ஸௌலப்யநிரூபகாத்"

என்றுள்ள பாடம் ப்ரகரணத்திற்கும் பொருந்தாது; பொருள்படவும் மாட்டாது. பன்னிரண்டாவது சூர்ணையில் "தைவீம் குணமயீம் மாயாம்" என்றவிடத்தில், "தைவீம்—த்வல்லீலார்த்தம்" என்றிருப்பது பிழை. "த்வல்லீலார்த்தாம்" என்றிருக்கவேண்டும். "ஏவம் பூதோऽஸி" என்னும் பதினெட்டாவது சூர்ணையின் வ்யாக்யாநம் "தத் கதா (कदा) இத்யத்ர ஆஹ—ஏவப்பூதோஷீதி। கதேதி த்வரா தவ யதா (यथा) ஸ்யாத் ததா (तथा) த்வமீத்ருகவஸ்தோऽஸி" என்று காண்கிறது. "கதா" [எப்பொழுது] என்ற ப்ரச்நத்திற்கு அநுகுணமாக "यदा-तदा" [எப்பொழுதுண்டாயிற்றோ அப்போது] என்றிருக்கவேண்டுமேயொழிய "यथा-तथा" [எப்படியுண்டாயிற்றோ அப்படி] என்றிருக்க நியாயமில்லை. தெலுங்கு லிபியில் தவர்க்க த்விதீய சதுர்த்தங்களுக்கிடையே ஒரு புள்ளியே பேதமுள்ளதினலேற்பட்ட அச்சுப்பிழையென்றே இதைக் கருதுகிறோம். இங்கும் மொழிபெயப்பு உள்ள பாடத்தைக்கொண்டே செய்யப்பட்டிருக்கிறது. மற்றோரிடம்:— 19-வது சூர்ணை அவதாரிகையில் "ஶரீரபாதாவதிகல்பகால: ஏவம் விநோதேந நேய இத்யாஹ ஆத்யாத்மிகேதி" என்று பாடம் காண்கிறது. "ஶரீரம் விடுமளவும் உள்ளகல்பகாலம் இப்படி ஸுகமாகப் போக்கத்தக்கது என்று சொல்லுகிறார்" என்று மொழிபெயர்க்கப்பட்டது. சரீரம் விடுமளவுமுள்ள காலத்தைக் கல்பகாலம் என்று சொல்லுவதை எங்கும் கேட்டதில்லையாகையால் இதில் ஏதோ பாடப்பிறழ்விருக்கிறது என்று தெளிவாயிற்று. ச்ருதப்ரகாசிகாசார்யருடைய திருவடிகளை தியானித்துக்கொண்டு சிறிது ஆலோசித்ததில் "ஶரீரபாதாவதிகால்பகால:" என்பதே சரியான பாடமென்று புலனாயிற்று. "சரீரம் விடுவதை அவதி (எல்லை)யாகக் கொண்ட அல்பகாலம் இப்படி விளையாட்டாகப் போக்கத்தக்கது" என்று பொருள். [சரீரபாதாவதிக அல்பகால:] இச்சூர்ணையின் முடிவிலுள்ள "கியாநயம் கால இதி பாவ:" என்ற ஸ்ரீஸூக்தியோடும் மிகப்பொருந்தியிருக்கும். வ்யாஸார்யருடைய வ்யாக்யானத்தில் ஶோதநம் செய்யக்கூடிய இடங்கள் மேலும் இருக்கக்கூடும். மஹான்கள் தெரிவித்தால் தலையல்லால் கைம்மாறிலேன். நம்முடைய பதிப்பில் நேர்ந்த சில அச்சுப்பிழைகளைக் கடைசியில் காட்டியிருக்கிறோம். திருத்திக்கொள்ளவேண்டும்.

தேன்போலே தித்திக்கும் இம்மூன்று கத்யங்களுக்கும் அமைந்திருக்கும் இவ்விரு வியாக்கியானங்களும் பருகப் பருகத்தெவிட்டாத ஆராவமுதமாய்த் திகழ்கின்றன. ச்ருதப்ரகாசிகாசாரியர் ஒவ்வொரு பதங்களையெடுத்துக்கொண்டு அதிஸங்க்ரஹமாகவும், அதிமதுரமாகவும் வியாக்கியானம் செய்திருக்குமழகு வாசாமகோசரம். பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை தமக்கே உரித்தான ஸூத்ரம் போன்ற வாக்யங்களைக்கொண்டு, கத்யத்தின் ஒரு பதத்தையும் விடாமல் மிகவழகாக விவரித்திருப்பதைக் காணுந்தோறும் நெஞ்சம் குழையாநிற்கிறது. ஒவ்வொரு பதத்தின் வியாக்கியானத்தையும் ஸேவிக்கும்போதெல்லாம், ‘இவரல்லவோ வ்யாக்யாத்ரு ஸார்வபௌமர்; இவரல்லவோ பரமரஸிகர்; இவரல்லவோ அபாரகருணாஸாகரர்; எம்பெருமானாரின் திருவுள்ளத்தையறிந்தவர் இவரல்லது வேறொருவருமில்லை’ என்றெல்லாமெண்ணி நெஞ்சம் ஆநந்தக்கடலில் திளைக்கிறது.

இப்படிப்பட்ட ஆராவமுதன்ன வியாக்கியானங்களிலே தோஷங்கூறவும், அவற்றைப் பழித்துக் கடுஞ்சொற்களைப் பொழியவும் முற்பட்டார் நாம் மேலே எடுத்த கத்யபாஷ்ய மொழிபெயர்ப்புப் பண்டிதர். அவரெழுதியுள்ள விஷயங்களுக்கு மட்டும் விடைகூறுவது நம்கடமையாகிறது. நிஷ்பக்ஷபாதிகளான மஹான்கள் நடுநிலைமையிலிருந்து ஆராயவேண்டும். “ச்ருதப்ரகாசிகாசாரியர் வாத்ஸல்ய ஸப்தத்திற்கு ‘தோஷேஷு குணத்வபுத்தி:’ என்று அர்த்தம் சொல்லியிருப்பது ப்ரமாணம் யுக்தி முதலியவைகளுக்குப் பொருந்தாது” என்பது ஒரு தூஷணம். பொருந்துப்படியைக் காட்டுவோம். ‘வாத்ஸல்யம்’ என்னும் பதத்திற்கு ‘வத்ஸம்’ எனப்படும் கன்றினிடத்திலேயுள்ள தோஷத்தையும் போக்யமாகக்கொண்டு நக்கிக்கொடுக்கும் தாய்ப்பசுவின் அன்பு என்பது பொருள். “அற்றமுரைக்கில் அடைந்தவர் பால் அம்புயைகோன் குற்றமுணர்ந்திகழும் கொள்கையனோ?—எற்றேதன்,—கன்றினுடம்பில் வழுவன்றோ காதலிப்பது, அன்றதனை ஈன்றுகந்த ஆ” என்று எம்பெருமானாருடைய சிஷ்யரான அருளாளப்பெருமாள் எம்பெருமானார் அருளிச்செய்தார். “பொய் கலவாது என் மெய் கலந்தானே” என்று நம்மாழ்வார் தம்முடைய அழுக்குடம்பிலே எம்பெருமான் போக்யபுத்திபண்ணியிருந்ததைக் கண்டு ஆழங்காற் பட்டார். “குன்றனைய குற்றஞ் செயினும் குணங்

கொள்ளும்" "செய்தகுற்றம் நற்றமாகவே கொள் ஞால நாதனே" என்றார்கள் ஆழ்வார்கள். இவையெல்லாம் ப்ரமாணமல்லவோ? எம்பெருமான் தோஷபோக்யனாகில் நாம் தோஷங்களையே செய்ய வேண்டிவருமாகையால் இது யுக்தியுக்தமன்றே என்னில்: அடியாருடைய தோஷங்களையும் குணமாகக்கொள்ளும் வாத்ஸல்யம் ஸர்வேச்வரனுக்கு ஆழ்வார்களைப் போன்ற சில வ்யக்திவிசேஷங்களிலேயே ஏற்படுமாகையாலும், வாத்ஸல்யத்திற்கு லக்ஷ்யம் எவனென்பதை ஸர்வேச்வரனேயறிவானாகையாலும் இவ்வதிப்ரஸங்கம் வாராது.

பெரியவாச்சான்பிள்ளை சரணாகதி கத்யவ்யாக்யாந ஆரம்பத்தில் "ஸ்ரீபாஷ்யத்தில் குத்ருஷ்டிகளை நிரஸிப்பதற்காக பக்தியே மோக்ஷ ஸாதநமென்று தாம் அருளியிருப்பதைக்கண்டு தமர்கள் அதுவே தம் ஸித்தாந்தமென்று நினைக்கக்கூடாதென்று தாமறுதியிட்டுள்ள அர்த்தம் ப்ரபத்தியென்று இக் கத்யரூபேண வெளியிடுகிறார்" என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளியிருக்கிறார். இந்த ஸ்ரீஸூக்திகளையெடுத்து,—"இதனால் ஸ்ரீபாஷ்யகாரருக்கு விப்ரலம்பகத்வம் உண்டென்றதாகிறது" என்றும், "ஸ்ரீபாஷ்யத்தில் ப்ரபத்தி சொல்லப்படவில்லையென்பது ஸ்ரீபாஷ்யத்தில் பரிசயமில்லாததைக் காரணமாகக்கொண்டது" என்றும், "ஸ்ரீபாஷ்யத்தில் பக்திமாத்திரமும், ஸ்ரீகத்யத்ரயத்தில் ப்ரபத்திமாத்திரமும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறதென்று சொல்லுவது அவிசாரித ரமணீயம்" என்றும் வாய்க்குவந்தபடியெல்லாம் கடுக்திகளைப் பொழிகிறார் நம் பண்டிதர். ஸ்ரீவைகுண்டகத்ய வ்யாக்யாந ப்ரவேசத்தில் பெரியவாச்சான்பிள்ளை "ஸ்ரீபாஷ்யத்தில்.....பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக.......கர்ம ஜ்ஞாந ஸஹக்ருதையான பக்தியே உபாயம் என்று சொல்லுகிற இதுவே பொருளென்று ஸாதிக்கவேண்டுகையாலே, ப்ரபத்தியும் உள்ளே ஸூசிதமாய்க் கிடக்கச் செய்தேயும், பக்தியிலே நோக்காக உபபாதித்தருளினர்" என்று அருளியிருப்பதை அநுஸந்திப்பவர்களுக்கு மேலேயெடுத்த அநுவாதாநர்ஹமான கடுஞ்சொற்கள் மிகவும் அநாவச்யகமானவையென்பதும், அஸ்தாநேயென்பதும், பாகவதாபசாரபரமாவதியில் நிற்பவையென்பதும் புலனாகும். இந்த தூஷண ஸம்ப்ரமத்திற்கு உண்மைக் காரணம் தேசிகஸ்ரீஸூக்தியொன்றின் பொருளுணரப்பெறாமையே என்பதைச் சிறிது விளக்குவோம். "ஆர்த்தோபச்சந்தநம் கத்யம் பாஷ்யந்து பரரஞ்ஜநம்। இத்யாவில

தியோऽப்யேவம் ப்ரஸீதந்து ப்ரமாணத: ||" ['ஆர்த்தர்களை உகப்பிப்பது கத்யம்; பாஷ்யம் பிறரை ரஞ்சிப்பிப்பது' என்று கலங்கிய புத்தியை உடையவர்களும் இம்மாதிரியாக ப்ரமாணத்தைக் கொண்டு தெளிவார்களாக] என்பது ஸ்ரீதேசிகருடைய கத்யபாஷ்யத்திலேயுள்ளதொரு ச்லோகம். இந்த ச்லோகத்திலுள்ள பாஷ்ய ஶப்தத்தை ஸ்ரீபாஷ்யபரமாகக் கொண்டு இந்த ச்லோகம் பெரியவாச்சான்பிள்ளையை தூஷிப்பதற்காகத் தோன்றியது என்னும் நினைவினாலேயே மேலே எடுத்த கடுஞ்சொற்களைப் பொழிந்துள்ளார் பண்டிதர் என்பது தெளிவு. உண்மையில் இந்த ச்லோகத்தில் பாஷ்யபதம் கீதாபாஷ்யத்தையே குறிக்குமென்பதையும், இந்த ச்லோகம் பெரியவாச்சான்பிள்ளையை நோக்கி அவதரித்ததன்றென்பதையும் மத்யஸ்தர்கள் உகக்கும் படி இனி நிரூபிப்போம்.

"பாஷ்யம் து பரரஞ்சநம் இத்யாவிலதிய:" [பாஷ்யமோவென்னில்: பிறரை உகப்பிப்பதற்காக ஏற்பட்டது என்று கலங்கிய புத்தியை உடையவர்கள்] என்பது தேசிகஸூக்தி. பெரியவாச்சான்பிள்ளையோவெனில் பாஷ்யம் குத்ருஷ்டிகளை நிரஸிப்பது என்றே பலகால் பேசியுள்ளார். இதிலிருந்தே தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியை நோக்கி இங்கெழுதவில்லை என்று விளங்கும். மேலும் "ஆர்த்தோபச்சந்தநம்" என்னும் இந்த ச்லோகத்திற்கு முன்னால், **"न च प्रपत्तिस्वातन्त्र्ये भाष्यविरोधः। तथा हि....उपासनस्येव प्रपदनस्यापि सर्वाभिमतसाधनत्वावगतेः तत्र चरमश्लोकविधेयं प्रकृतोपायविरोधिपापनिवर्तन - रूपोदाहरणविशेषे प्रदर्शयामास। इह तु साध्यान्तरसाधनान्तररहितमन्त्रविवरण प्रवृत्तत्वात् प्राप्तिविरोधिनिरसनार्थतयोदाहरति"** [ப்ரபத்தியானது, ஸ்வதந்த்ரமான மோக்ஷோபாயம் என்பதில் (கீதா) பாஷ்யவிரோதமில்லை. அதாவது:—உபாஸனத்தைப்போலே ப்ரபத்தியும் எல்லாப் பலன்களுக்கும் ஸாதநமாயிருப்பதென்று (ப்ரமாணங்களிலிருந்து) அறியப்படுவதால் அந்த கீதாபாஷ்யத்தில் சரமச்லோகத்தில் விதிக்கப்படும் ப்ரபத்தியைக் கீழ்ச்சொல்லப்பட்ட பக்தியோக விரோதி பாப நிவர்த்தனமாகிற ஒரு உதாஹரணத்திலே காட்டினார். இங்கு கத்யத்திலோவென்னில், மற்ற ப்ராப்யப்ராபகங்களற்ற த்வயமந்த்ரத்தை விவரிக்க ஆரம்பித்ததால் மோக்ஷப்ராப்தி விரோதி நிரஸனத்திற்காக எடுத்துக்காட்டுகிறார்] என்னும் பங்க்திகள் உள்ளன. இங்கு 'பாஷ்ய' ஶப்தத்தினால் கீதாபாஷ்யத்தையே குறித்திருப்பதை அநுஸரித்து, அடுத்துள்ள "பாஷ்யந்து பாரஞ்சநம்" என்னும் ச்லோகத்திலுள்ள பாஷ்யஶப்தமும் கீதாபாஷ்யத்தையே குறிக்கிறதென்று நன்குணரலாம். ஸ்ரீபாஷ்யத்தைப்பற்றி இந்த ப்ரகரணத்தில் பேச்சேயில்லை.

இனி, "ஆர்த்தோபச்சந்தநம்" என்னும் ச்லோகம் எதற்காக அவதரித்தது என்பதை உரைப்போம். எம்பெருமானர் கீதாசரம ச்லோகபாஷ்யத்தில் ப்ரபத்தியானது பக்தியோகத்திற்கு அங்கமாயிருப்பது என்னும் ஒரு நிர்வாஹத்தை அருளியிருக்கிறார். கத்யத்திலோவென்னில் அதை ஸ்வதந்த்ரஸாதனமென்றே நிர்வஹித்தருளியிருக்கிறார். இதைக் கண்ணுற்ற சிலர் "காலவிளம்பம் பொறாத ஆர்த்தர்களை த்ருப்திசெய்வதற்காக ஏற்பட்டது கத்யம்; கீதாபாஷ்யமே பாஷ்யகாரஸித்தாந்தம்" என்றும், மற்றும் சிலர் "கீதாபாஷ்யம் காலவிளம்பத்தைப் பொறுக்கக்கூடிய பக்தியோகநிஷ்டர்களை ரஞ்ஜிப்பிப்பதற்காக ஏற்பட்டது. கத்யமே பாஷ்யகாரஸித்தாந்தம்" என்றும் சொல்லியிருக்கிறார்கள். இதைக் கண்டிப்பதற்காகவே "ஆர்த்தோபச்சந்தநம்" என்னும் ச்லோகத்தை இட்டிருக்கிறார் தேசிகன். ஆர்த்தர்களை ஏமாற்றுவதற்கு கத்யமருளினரென்றோ, பிறரை ரஞ்சிப்பிப்பதற்காக பாஷ்யகாரர் கீதாபாஷ்யத்தில் அங்கப்ரபத்தி நிர்வாஹத்தை அருளினர் என்றோ சொல்லவேண்டுயதில்லை; ப்ரபத்தி ஸர்வபல ஸாதநமாயிருப்பது என்பதை ஒவ்வொரு உதாஹரண விசேஷத்தாலே காட்டுவதற்காக அந்தந்த நிர்வாஹத்தை அருளியிருக்கிறார் என்றே கொள்ளலாம் என்று தேசிகன் திருவுள்ளம். ஆர்த்தசப்தத்தால் விளம்பாக்ஷமரான ப்ரபன்னர்களையும், பரசப்தத்தால் ஆர்த்தவ்யதிரிக்தராய் விளம்பக்ஷமரான ஸாதநாந்தரநிஷ்டர்களையும் குறிப்பிடுகிறார் என்பது திண்ணம். பெரியவாச்சான்பிள்ளை கருதிய புறச்சமயிகளை இங்கு பரசப்தத்தால் குறித்தார் என்று நினைக்க இடமேயில்லை. 'ரஞ்ஜநம்' என்னும் வார்த்தை புறச்சமயிகளைக் கொண்டால் ஒட்டவே ஒட்டாது. ஆக, இவ்வளவால் பெரியவாச்சான்பிள்ளையை தூஷிப்பதற்காக தேசிகன் "ஆர்த்தோபச்சந்தநம்" என்னும் சுலோகத்தை இயற்றவில்லை என்று ப்ரகரணம், யுக்தி முதலானவற்றைக் கொண்டு நிரூபிக்கப்பட்டது இவ்வளவுக்கும் மேலே, அஹோபில மடத்தின் இரண்டாவது பட்டத்தையலங்கரித்த ஸ்ரீமந் நாராயண ஸ்வாமி புருஷகாரமீமாம்ஸையில் அருளியிருக்கும் பின்வரும் சுலோகங்களிலிருந்தும் இது தெளிவாகிறது:—

"ப்ராதாந்யாங்கத்வபரயோர் கத்யகீதாந்தபாஷ்யயோ: ।
த்வயோரந்யதரத் பாத்யம் விரோதோ ஹி ஸ்புடஸ் தத: ॥
ஆர்த்தோபச்சந்தநம் கத்யம் கேசிதாஹுர் விபஶ்சித: ।
கீதாந்தபாஷ்யமந்யே து வதந்தி பரரஞ்ஜநம் ॥
தாத்பர்யார்த்தாவிரோதேந நாத்ரைகேநாந்யபாதநம் ।

ப்ரமாணதார்ட்யாதத்ரைவம் கத்யபாஷ்யோக்தஸங்க்ரஹ: ||
ஆர்த்தோபச்சந்தநம் கத்யம் பாஷ்யந்து பரரஞ்ஜநம் ।
இத்யாவிலதியோऽப்யேவம் ப்ரஸீதேயு: ப்ரமாணத: ||

[(ப்ரபத்தி) ப்ரதாநோபாயமென்றும், அங்கமென்றும் (முறையே) சொல்லும் கத்யம், கீதாசரமச்லோகபாஷ்யம் என்னும் இரண்டினுள் ஒன்றைத் தள்ளியேயாகவேண்டும்; (அவைகளுக்குள்) விரோதம் ஸ்பஷ்டமாக உள்ளதன்றோ; இக்காரணத்தால் ஆர்த்தர்களை த்ருப்தி செய்வதற்காக வந்த கத்யத்தையே தள்ளவேண்டுமென்று சில வித்வான்கள் சொன்னார்கள். மற்றும் சிலர் ஸாதநாந்தரநிஷ்டர்களை ரஞ்ஜிப்பிப்பதற்காக ஏற்பட்ட கீதாபாஷ்யத்தையே தள்ளவேண்டு மென்று சொன்னார்கள். (நாம் சொல்லுவது யாதெனில்) இரண்டுக்கும் தாபத்ர்யார்த்தத்தில் விரோதமில்லையாகையால் ஒன்றைக் கொண்டு ஒன்றைத் தள்ளவேண்டாம். (ப்ரபத்தி ஸர்வபலஸாதன மென்பதில்) ப்ரமாணம் த்ருடமாயுள்ளதாகையாலே" என்று இம் மாதிரியாக கத்யபாஷ்யத்திலே "ஆர்த்தோபச்சந்தநம்" என்னும் ச்லோகத்திலே ஸங்க்ரஹிக்கப்பட்டது.] என்பவை புருஷகார மீமாம்ஸா ஸ்ரீஸூக்திகள். இவைகளிலிருந்து தேசிகன் க்ருஷ்ண ஸூரியின் கத்யவ்யாக்யானஸூக்திகளைக் கண்டிப்பதற்காக "ஆர்த்தோபச்சந்தநம்" என்னும் ச்லோகத்தை இயற்றவில்லையென்பது, கையிலங்கு நெல்லிக்கனியாகவும், வெள்ளிடைமலையாகவும் விளங்குகிறது.

"தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்" என்கிற ச்லோக அவதாரிகையில், "கீழ் சரணம் புக்கவதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறார்" என்று தொடங்கிப் பெரியவாச்சான்பிள்ளை 'வ்யாக்யாநம் செய்திருப்பது ஸாஹஸம்' என்றெழுதுகிறார். அப்படியாகில், "எனதாவி தந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே" என்று ஆத்மஸமர்ப்பணம் செய்த நம்மாழ்வார், அடுத்த அடியில் "எனதாவியாவியும் நீ பொழிலேழுமுண்ட எந்தாய் எனதாவி யார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே" என்று அதற்கு அநுசயித்திருப்பதும், "அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:" என்ற ஆளவந்தார், அடுத்த ச்லோகத்தில் "அதவா கிந்நு ஸமர்ப்பயாமி தே" என்றனுஸந்தித்திருப்பதும், "இதுக்குமேல் மம நாத யதஸ்தி என்கிற ச்லோகத்திலே இஸ்ஸமர்ப்பணத்தைப்பற்ற அநுசயம் பண்ணிற்றும்" என்று ரஹஸ்யத்ரயஸாரம் ஸாங்கப்ரபதநாதிகாரத்தில் தேசிகன் அருளியிருப்பதும் ஸாஹஸமாகவேண்டிவரும். "கதாऽஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித:" என்று கைங்கர்யப்ரார்த்

தனை செய்த ஆளவந்தார் அடுத்த ச்லோகத்தில் "திகஶுசி மவிநீதம்" என்று தாம் செய்த இச்செய்கைக்குத் தம்மையே நிந்தித்துக் கொண்டார். ஸ்ரீதேசிகனும் ஶரணாகதிகத்யமென்னும் தீபப்ரகாஶ ஸ்தோத்ரத்திலே "இத்தம் த்வதேகஶரணே ரநகைரவாப்யே த்வத்கிங் கரத்வ விபவே ஸ்ப்ருஹயாऽபராத்யந்" என்று பகவத் கைங்கர்யத்தை ஆசைப்படுவது மஹாபராதம் என்றருளிச்செய்கிறார். இவையெல்லாம் ரஸிகக்ருத்யமன்றோ. அப்படியே ஸம்ஸாரபயத்தால் ஆத்மாவை ஸமர்ப்பிக்கையும், ஸ்வரூபத்தை அநுஸந்தித்தவுடன் அதற்கு அநுஶயிக்கையும் ரஸிகக்ருத்யமேயாகும். இவற்றிலே குற்றம் காண்பார் அரஸிகர்களேயாவர். "அரஸிகேஷு கவித்வ நிவேதநம் ஶிரஸி மாலிக மாலிக மாலிக" என்றது நினைவுக்குவருகிறது.

கடைசியாக, "'ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்' என்கிற விடத்து வ்யாக்யாநத்தில் ஸ்ரீபாஷ்யகாரருடைய கீதாபாஷ்ய வ்யாக்யாநக்ரமத்தை அநாதரித்து ஶங்கரகீதாபாஷ்யத்தில் உள்ளபடி 'ப்ரிய: ப்ரியாயா:' என்று பதம் பிரித்து 'ஸந்திரார்ஷ:' என்று வ்யாக்யாநம் செய்திருக்கிறார் ஆச்சான்பிள்ளை" என்னும் தூஷணம். 'அர்த்த ஸ்வாரஸ்யமுண்டாமிடத்தில் சிறிது ஶப்தாஸ்வாரஸ்யத்தையும் ஸஹிக்கலாம்' என்னும் மீமாம்ஸாந்யாயத்தை அநுஸரித்தே ஆச்சான்பிள்ளை இப்படி வ்யாக்யானமருளினர். இங்கு அர்த்தஸ்வாரஸ்யமென்னென்னில்:–இதற்கு முன்னுள்ள ச்லோகங்களில் "பிதரம் மாதரம் தாராந்" என்றும், "த்வமேவ மாதா ச பிதா த்வமேவ" என்றும், "பிதாऽஸி லோகஸ்ய" என்றும் ஸகலவிதமான பந்துவும் நாராயணனே என்று சொல்லுகையாலே, "தஸ்மாத் ப்ரணம்ய" என்னும், அடுத்த ச்லோகத்திலும் பித்ருபுத்ர, மித்ரஸம்பந்தத்துடன், பதிபத்நீஸம்பந்தத்தையும் அநுஸந்திப்பது ஸ்வரஸமாயிருக்கும். நாயக நாயகீ பாவத்திலேயே ஊன்றிநிற்கும் ஆழ்வார்கள் வழிவந்த எம்பெருமானார் திருவுள்ளத்திற்கும் பொருந்தியிருக்கும். ஆகையால் அப்படி வ்யாக்யாநம் செய்யப்பட்டது. மேலே சொன்ன ப்ரகரணஸ்வாரஸ்யம் கீதையிலில்லையாகையாலும், 'ஹே க்ருஷ்ண ஹே யாதவ' என்னும் அர்ஜுநன் நாயகநாயகீபாவமுடையனல்லனாகையாலும் எம்பெருமானார் வேறு விதமாக பாஷ்யமிட்டார். ஆகையால் விரோதமில்லை. நிற்க; இக்கத்யத்ரய தத்வ்யாக்யாநங்களை ஸேவித்து எம்பெருமானார் க்ருபைக்கு விஷயமாகும்படி ஸ்ரீவைஷ்ணவஸமூஹத்தை ப்ரார்த்திக்கிறேன்.

விஜய ஸூ இங்ஙனம்,

சித்திரையில் செய்யதிருவாதிரைநாள். கி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# ஶரணாகதிகத்ய வ்யாக்யாநம்.

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதரஸ்ஸதா ॥

ப்ரவேசம்

ஸ்ரீபாஷ்யத்தில் 1. "तत्त्वमसि" (தத்த்வமஸி) இத்யாதிவாக்யஜந்ய ஜ்ஞாநமே மோக்ஷஸாதநமென்றும், கர்மஜ்ஞாநஸமுச்சயமே மோக்ஷ ஸாதநமென்றும் சொல்லுகிற குத்ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக, கர்மாங்ககமாய், வேதநத்யாநோபாஸநாதிஶப்தவாச்யமாய், பக்தி ரூபாபந்நமான உபாஸநாத்மகஜ்ஞானமே வேதாந்தப்ரதிபாத்யமான மோக்ஷஸாதனமென்று இவர் நிச்சயித்து அருளிச்செய்கையாலே இவர் மோக்ஷஸாதநமாக அறுதியிட்ட அர்த்தம் இதுவேயென்று கொண்டு தம்முடைய ருசிபரிக்ருஹீதமான அர்த்தத்தையே விச்வ ஸித்திருக்கும் ஸாத்விகர் இத்தையே விச்வஸித்திருக்கக்கூடுமென்று பார்த்தருளி, ஆசார்யருசிபரிக்ருஹீதமுமாய், தமக்குத் தஞ்சமாகத் தாம் அறுதியிட்டிருக்கும் அர்த்தம் ப்ரபத்தியென்னுமிடத்தை இக்கத்யரூபேண வெளியிட்டருளுகிறார். ஆனால், இப்ரபத்திதன்னையே கொண்டு குத்ருஷ்டி நிரஸனம் பண்ணாதொழிவானென்னென்னில்: ப்ராஹ்மணன் சண்டாளனுக்கு வேதத்தை உபதேசித்தாப்போலே தூரஸ்தரானவர்களுக்குப் பரமரஹஸ்யமான இவ்வர்த்தத்தை வெளி யிடவொண்ணாதென்று பார்த்து, அவர்களிஷ்டிந்த சாஸ்த்ரமுகத்தா லேயே அவர்களை நிரஸித்து, ஶாஸ்த்ரதாத்பர்யமான ஸ்வஸித்தாந் தத்தை இம்முகத்தாலே வெளியிடுகிறார்.

வேதாந்தங்களிலே மஹாபத (पथ) மாகச்சொல்லுகிற பக்தியைக் காட்டில் இப்ரபத்திக்கு ஏற்றமென்னென்னில்: அது அதிக்ருதாதி காரமுமாய், துஷ்கரமுமாய், விளம்ப பலப்ரதமுமாய், ப்ரமாதஸம் பாவனையுள்ளதுமாய், ஸாத்யமுமாய், ஸ்வரூபாநநுரூபமுமாய், ப்ராப் யத்துக்கு விஸத்ருஶமுமாயிருக்கும். இதுவோவென்றால், அதுக்கு

எதிர்த்தட்டாம்படி ஸர்வாதிகாரமுமாய் ஸுகரமுமாய், அவிளம்ப்ய பலப்ரதமுமாய், ப்ரமாதஸம்பாவனையுமின்றிக்கே, ஸித்தமுமாய், ஸ்வரூபாநுரூபமுமாய், ப்ராப்யத்துக்கு ஸத்ருஶமுமாயிருக்கும்.

ஆனால் இவ்வுபாயம் வேதாந்தஸித்தமோ அன்றோ என்னில்: யாஜ்ஞிகியமான உபநிஷத்திலே 2. "**सत्यं तपो दमः शमो दानं धर्मः प्रजननमग्नयोऽग्निहोत्रं यज्ञो मानसं**" (ஸத்யம் தபோ தம: ஶமோ தாநம் தர்ம: ப்ரஜநநமக்நயோऽக்நிஹோத்ரம் யஜ்ஞோ மாநஸம்) என்று ஒன்றுக்கொன்று உத்க்ருஷ்டமாகச் சொல்லிப்போந்து எல்லாவற்றுக்கும் மேலாக 3. "**तस्मान्न्यासमेषां तपसामतिरिक्तमाहुः**" (தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) என்று, "தபஸ்ஸுக்களில் வைத்துக்கொண்டு அதிரிக்தமான தபஸ்ஸு ப்ரபத்தி" என்று இதினுடைய உத்கர்ஷம் சொல்லிற்று. அதுக்குமேலே 4. "**धर्मज्ञसमयः प्रमाणं वेदाश्च**" (தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச) என்று ப்ரபலப்ரமாணமான ஆசார்ய ருசிபரிக்ருஹீதத்வமாகிறஏற்றமும் இதுக்குண்டு. "வேதாஶ்ச" என்று வேதமும் அப்ரதாநப்ரமாணமாம்படியிறே வைதிகபரிக்ருஹீதத்வத்தின் ப்ராமாண்யாதிஶயம் இருப்பது. அளவுடையாராயிருப்பார்க்கு இதுவே போருமாயிற்று ப்ராமாண்யத்துக்கு. இதுதான் அளவில்லாதார்க்கு வேதாந்த ஸித்தமுமாயிருக்கும்.

ஆக, இப்படி வேதாந்த ஸித்தமுமாய், ஸ்வரூபப்ராப்தமுமாய், ஆசார்யருசி பரிக்ருஹீதமுமாய், ஶரண்யஹ்ருதயாநுஸாரியுமாயிருக்கையாலே அதிலும் இதுவே அநுஷ்டேயமென்னுமிடத்தைத் தம்மை விச்வஸித்திருக்கும் ஸாத்விகர் இழக்கவொண்ணாதென்று பார்த்து, தாமும் பெரியபெருமாளும் அறிந்ததாக அநுஸந்தித்துவிட அமைந்திருக்க, தம்முடைய பரமக்ருபையாலே கத்யமுகேந வெளியிடுகிறார்.

இதுதான் அவதரித்தபடி எங்ஙனேயென்னில்: ஒரு திருவுத்திரத்திருநாளிலே, பெருமாளும் நாய்ச்சியாருமாகப்புறப்பட்டு ஏறியருளாநிற்குமளவிலே எம்பெருமானார் எழுந்தருளித் திருவடி தொழாநின்றார். அஸ்யாமவஸ்தாயாம், திருவுள்ளத்திலே ஸம்ஸாரபீதி நடையாட, திருவடிகளிலே விழுந்து ஶரணம் புக்கவதுக்குப் பாசுரமிட்டபடி. முதலிலே ஸம்ஸாரபயபீதராய்க் கொண்டு பெரியநம்பி

ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தபோதே பெரியபெருமாள் திருவடிகளிலே ப⁴ரணம்புக்கிலரோ? 5. "सकृदेव" (ஸக்ருதேவ) என்றன்றோ ஶரண்ய ஹ்ருதயமிருப்பது. ஆனபின்பு, 6. ""तत्तस्य सदृशं भवेत्" (தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்) என்றும், † "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்" என்றும், ‡ "களைவாய் துன்பம் களையாதொழி வாய் களைகண் மற்றிலேன்" என்றும் சொல்லுகிறபடியே 'உடைய வன் உடைமையைச் செய்தபடி செய்கிறான்' என்று ஆறியிருக்க ப்ராப்தமாயிருக்கத் திரியட்டும் இப்போது சரணம்புகவேண்டுவா னென்னென்னில்: அவ்வளவு ஆறியிருக்கமாட்டாத தம் ப்ராப்ய த்வரையாலே ஶரணம் புகுகிறார். இதிறே ஆழ்வார்களுக்கும் ரீதி. அவர்களை அடியொற்றுகிற ஆசார்யர்களுக்கும் அதுவே ரீதியாமத் தனையன்றோ. ஸம்ஸாரபயமும் ப்ராப்யருசியும் கனக்கக் கனக்க, ஒருகால் ஶரணம் புக்காப்போலே ஒன்பதின்கால் ஶரணம்புகுமித்த னையிறே அவர்கள். ஆக, ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வமாகக் கைங்கர்ய ஸித்திக்குப்பெரியபெருமாள் திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

ப்ரவேசம் முற்றிற்று.

முதல் சூர்ணை அவதாரிகை:—இதுதான் த்வயத்துக்கு வ்யாக் யானமாயிருக்கிறது. இதில் முதல் சூர்ணையிலே ஶரணம் புகு வார்க்கு ஶரணம்புக யோக்யதையுள்ளது கண்ணழிவற்ற உபேய ருசியும் உபாயாத்யவஸாயமும் உண்டானாலாகையாலே தத்ஸித்த்யர்த் தமாகப் பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறார். அதுவென்? 7. "सकलफलप्रदो हि विष्णुः" (ஸகலபலப்ரதோ ஹி விஷ்ணு:) என்று ஸர்வாபேக்ஷைகளுக்கும் பலப்ரதன் அவனன்றோ? ஆனபின்பு, அந்த யோக்யதாஸித்திக்குமாக அவன் திருவடிகளிலே ஶரணம் புகத் தட்டென்? என்னில்: 8. "सुहृदं सर्वभूतानां" (ஸுஹ்ருதம் ஸர்வ பூதாநாம்) என்கிறபடியே, ஸர்வபூத ஸுஹ்ருத்தாயிருக்கிற ஈச்வர னையும் நீரிலே நெருப்புகிளருமாப்போலே 9. "क्षिपामि" (க்ஷிபாமி), 10. "न क्षमामि" (ந க்ஷமாமி) என்ன அபராதங்களைப் பண்ணிப் போந்த நாம் நேர்கொடு நேரே நின்று ஶரணம் புக்கால், பூர்வவ்ருத் தத்துக்கு ஸ்மாரகமாவுதோமென்று தம்மையஞ்சி, தம் திறத்தில் ஈச்வரனுக்குண்டான சீற்றத்தை ஆற்றுமவளுமாய், ஸ்த்ரீத்வப்ர

† திருவாய் (5-8-3). ‡ திருவாய் (5-8-8).

॥ श्रीः ॥

॥ श्रीमते रामानुजाय नमः ॥

श्रीभगवद्रामानुजमुनिभिरनुगृहीते गद्यत्रये

## ॥ शरणागतिगद्यम् ॥

योनित्यमच्युतपदाम्बुजयुग्मरुक्मव्यामोहतस्तदितराणि तृणाय मेने।
अस्मद्गुरोर्भगवतोऽस्य दयैकसिन्धोः रामानुजस्य चरणौ शरणं प्रपद्ये॥
वन्दे वेदान्तकर्पूरचामीकरकरण्डकम्। रामानुजार्यमार्याणां चूडामणिमहर्निशम्॥

१. भगवन्नारायणाभिमतानुरूप-

1. பகவந்நாராயணாபிமதாநுரூப

॥ श्रीः ॥

श्रीमत्सुदर्शनभट्टार्यप्रणीत श्रुतप्रकाशिकाभिधानं

## ॥ शरणागतिगद्यव्याख्यानम् ॥

यतीन्द्रकृतभाष्यार्था यद्व्याख्यानेन दर्शिताः। वरं सुदर्शनार्यं तं वन्दे कूरकुलाधिपम्॥
वरदं द्विरदाद्रीशं श्रीनिधिं करुणानिधिम्। शरण्यं शरणं यामि प्रणतार्तिहरं हरिम्॥

उपायोपेयपरं द्वयं विशदीक्रियते। तत्र प्रतापोष्मलपितृत्वदुरासदभगवत्समाश्रयणं श्रीमच्छब्दविवरणमुखेनाभिधीयते॥

यद्वा श्रियं प्रपद्य तत्सन्निधौ मूलमन्त्रेण स्वरूपानुरूपपुरुषार्थप्रार्थनं तदुपायप्रार्थनापर्यन्तं कृत्वा, तदनुज्ञया द्वयमनुसन्धीयत इति पूर्वाचार्यानुसन्धानमनुस्मरन् प्रथमं श्रियं प्रपद्यते भगवदिति। भगवन्नारायणशब्दौ गुणविभूतिपौष्कल्यपरौ *द्विषट्काष्टार्णयोरपि तत्साहित्यज्ञानपरौ च। अनुरूपेऽनभिमतिरननुरूपे चाभिमतिश्च दृश्यत इति तद्व्युदासाय अभिमतानुरूपशब्दौ।

யுக்தமான மார்த்தவத்தை உடையளுமாய், மாத்ருத்வப்ரயுக்தமான குடல்துடக்கை உடையளுமாய், இவர்கள் சொல்லும் வார்த்தையைச் செவி தாழ்த்துக் கேட்குமவளுமாய், அவனைத் தன் போக்யதையாலே துவக்கிக் கேட்பிக்குமவளுமாய், அதுக்குமேலே ஸ்தநந்தயப்ரஜைக் குத்தாய்கீழே ஒதுங்குகை ப்ராப்தமானவோபாதி ஸ்வரூபப்ராப்தையுமாயிருக்கையாலே, பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறார். நெடுங்காலம் விஷயப்ரவணனாய்ப்போந்த ப்ரஜை, நிவ்ருத்தனானவன்று, பிதாவின்பக்கல் நேர்முகம் பார்த்துச் சொல்லுகை அரிதாய், மாதாவின் பக்கல் சொல்லுகை எளிதாயிருக்குமிறே. ப்ரதமத்தில் ஆச்ரயிக்

* द्विषट्कः—द्वादशाक्षरः तदवयवभूतभगवच्छब्दद्योतितः। अष्टार्णः—अष्टाक्षरः नारायणशब्दद्योतितः। तत्साहित्यं—लक्ष्मीसाहित्यमित्यर्थः॥

கைக்குங்கூட இருய்த்தஇவர்,இவளை ஆஶ்ரயித்தவனந்தரம்,பண்ணின அபராதங்களை "க்ஷமஸ்வ" என்றுரிறே அந்த:புரபரிகரமாகையாலே.

வ்யா:—(பகவந்நாராயண) பகவச்சப்தத்தாலே, 11 "विना हेयैर्गुणादिभिः" (விநா ஹேயைர் குணாதிபி:) என்கிறபடியே ஹேயஸம்பந்த ரஹித பூர்ணஷாட்குண்யத்தைச் சொல்லுகிறது. 11 "ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजांस्यशेषतः। भगवच्छब्दवाच्यानि विना हेयैर्गुणादिभिः॥" (ஜ்ஞாநஶக்திபலைச்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷத:। பகவச்சப்தவாச்யாநி விநா ஹேயைர் குணாதிபி:॥) என்னக்கடவதிறே. இத்தால் பயிருக்கு நீர்நிலைபோலே ஸர்வாத்மாக்களுக்குங்கூட உஜ்ஜீவநஹேதுவான குணபூர்ணனுமாய், பிறருடைய தோஷம் தட்டாதபடியான ஹேய ராஹித்யத்தையுமுடையவன் என்கிறது. (நாராயண) பகவச்சப்தத்திலே ஸர்வமுமில்லையோ? இனி நாராயணஶப்தாபேக்ஷை உண்டோ? என்னில்: 12 "अन्यत्र ह्युपचारतः" (அந்யத்ர ஹ்யுபசாரத:) என்கிறபடியே பகவச்சப்தத்துக்கும் ப்ரஹ்மஶப்தத்தோபாதி வ்யக்த்யந்தரங்களிலே ஔபசாரிகமாகவாகிலும்ப்ரயோகமுண்டு. அதுவுமின்றியே அநந்யபரமான நாராயணனுவாகவித்தமாய், யோகரூடியாலே நாராயணபதம் ஸர்வேச்வரனுக்கே வாசகமாயிருக்கும்; அத்தாலே விசேஷிக்கிறது. ஆக, "பகவந் நாராயண" என்று, ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், உபயவிபூதிநாதனான ஸர்வேச்வரனைச் சொல்லிற்றாயிற்று.

பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறாராகில், இவ்விடத்தில் இது சொல்லவேண்டுவானென்னென்னில்: ஆற்றுக்கு ஸஹ்யம் போலேயும், விளைநிலத்துக்கு ஏரிக்கட்டுபோலேயும், இவளுடைய கல்யாணகுணங்களுக்கு அடியான கல்யாணகுண யோகத்தையும், இவளுடையவிபூதிக்கு அடியான உபயவிபூதியோகத்தையும் சொல்லுகிறது. அவனைச் சொல்லும்போது 13 "श्रीमान्" (ஶ்ரீமாந்) என்ன வேண்டினவோபாதி இவளைச் சொல்லும்போதும் 14 "विष्णुपत्नी" (விஷ்ணுபத்நீ) என்னவேண்டியிறே இருப்பது. நிரூபகத்தையொழிய நிரூப்யத்துக்கு ஸ்திதியில்லாதவோபாதி, நிரூப்யத்தையொழிய நிரூபகத்துக்கும் ஸ்திதியில்லையே.

(அபிமத) ஏவம்விதனாயிருந்துள்ள இவனுக்கு அபிமதமாயிருக்கை. (அநுரூப) ராஜாக்கள் நீசஸ்த்ரீ காற்கடையிலே துவளுமாப்போலே அபிமதமேயாகிலும் அநநுரூபமாயிருப்பனவுண்டு.

स्वरूपरूपगुणविभवैश्वर्य-
ஸ்வரூபரூபகுணவிபவைஶ்வர்ய

रूपानन्तरगुणशब्दस्सौन्दर्यादिपरः।

அங்ஙனன்றிக்கே, † "உனக்கேற்கும்" என்னுப்படியே அநுரூபமாயிருக்கை. இப்படி அபிமதமாய் அநுரூபமாயிக்கிறவை எவையென்னில்; ஸ்வரூபரூபகுண விபவைச்வர்யஶீலாதிகள். அவனுக்கு இவள் ஸ்வரூபம் அபிமதமாயிருக்கையாவது,—இவள் ஸ்வரூபம் அவன் ஸ்வரூபத்துக்கு தாரகமாயிருக்கை. ராவணன் மாயாஶிரஸ்ஸைக் காட்டினபோதும், இந்த்ரஜித்து மாயாஸீதையைக் காட்டினபோதும், இருவரும் மெய்யென்று ப்ரமிக்கச்செய்தே அந்யோந்யம் தரித்துக் கிடந்தவிடம் ஸ்வரூபஸத்தையாலேயிறே. அவன் ஸ்வரூபம் இவளுக்கு தாரகமாகிறது ஸ்வரூபத:; இவள் ஸ்வரூபம் அவனுக்கு தாரகமாகிறது அபிமதத்வத்தாலே. அநுரூபமாகையாவது,—15 "यथा सर्वगतो विष्णुस्तथैवेयं" (யதா ஸர்வ கதோ விஷ்ணுஸ் ததைவேயம்) என்றும், 16 "त्वया च विष्णुना चाम्ब" (த்வயா ச விஷ்ணுநா சாம்ப) என்றும், 17 "युक्ता रामस्य भवती" (யுக்தா ராமஸ்ய பவதீ) என்றும், 18 "तवैवोचितया" (தவைவோசிதயா) என்றும் சொல்லுகிறபடியே இவளுடைய ஸ்வரூபம் அவனோடொக்கச் சொல்லலாம்படியிருக்கை. (ரூப) ரூபமாவது விக்ரஹம். ஸ்வரூபத்தைச் சொன்னவநந்தரம் ஸ்வரூபகுணங்களைச் சொல்ல ப்ராப்தமாயிருக்க, விக்ரஹத்தைச் சொல்லிற்று, ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாச்ரிதமான குணங்களுக்கும் ப்ரகாஶகமாகையாலே. ஸ்வரூபம் அபிமதமாகாநின்றால் ரூபம் அபிமதமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. அதுதான் § ஸ்வரூபாச்ரிதமென்றிறே அபிமதமாயிற்று. ரூபம் அபிமதமாகையாவது ‡ "அகலகில்லேனிறையும்" என்று அவள் துணுக்குத் துணுக்கென்னும்படியான அவன்தானும் மேல்விழும்படியாயிருக்கை. †† "மெல்லியல் தோள்தோய்ந்தாய்" :: "மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்" என்று அவனுக்கு * உண்ணும் சோறு பருகுநீரும் இவள் வடிவேயாயிறே இருப்பது. இது அநுரூபமாகையாவது,—ஶீலத்தாலும், வயஸ்ஸாலும் வ்ருத்தத்தாலும் துல்யமாயிருக்கை. (குண)

† திருவாய் (10-10-6). § (பா) ஸ்வரூபாச்ரய ‡ திருவாய் (6-10-6).
:: திருவாய் (8-10-1). * திருவாய் (6-7-1).

ரூபாநந்தரபாவித்வத்தாலே இது தான் ஸௌந்தர்யாதிகளாகக் கடவது. இவையும் ரூபத்துக்கு நிறங்கொடுத்து, போகவர்த்தகங்களு மாயிருக்கையாலே அபிமதமாயிருக்கும். அத ஏவ அநுரூபமாயிருக் கும். (விபவ) 19 "**अर्थो विष्णुरियं वाणी**" (அர்த்தோ விஷ்ணுரியம் வாணீ) என்று அர்த்தாம்ஶம் அவனதாய், ஶப்தாம்ஶம் இவளதாயி ருக்கை. 20 "**पुन्नामा भगवान् हरिः स्त्रीनाम्नी लक्ष्मीः**" (புந்நாமா பகவாந் ஹரி: ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீ:) என்னும்படி பும்லிங்கபதார்த்தங் கள் அவனதாய், ஸ்த்ரீலிங்கபதார்த்தங்கள் இவள்தாயிருக்கை. 21 "**सर्वान् भोगान् परित्यज्य**" (ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய) என்று ஸர்வபோகங்களையும் விட்டுக் காடேறப்புறப்பட்டாள் என்கையாலே லீலோபகரணங்களும் போகோபகரணங்களும் அவன் விபூதியிலும் விஞ்சியிருக்கை. அவையாவன,—§ "முற்றிலும் பைங்கிளியும் பந்து மூசலும் பேசுகின்ற சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற செழுங் கோதை" ‡ "பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள்" என்னுமவையும், ஸ்ரக்சந்தநாதிகளும். இவைதான் ஸாமாந்யமா யும், அந்த:புரபரிகரமாயுமிருக்கும். அங்ஙனன்றியே, 22 "**यो यो जगति पुंभावः**" (யோ யோ ஜகதி பும்பாவ:) 23 "**शेषित्वे परमः पुमान्**" (ஶேஷித்வே பரம: புமாந்) என்னும்படியே ஸவிபூதிகனான ஈச்வர னென்றுமாம். இது அவனுக்கு அபிமதமாகிறதும் அந்த:புரபரிகர மாகையாலே. (ஐச்வர்ய) அதாவது,—ஸகலபதார்த்த நியமநஸாமர்த் யம். த்ரிவிதசேதநரையும் ஸ்வரூபேண நியமிக்கும். ஈச்வரனை ப்ரண யித்வத்தாலே நியமிக்கும். நியமிக்கும் ப்ரகாரமென்னென்னில்: பத்தரைக் கர்மாநுகுணமாக நியமிக்கும். நித்யமுக்தரை ஸ்வரூபாநு ரூபமாக நியமிக்கும். ஈச்வரனை ரக்ஷணாநுகுணமாக நியமிக்கும். இதுதான் அபிமதமாகிறதும் புருஷோத்தமத்வஸூசகமாகையாலே. ப்ரணயினியினுடைய நியமனம் ப்ரணயிக்குப் பும்ஸ்த்வாவஹமாயி ருக்குமிறே. இது ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் உபலக்ஷணம். (ஶீல) ஶீலம் ராக்ஷஸிகள் பக்கல் ப்ரஸித்தம். ராவணனைக் குறித்து 24 "**मित्रमौपयिकं कर्तुं**"(மித்ரமௌபயிகம் கர்த்தும்) என்றும், 25"**विदितः स हि धर्मज्ञः**" (விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞ:) என்றும், ராக்ஷஸி களைக் குறித்து, 26 "**भवेयं शरणं हि वः**" (பவேயம் ஶரணம் ஹி வ:)

§ பெரியதிரு (3--7--8). ‡ திருவாய் (6--7-3).

**शीलाद्यनवधिकातिशयासङ्ख्येयकल्याणगुणगणाम्, पद्मवनालयाम्, भगवतीम्, श्रियम्, देवीम्, नित्यानपायिनीम्, निरवद्याम्, देवदेवदिव्यमहिषीम्, अखिलजगन्मातरम्, अस्मन्मातरम्, अशरण्यशरण्याम्, अनन्यशरणः शरणमहं प्रपद्ये॥**

ஶீலாத்யநவதிகாதிஶயாஸங்க்யேயகல்யாணகுணகணாம் பத்மவநாலயாம் பகவதீம் ஶ்ரியம் தேவீம் நித்யாநபாயிநீம் நிரவத்யாம் தேவதேவ திவ்யமஹிஷீம் அகிலஜகந்மாதரமஸ்மந்மாதரமஶரண்யஶரண்யாம் அநந்யஶரண: ஶரணமஹம் ப்ரபத்யே॥

---

**परत्वसौलभ्यकोटिनिविष्टगुणजातप्रदर्शनार्थौ एश्वर्यशीलशब्दौ। अनवधिकेत्यादि स्फुटार्थः। परत्वसौलभ्ययोस्समाख्याः प्रमाणयति पद्मेत्यादिभिश्चतुर्भिः पदैः। सदा अपराधानभिज्ञातायै नित्यानपायिनीमिति पदं। दौर्लभ्यरूपावद्यरहिता निरवद्या। कृताभिषेका महिषी। अतः अप्रतिहतचिकीर्षिता। अखिलशब्दः स्वान्तर्भावपरः। न ह्यस्मद्वर्जितमिति भावः। शरण्यं भगवन्तं अलब्धवन्तः अशरण्याः। अहमपि तेष्वेक इत्याह अनन्य इति।**

---

என்றும், 27 "**राजसंश्रयवश्यानां**" (ராஜஸம்ஶ்ரய வஶ்யாநாம்) என்றும், 28 "**पापानां वा शुभानां वा**" (பாபாநாம் வா ஶுபாநாம் வா) என்றும் திருவடியோடே § மறுதலைத்து ரக்ஷித்தாளிறே. இக்குணம் அபிமதமாகிறது,—தனக்கு ஸ்வரூபமான ரக்ஷணத்துக்கு உபயோகியாகையாலே. 'ஆதி' ஶப்தத்தாலே அநுக்தமான குணவிஶேஷங்களை நினைக்கிறது. ஸமஸ்தகல்யாண குணாத்மகனைப் பேசிலும் இவளைப் பேசி முடியாதென்கை. (அநவதிகாதிஶய) இவைதான் ஒரொன்றே அபரிச்சேத்யமாயிருக்கும். (அஸங்க்யேய) எண்ணிறந்திருக்கை. (கல்யாண) 29 "**इयं तु भवतो भार्या दोषैरेतैर्विवर्जिता**" (இயம் து பவதோ பார்யா தோஷைரேதைர் விவர்ஜிதா) என்கிறபடியே உள்ளதெல்லாம் அழகியதாயிருக்கை. இவள் குணங்களுக்கு வ்யாவர்த்தகம் அவன் குணங்கள். அவன் குணங்களுக்கு தோஷமேதென்னில், அவனுக்கு ஸ்வரூபாநுபந்தியான நிரங்குஶஸ்வாதந்த்ர்யமுண்டு. 30 "**क्रोधमाहारयत्**" (க்ரோதமாஹாரயத்) என்று கோபத்தை அருளப்பாடிட்டுக் கார்யம் கொள்ளவேண்டும் தஶையுண்டு. அதுதானும் இவளுக்கு இன்றிக்கேயிருக்கை. (குணகணாம்) இவைதான் திரள் திரளாயிருக்கை.

---

§ (பா) மலைந்தும்.

(பத்மவநாலயாம்) பத்மஶப்தம் மங்களங்களுக்கு உபலக்ஷணமாய், ‘ஸர்வமங்களநிவாஸிநீ’ என்கை. அங்ஙனன்றியே, 31 “सर्वगन्धः” (ஸர்வகந்த:) என்கிற வஸ்துவையும் ஸ்வஸம்பந்தத்தாலே பரிமளிதமாக்குகை என்றுமாம். பத்மஶப்தத்தாலே போக்யதையைச் சொல்லிற்றாய், அத்தாலே நிரதிஶயபோக்யபூதை என்றுமாம். பரிமளமிறே இவள் வடிவுக்கு உபாதானம். 32 “सर्वगन्धः सर्वरसः” (ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:) என்னும் இவையிரண்டும் இத்தலையிலே கிடந்தபடி. (பகவதீம்) பகவச்சப்தம் பூஜ்யவாசி. 12 “तत्र पूज्य-पदार्थोक्तिपरिभाषासन्वितः शब्दोऽयं नोपचारेण” (தத்ர பூஜ்யபதார்த்-தோக்தி பரிபாஷாஸமந்வித:| ஶப்தோऽயம் நோபசாரேண) என்கிறவனுக்கும் பூஜ்யையாயிருக்கை. ஆக, (பத்மவநாலயாம் பகவதீம்) என்கிற இத்தால் தன்வழியாக அவனைப்பற்றினால் குற்றம் பாராதபடி அவனைத் தன் போக்யதையாலே துவக்கிப் பொறுப்பிக்குமவளென்கை. (ஶ்ரியம்) தன்னைப்பற்றி ஸர்வமுமுண்டாப்படியாய், தான் அவனைப்பற்றி உளளுமாயிருக்கை. இதிலே நிருக்திப்ரக்ரியையும் நடக்கக்கடவது. (தேவீம்) வடிவில் புகரிருக்கிறபடி. அவனோட்டைச் சேர்த்தியாலே த்யோதமானையாயிருக்கிறவளே. (நித்யாநபாயிநீம்) 15 “विष्णोः श्रीरनपायिनी” (விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ) என்கிறபடியே அவனோடுண்டான நித்யஸம்ஶ்லேஷத்தாலே அபாயமின்றியேயிருக்கை. அபாய:—விச்லேஷ: (நிரவத்யாம்) கீழ்ச்சொன்ன ஏற்றமெல்லாம் ஸ்வார்த்தமாயிராதே அத்தலைக்கேயாம்படியிருக்கை. ஏதேனுமொன்று ‘எனக்கு’ என்கை அவத்யம். பிறர்க்கென்கை நிரவத்யம். இனி விஷயவிபாகமேயுள்ளது. அது வகுத்த விஷயமாமித்தனையே வேண்டுவது. அவன்தானும் தன்னையும் தன் உடைமையையும் 32 “भक्तानां” (பக்தாநாம்) என்றிறே இருப்பது. (தேவதேவ-திவ்யமஹிஷீம்) ஸர்வேச்வரஸாம்ராஜ்யத்திலே * தேவர்க்கும் தேவனானவனோடொக்க அபிஷிக்தையானவள். 33 “कृताभिषेका महिषी” (க்ருதாபிஷேகா மஹிஷீ). (அகிலஜகந்மாதரம்) இப்பெரிய மேன்மையைக்கண்டு இறாய்க்கவேண்டாதபடி ஸகலசேதநரோடுண்டான அவிநாபூதமான குடல்துடக்கைச் சொல்லுகிறது. ஸார்வபௌமன் மஹிஷி தன் ப்ரஜை சேற்றையளைந்து மடியிலே ஏறப்புக்கால்

* திருவாய் (8-1-5).

२. पारमार्थिकभगवच्चरणारविन्दयुगलैकान्तिकात्यन्तिक·
2. பாரமார்த்திக பகவச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக

२. किमपेक्षितमित्यत्राह पारमार्थिकेति। अनुभवविशेषणम्। परमपुरुषार्थान्तर्भूतत्वात्, स्वयं परमपुरुषार्थत्वात्, अकृत्रिमत्वाद्वा पारमार्थिकत्वम्॥ अकृत्रिमत्वं निरुपाधिकत्वम्। भक्तिविशेषणं वा पारमार्थिकशब्दः। चरणारविन्देति-मातुः स्तन्यं पुत्रस्येव शेषभूतस्य प्राप्यमिति भावः। ऐकान्तिकत्वं फलान्तरार्थत्वाभावात् भगवदेकविषयत्वम्। आत्यन्तिकत्वं-अत एव सदानुवृत्तिः। नित्ययुक्त इति यावत्।

அணைத்து உச்சிமுகக்குமித்தனையிறே. ப்ரஜையின் பக்கல் ப்ராப்தியேயிறே ஜீவிப்பது. † அகிலஶப்தத்தில் தாமும் அந்தர்ப்பூதராகையாலே தம்மையும் கூட்டிக்கொள்ளுகிறார்,—(அஸ்மந்மாதரம்) என்று. (அஶரண்யஶரண்யாம்) குணலேஶமாத்ரத்தாலே குற்றங்களையடையப் பொறுத்து உகக்குமவள். அங்ஙனன்றிக்கே 25 "तेन मैत्री भवतु" (தேந மைத்ரீ பவது) என்று குற்றத்தோடே உகக்குமவள். புறப்பு புகலற்றார்க்கு பகவத்விஷயம் புகலாயிருக்கும். பகவத்விஷயத்துக்கும் புறம்பாயிருப்பார்க்கும் புகலாயிருக்குமிவள். ||"செய்தாரேல் நன்று செய்தார்" என்னுமவர் சீறிக் கையும் வில்லுமானவன்றும், இவள் திருவடிகளே புகலாயிருக்கும். "ஸர்வலோகஶரண்யர்" என்று காளமூதித் திரிகிறவர் அஶரண்யரானவன்றும் இவள் ஶரண்யையாயிருக்கும். * ஶரணம் என்கிற உக்தியைப்பற்றி ஶரண்யர் அவர். ஸம்பந்தமே ஹேதுவாக ஶரண்யையாயிருக்குமிவள். 34 "स पित्रा च परित्यक्तः" (ஸ பித்ரா ச பரித்யக்த:) 24 "मित्रमौपयिकं कर्तुं" (மித்ரமௌபயிகம் கர்த்தும்) 25 "विदितस्स हि धर्मज्ञः" (விதிதஸ்ஸ ஹி தர்மஜ்ஞ:) 27 "राजसंश्रयवश्यानां" (ராஜஸம்ச்ரயவச்யாநாம்) 28 "पापानां वा शुभानां वा" (பாபாநாம் வா ஶுபாநாம் வா) "அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்ய" என்கிறபடியே ஸர்வஸமாச்ரயணீயமான

† "அகிலசப்தத்தில் தாமும் அந்தர்ப்பூதராயிருக்கச் செய்தேயும், அகில ஜகத்தும் ஒரு தட்டும், தாம் ஒரு தட்டுமாகத் தம் பக்கலில் வாத்ஸல்யாதிசயம் கண்டாராகையாலே விசேஷித்தருளிச் செய்கிறார் அஸ்மாந்மாதர மென்று." என்று சில சுவடிகளில் பாடமென்பர். || பெரியாழ்-திரு (4-9-2). * ஶ்ரீகுண 50.

பகவத்விஷயத்துக்குப் புறம்பாயிருப்பாருமுண்டோவென்னில்: (அநந்ய ஶரண்யோऽஹம்) அந்த அநந்யஶரணனாகிறேன் நான் என்கிறார். (ஶரணம் ப்ரபத்யே) அஶரண்யர்க்கும் ஶரண்யரான தேவர் திருவடிகளையே உபாயமாக அத்யவஸிக்கிறேன். அஶரண்யர்க்கும் ஶரண்யையாவதென்னென்னில்: அகிலஜகந்மாதாவாகையாலே அபேக்ஷாநிரபேக்ஷமாகப் பரிக்ரஹிக்கும் தேவர்க்கும் பரிக்ரஹித்தல்லது நிற்கவொண்ணாதபடியான அபேக்ஷையையும் பண்ணினேன். 35 **तां पद्मनेमिं शरणमहं प्रपद्ये**" (தாம் பத்மநேமிம் ஶரணமஹம் ப்ரபத்யே).

இரண்டாவது சூர்ணை அவதாரிகை:—(பாரமார்த்திக) கீழ் பிராட்டியுடைய ஶரண்யதையையும், அதுக்கடியான ஊற்றுவாயையும், தம்முடைய அநந்யகதித்வத்தையும் சொல்லி, அவள் திருவடிகளிலே ஶரணம் புக்கு நின்றார். அநந்தரம் உமக்கு அபேக்ஷிதமென்னென்று பிராட்டி திருவுள்ளமாக, "கைங்கர்யருசியும் ப்ரபத்திநிஷ்டையும் எனக்கு உண்டாகவேணும்" என்கிறார். ஈச்வரன் திருவடிகளிலே கைங்கர்யஸித்திக்கிறே ஶரணம் புகுவது. அவ்வளவன்றிக்கே, ருசிவிச்வாஸங்களென்று தனித்தனியே அபேக்ஷித்துப் பெறவேண்டுவன சில அதிகாரிவிஶேஷணங்களுண்டிறே. இப்போது அபேக்ஷித்துப்பெறவேண்டும்படி இதுக்குமுன்பு இவர்க்கின்றிக்கேயிருந்ததோ? என்னில்: உண்டானாலும் தந்தாமுக்கு என்றுமில்லையாகவிறே தந்தாமை நினைத்திருப்பது.

வ்யா:—(பாரமார்த்திக) 'அர்த்தப்' என்று ப்ரயோஜனத்துக்கும் மெய்க்கும் பெயர். இது பரபக்திக்கு விஶேஷணமானபோது அதினுடைய அக்ருத்ரிமத்வம் சொல்லுகிறது. திருவடிகளுக்கு விஶேஷணமானபோது அதினுடைய பரம ப்ரயோஜநத்வம் சொல்லுகிறது. இப்பிரிவுக்கு ப்ரயோஜநமென்னென்னில்: பக்திவிஷயமானபோது திருவடிகள் பரமப்ரயோஜநமாகக் கடவது; திருவடிகள் விஷயமானபோது பக்தி அக்ருத்ரிமையாகக் கடவது. (பகவச்சரணாரவிந்த) கீழ்ச்சொன்ன பகவச்சப்தம் ஸர்வோத்கர்ஷவாசி. இது குணயோகத்தால் வந்த ரஸ்யதையைச் சொல்லுகிறது. குணங்களும் போக்யமாயிருக்கையாலே பரமபக்திஜநகம். (சரணாரவிந்த) விக்ரஹவத்தையால் வந்த போக்யதை சொல்லுகிறது. (யுகள) சேர்த்தியால்

परभक्तिपरज्ञानपरमभक्तिकृतपरिपूर्णानवरतनित्यविशदतमानन्यप्रयोजनानवधि - कातिशयप्रियभगवदनुभवजनितानवधिकातिशयप्रीतिकारिताशेषावस्थोचिता - शेषशेषतैकरतिरूपनित्यकैङ्कर्यप्राप्त्यपेक्षया पारमार्थिकी भगवच्चरणारविन्दशरणा- गतिर्यथावस्थिता अविरताऽस्तु मे।

பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி க்ருத பரிபூர்ணாநவரத நித்ய விஶததமாநந்ய ப்ரயோஜநாநவதிகாதிஶய ப்ரிய பகவதநுபவ ஜநிதாநவதிகாதிஶய ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோசிதாஶேஷஶேஷதைகரதிரூப நித்ய கைங் கர்யப்ராப்த்யபேக்ஷயா பாரமார்த்திகீ பகவச்சரணாரவிந்தஶரணாகதிர் யதா வஸ்திதா அவிரதாஸ்து மே ||

---

उत्तरोत्तरसाक्षात्काराभिनिवेशः परभक्तिः। साक्षात्कारः परज्ञानम्। उत्तरोत्तरानुभवाभिनिवेशः परमभक्तिः। परिपूर्णत्वादिपदषटमनुभवविशेषणम्। पर-
क
व्यूहादिसर्वावस्थभगवद्विषयत्वं परिपूर्णत्वम्। सकृत्त्वव्यावृत्त्यर्थं अनवरतत्वम्। अविरतेच्छावधिमत्त्वव्युदासाय नित्यत्वम्। विरतनित्यत्वव्युदासाय अनव - रतत्वम्। स्नानाग्निहोत्रादिकं हि विरतनित्यम्। परोक्षत्वव्युदासाय विशद - तमत्वम्। प्रयोजनान्तरार्थत्वव्युदासाय अनन्यप्रयोजनत्वम्। तत्र हेतुः–अन- वधिकातिशयप्रियत्वम्। प्रयोजनान्तरार्थत्वाभावेऽपि सावधिकातिशयप्रियत्व- व्युदासार्थं अनवधिकातिशयप्रियत्वमुक्तम्। ईदृशानुभवेन जनितानवधिकातिशय- प्रीतिः-"अहो मया ईदृशानुभवो लब्धः" इति पूर्वानुभवलब्धविषयनिरवाधि - कातिशयानुकूलप्रीतिसन्तानरूपा। तया अनुकारितम्। अशेषावस्थाः–आस्था- नान्तःपुरस्थित्यादयः। अशेषशब्दः—छत्रचामरकलाचीपादुकाग्रहणताम्बूल - दानादिपरः। अनन्तवैनतेयादीनां सर्वविधकैङ्कर्यप्राप्तावपि कैङ्कर्यं प्रतिनियतम् दृश्यते। तत्कथमिति शङ्कायामाह रतिरूपेति। स्वेन कृतत्वेऽपि परप्रीतिरेव फलम्। "प्रहर्षयिष्यामि" इतिह्युच्यते। तस्मादन्यकृतत्वेऽपि कैङ्कर्यस्य तज्जनित- परप्रीतिं दृष्ट्वा स्वकृतत्वे सतीव प्रीतिस्सर्वेषां जायत इति तादृशप्रीतिरूपं
व
कैङ्कर्यमित्यर्थ इति मन्त्रचतुर्थ्यर्थोक्तिः। पारमार्थिकीति तमःकार्यव्युदासाय। आनुकूल्यादिशरीरवती च सा। तद्धि तस्या उपायान्तरेभ्यो व्यावृत्तं स्वरूपम्। यथा वस्थितेति रजःकार्यव्युदासाय। प्रपत्तव्यविषयसंबन्धरूपः प्रकारः। तत्साहित्य- मभिप्रेतम्। अविरता आफलसिद्धेरविश्रान्ता। अव्यवहितसाधनमित्यर्थः। व्यव हितसाधनं हि मध्ये साधनान्तरप्राचुर्ये स्वयं विरतं स्यात्। साक्षादस्तु मे॥

வந்த போக்யதை. (ஐகாந்திக) ஏகமே அந்தமாயிருக்கை. அதாவது வேறொரு விஷயத்தையுடைத்தன்றிக்கேயிருக்கை. (ஆத்யந்திக) அந்தத்தை அதிக்ரமித்திருக்கை. அதாவது—நித்யமாயிருக்கை. (பரபக்திபரஜ்ஞாநபரமபக்தி) பரபக்தியாவது—ஸம்ஶ்லேஷவிஶ்லேஷ ஸுகது:க்காரம்படியான ப்ரேமவிஶேஷம். பரஜ்ஞாநமாவது—இதினுடைய விபாகதசையான ஸாக்ஷாத்காரம். பரமபக்தியாவது—க்ஷணகாலமும் விஶ்லேஷத்தைப் பொறுக்கமாட்டாத தசை. * "உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய" என்கிறபடியே ஜ்ஞாநகர்மங்களாலே ஸம்ஸ்க்ருதாந்த:கரணனாய் பக்தி பிறந்து அதினுடைய விபாக தசை பரமபக்தியாகக் கடவது உபாஸகனுக்கு. இவர்க்கு அந்த ஸ்தானத்திலே பகவதநுக்ரஹம் நிற்க, மேலுள்ள தசைகளை அபேக்ஷிக்கிறார். (க்ருத) இவற்றாலே பண்ணப்பட்ட. (பரிபூர்ண) பரிபூர்ணமாகையாவது ஸ்வரூபரூபகுணவிபூதிகளித்தனையும ஒருகாலே அநுபவவிஷயமாகை. (அநவரத) அவிச்சின்னமாயிருக்கை. அதாவது—இடைவிடாதே செல்லுகை. (நித்ய) யாவதாத்மபாவியாயிருக்கை. (விஶததம) விஶதமாவது--பரபக்திதஶையில் அநுபவம். விஶததரமாவது—பரஜ்ஞாநதசையில் அநுபவம். விஶததமமாவது பரமபக்திதசையில் அநுபவம். (அநந்யப்ரயோஜந) 'அநுபவஜநிதப்ரீதியும், ப்ரீதிகாரித கைங்கர்யமும் வேண்டா; இதுதானே அமையும்' என்னும்படியிருக்கை. (அநவதிகாதிஶயப்ரிய) அநவதிகமான அதிஶயத்தை உடைத்தான ப்ரீதி. (பகவதநுபவ) சரமஶரீராவஸாநஸமநந்தரமாக அர்ச்சிராதிகதியாலே போய்ப் பரமபதத்தில் அநுபவிக்கும் அநுபவம். (ஜநிதாநவதிகாதிஶயப்ரீதிகாரித) அத்தால் பிறந்த ப்ரீதியாலே பண்ணுவிக்கப்பட்ட. ஸ்வார்த்தணிஜந்தோ வா. (அஶேஷாவஸ்தோசித) ஸர்வாவஸ்தைகளிலும் அநுகூலமாயிருக்கை. (அஶேஷஶேஷதைகரதிரூப) 36 "**निवासशय्या**" (நிவாஸஶய்யா) இத்யாதிப்படியே ஸர்வவிதஶேஷதையிலுமுண்டான அபிநிவேஶத்தையே வடிவாக உடைத்தாயிருக்கை. (நித்ய) அபுநராவ்ருத்திலக்ஷணமாயிருக்கை. (கைங்கர்யப்ராப்த்யபேக்ஷயா) கைங்கர்யப்ராப்தியிலுண்டான அபேக்ஷையாலே. (பாரமார்த்திகீ) ஆர்த்தரூபமாயிருக்கை. (பகவத்) ஜ்ஞாநஶக்த்யாதிகளால் பூர்ணமான விஷயமாகையாலே ஸஹாயாந்தரநிரபேக்ஷமான உபாயபௌஷ்கல்யம் சொல்லுகிறது. (சரணார-

३. अस्तु ते॥ ४. तथैव सर्वं संपत्स्यते॥
५.अखिलहेयप्रत्यनीककल्याणैकतानस्वेतरसमस्तवस्तुविलक्षणज्ञानानन्दैकस्वरूप

3 அஸ்து தே॥ 4 தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே॥

5. அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந ஸ்வேதரஸமஸ்த வஸ்து விலக்ஷண ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூப

---

३. अस्तु त इति-"तेन मैत्री भवतु ते" इत्यादिमानगत्या निश्चित्येति केचित्।

४. स्वसंबन्धिसंबन्धिनिस्तरणमपि सर्वशब्दाभिप्रेतम्।

५. अथ द्वयस्थं नारायणशब्दं विवृणोति-अखिलेत्यादिना। तत्र प्रथमपदेन नारशब्दवाच्यानां धर्म्युच्यते। अखिलशब्दः चिदचिद्गतक्लेशादिभावविकारादिहेयपरः। प्रत्यनीकेति-न केवलं विरहमात्रमित्यर्थः। आनन्दकल्याणशब्दौ स्वपरापेक्षया अनुकूलपरौ। आनन्दविवरणं वा कल्याणशब्दः। कल्याणानां गुणानामेकास्पदमिति वा कल्याणैकतानशब्दार्थः। यद्वा स्वसंबन्धिनामपि मङ्गलावहता कल्याणशब्दार्थः। एकशब्देन प्रदेशभेदेन जडत्वप्रतिकूलत्वव्युदासः।

---

விந்த) விக்ரஹத்தினுடைய பரமோபாயத்வம் சொல்லுகிறது. (ஶரணாகதி:) ஸலக்ஷணமாயிருக்கை. (யதாவஸ்திதா) உபாயந்தரங்களுடைய அநுபாயத்வபுத்திபூர்வகமாக அத்தைப் பற்றுகைபோலே காணும். அதாகிறது. பற்றி விடுகையுமன்றிக்கே, பற்றிப்பற்றுகையுமன்றிக்கே "ஸ்நாத்வா புஞ்ஜீத" என்னுமாப்போலே விட்டுப் பற்றுகை. (யதாவஸ்திதா) என்றது இருந்தபடியே என்றபடி. இது இப்படிப்போலேகாணுமிருப்பது. ரஹஸ்யமாகையாலே நேராக வெளியிடாதொழிகிறார். (அவிரதாஸ்து மே) அநந்யகதியாயிருந்துள்ள எனக்கு யாவத்ப்ராப்தி விச்சேதமின்றிக்கேயொழியவேணும்.

மூன்றாவது சூர்ணை வ்யா:—(அஸ்து தே) பிராட்டியருளிச்செய்கிறார்,—உமக்கப்படியே உண்டாயிடுக.

நாலாவது சூர்ணை வ்யா:—(தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே) அப்படிப்பட்ட உபாயந்தன்னாலேயே பரபக்தி தொடக்கமாகக் கைங்கர்யமீறாக நடுவுள்ள தசைகளடைய உண்டாகக்கடவது.

ஐந்தாவது சூர்ணை அவ:—மேல் ஆச்ரயணீயவஸ்துநிர்த்தேஶம் பண்ணுகிறார். ஆச்ரயணீயனானவன் நாராயணனிறே. அதில்

நாரஶப்தார்த்தம் மேல் சொல்லுவதாகக்கோலி, அதுக்கு ஆச்ரயமாய் அயநஶப்தார்த்தமான திவ்யாத்மஸ்வரூபத்தை முதலிலே அருளிச் செய்கிறார்.

வ்யா:—(அகிலஹேயப்ரத்யநீக) 37 "நிர்குண" (நிர்க்குணம்) என்கிற வஸ்து இருக்கிறபடி. ஹேயங்களாவன,—அசித்கதமான பரிணாமமும், சேதநகதமான து:க்காஜ்ஞாநாதிகளும், நித்யமுக்தர் பக்கலுண்டான பாரதந்த்ர்யமும். அகிலஶப்தத்தாலே உபயவிபூதியிலுண்டான சேதநாசேதநங்களைச் சொல்லுகிறது. பாரதந்த்ர்யம் ஹேயமாமோ வென்னில்: புருஷனுக்கு ஸ்தநோத்பேதமும் ஸ்த்ரீக்கு ஶ்மஶ்ருஸம்யோகமும்போலே பரதந்த்ரனுக்கு ஸ்வாதந்த்ர்யம் ஹேயம். அப்படியே ஸ்வதந்த்ரனான ஈச்வரனுக்குப் பாரதந்த்ர்யம் ஹேயமாகக்கடவது. ப்ரத்யநீகத்வமாவது,—பதார்த்தாந்தரஸம்ஸர்க்காபாவாதாரத்வம். ஆச்ரிதருடைய ஹேயநிரஸநத்துக்கடியான ஹேயப்ரத்யநீகத்வமென்றுமாம். (கல்யாணைகதாந) கல்யாணைகவிஸ்தார. அகண்டைகரஸம் போலே இச்சப்தம். (ஸ்வேதரஸமஸ்தவஸ்துவிலக்ஷண) அத ஏவ ஸமஸ்தவஸ்துவிலக்ஷண. (அநந்த) த்ரிவிதபரிச்சேதரஹித. விபுத்வாத் தேஶபரிச்சேதராஹித்யம். நித்யத்வாத் காலபரிச்சேதராஹித்யம். ஸ்வவ்யதிரிக்தஸமஸ்த வஸ்துக்களுக்கும் தான் ப்ரகாரியாய், தனக்கு ப்ரகாரயந்தரமில்லாதபடி நிற்கையாலே ஸத்ருஶவஸ்த்வபாவத்தாலே வஸ்துபரிச்சேதராஹித்யம். * துலையாலேயாதல், ப்ரஸ்தாதிகளாலேயாதல் வரும் பரிச்சேதராஹித்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். (ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப) அநந்யாதீநப்ரகாஶத்வாஹ்லாதகரத்வஜ்ஞாநமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ:—ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப:. அதாவது,—ஸ்வயம்ப்ரகாஶத்வ ஸுகரூபத்வங்களே ஸ்வரூபமாயிருக்கை. இப்படி திவ்யாத்மஸ்வரூபம் சொல்லப்பட்டது.

அநந்தரம், நாரஶப்தவாச்யங்களில் ஸ்வரூபகுணங்களுக்கு ப்ரகாஶகமாய் பஞ்சோபநிஷண்மயமான திவ்யவிக்ரஹத்தை அருளிச் செய்கிறார். (ஸ்வாபிமத) கீழ்ச்சொன்ன ஸ்வரூபத்துக்கு, குணங்களிற்காட்டில் பரகாஶகமுமாய் அந்தரங்கமுமாயிருக்கையாலே குணங்களுக்கு முன்னே விக்ரஹத்தை அருளிச்செய்கிறார். (ஸ்வாபிமத)

---

* துலை-தராசு, ப்ரஸ்தம்-படிக்கல்; பரிமாணத்தையளக்கும் பாத்ரமுமாம்.

**स्वाभिमतानुरूपैकरूपाचिन्त्यदिव्याद्भुतनित्यनिरवद्यनिरतिशयौज्ज्वल्यसौन्दर्य-सौगन्ध्यसौकुमार्यलावण्ययौनाद्यनन्तगुणनिधिदिव्यरू स्वाभाविकानवधिकातिशय ज्ञानबलैश्वर्यवीर्यशक्तितेजः-**

ஸ்வாபிமதாநுரூபைகரூபாசிந்த்யதிவ்யாத்புத நித்ய நிரவத்ய நிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநந்தகுணநிதிதிவ்ய ரூப ஸ்வாபாவிகாநவதிகாஶய ஜ்ஞாநபலைச்வர்ய-வீர்யஶக்திதேஜ:

---

**अथ रूपम्। अभिमतानुरूपशब्दौ पूर्ववत्। एकरूपत्व उभयलिङ्गत्व-प्राप्यत्वोपास्यत्वैः। तर्कागोचरत्वं-अचिन्त्यत्वम्। दिव्यशब्दद्वयं द्रव्यसंस्थानवैलक्षण्यपरम्। अद्भुतत्वं प्रतिक्षणमपूर्वत्वम्। नित्यसंस्थानत्वम्-नित्यत्वम्। दौर्लभ्यावद्यराहित्यं निरवद्यत्वम्। सौन्दर्य-अवयवशोभा। लावण्यं-अवयविशोभा। आदि-शब्दार्थः पीनवृत्तायतभुजत्वादि॥**

---

38 "**इच्छागृहीताभिमतोरुदेहः**" (இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:) என்கிறபடியே திவ்யாத்மஸ்வரூபத்திற்காட்டில் அபிமதமாயிருக்கை. (அநுரூப) ஸ்வரூபாநுபவத்துக்குத் திரோதாயகமாயிருக்கையன்றிக்கே, ஸ்வரூபாநுபவத்துக்கு வர்த்தகமாயிருக்கை. (ஏகரூப) ஷட்பாவ விகாரரஹிதமாயிருக்கை. 39 "**सदैकरूपरूपाय**" (ஸதைகரூபரூபாய) என்றிருக்கை. (அசிந்த்ய) இதரஸஜாதீயதயா சிந்தயிதுமஶக்யமாயிருக்கை; (திவ்ய) வருந்தியும் உபமானமின்றிக்கேயிருக்கை. அப்ராக்ருதமாயிருக்கையென்றுமாம். (அத்புத) க்ஷணந்தோறும் அபூர்வமாயிருக்கை; அத ஏவ ஆச்சர்யாவஹமாயிருக்கை. (நித்யநிரவத்ய) நித்யநிர்தோஷமாயிருக்கை. அதாவது என்றுமொக்க ஸ்வார்த்தமாயிராதொழிகை. 32 "**भक्तानां**" (பக்தாநாம்) என்றிருக்கும் இருப்பு. (நிரதிஶயௌஜ்ஜ்வல்ய) ஸர்வதேஜஸ்ஸுக்களையும் கீழ்ப்படுத்திக் கொண்டிருக்கும் ஔஜ்ஜ்வல்யம். இத்தால் ப்ரஹ்மாதிகளுக்கும் அமைத்துக்காட்டவேண்டும் படியாயிருக்கை. இத்தால் விக்ரஹவைலக்ஷண்யம் சொல்லிற்று. அத விக்ரஹகுணாஹ (ஸௌந்தர்ய) அவயவஶோபை. (ஸௌகந்த்ய) 31 "**सर्वगन्धः**" (ஸர்வகந்த:) என்கிறபடியே ஸர்வத்தையும் பரிமளிதமாக்கவற்றாயிருக்கை. (ஸௌகுமார்ய) நாய்ச்சிமாரும் உறைக்கப் பார்க்கப்

பொருதபடி புஷ்பஹாஸஸுகுமாரமாயிருக்கை. (லாவண்ய) ஸமுதாயஶோபை. அதாவது,—லவணம் போலே எங்குமொக்க வ்யாபித்து நின்று ரஸத்தைத் தாவற்றுயிருக்கை. (யௌவந) 40 "युवाऽकुमारः" (யுவாऽகுமார:) என்கிறபடியே நித்யயுவாவாயிருக்கும் பருவம். (ஆதி) இவை தொடக்கமான. (அநந்தகுணநிதி) அஸங்க்யாதமான குணங்களுக்குக் கொள்கலமாயிருக்கும். (திவ்யரூப) திவிஸ்திதரூப. அதாவது,—இவ்விபூதியில் அடங்காதிருக்கை.

விக்ரஹகுணங்கள் விக்ரஹத்துக்கு பூஷணமாயிருக்குமாப்போலே திவ்யாத்மஸ்வரூபத்துக்கு பூஷணமான ஸ்வரூபகுணங்களைச் சொல்லுகிறது. (ஸ்வாபாவிக) ஜலத்துக்கு ஶைத்யம்போலே ஸ்வபாவஸித்தமாயிருக்கை. (அநவதிகாதிஶய) ‡ நிஸ்ஸீமமுமாய், ஆச்சர்யகரமுமாயிருக்கை. ப்ரதமத்தில் ஜ்ஞாநாதிகளாறும் ஸர்வவிஷயங்கள். அவற்றில், (ஜ்ஞாந) 41 "यो वेत्ति युगपत्सर्वं प्रत्यक्षेण सदा स्वतः" (யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:) என்கிறபடியே எல்லாவற்றையும் ஒருகாலே எப்போதும் உள்ளபடி அறியவற்றுயிருக்கை. (பல) ஸங்கல்பமாத்ரத்தாலே ஸர்வபதார்த்தங்களையும் தரிக்கும் தாரணஸாமர்த்யம். (ஐஶ்வர்ய) ஸமஸ்தபதார்த்தநியமநஸாமர்த்யம். (வீர்ய) ஸர்வத்தையும் தரித்து நியமித்துப் போராநின்றால் புருவம் வேராத அநாயாஸம். எல்லாவற்றையும் உண்டாக்காநின்றால் தான் அவிக்ருதனாயிருக்கும் அவிகாரதையென்னவுமாம். (ஶக்தி) ப்ரவ்ருத்த்யுந்முகரான சேதநர்க்கு ஶக்தியைக் கொடுத்து ப்ரவர்த்திப்பிக்கும் ப்ரவர்த்தகத்வஸாமர்த்யம். அகடிதகடநாஸாமர்த்யம் என்னவுமாம். ஜகதுபாதாநஶக்தியென்னவுமாம். (தேஜ:) பராபிபவநஸாமர்த்யம். 42 "तमेव भान्तमनुभाति सर्वं" (தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்) இத்யாதி.

இப்படி ஸர்வோத்க்ருஷ்டனானவனுக்கு, இனி பன்னிரண்டு குணம் ஆச்ரிதவிஷயம். (ஸௌஶீல்ய) 43 "महतो मन्दैस्सह नीरन्ध्रेण संश्लेषस्वभावत्वं-शील" (மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷஸ்வபாவத்வம்-ஶீலம்). † அந்த மஹத்த்வம் தம் திருவுள்

---

‡ (பா) குணங்கள் நிஸ்ஸீமங்களாய், க்ருஹீதாம்சம் ஆச்சர்யாவஹமாயிருக்கை. † (பா) அது தன் திருவுள்ளத்திலும் படாதொழிகை.

७. त्वमेव माता च पिता त्वमेव त्वमेव बन्धुश्च गुरुस्त्वमेव।
त्वमेव विद्या द्रविणं त्वमेव त्वमेव सर्वं मम देवदेव॥

८. पिताऽसि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान्।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव॥

7. த்வமேவ மாதா ச பிதா த்வமேவ த்வமேவ பந்துச் ச குருஸ் த்வமேவ
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ த்வமேவ ஸர்வம் மம தேவதேவ!

8.பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்யச் ச குருர் கரீயாந்
ந த்வத் ஸமோஸ்தயப்யதிக: குதோந்யோ லோக த்ரயேப்யப்ரதிமப்ரபாவ!

---

७. शरणशब्दं विवृणोति त्वमेवेति। पित्रादिकार्यरक्षणस्य अस्मिन्नेव पुष्कलत्वादयमेव बन्धुः, न तु पित्रादय इत्यभिप्रायेण त्वमेवेत्यावृत्तिः॥

८. न परं मम, सर्वलोकस्य चेत्याह पितासीति। रक्षकत्वे समाभ्यधिक-राहित्यमुक्तं। सौलभ्ये वा। अप्रतिमप्रभावेति परत्वस्योक्तिः॥

---

தந்தை நீ” (த்வமேவ பந்துச்ச) பந்துவாயிருப்பார் இவன் வழிகெடவர்த்தியாதபடி நியமித்து, நல்வழியே நடத்துமவரிறே. அப்படியே நான் வழிகெட வர்த்தியாதபடி அந்தராத்மதயாவிருந்து நியமித்து நல்வழியாக்கும் பந்துவும் நீயே. (குருஸ்த்வமேவ) 89 “गुशब्दस्त्वन्धकारः स्यात् .... गुरुरित्यभिधीयते” (குஶப்தஸ் த்வந்த-கார: ஸ்யாத்....குருரித்யபிதீயதே). § இருள்தருமா ஞாலத்தைப்போக்கித் தெளிவிசும்பைக்கொடுக்கையாலே எனக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணும் ஆசார்யனும் நீயே. :: “அறியாதன அறிவித்த அத்தா” என்னக்கடவதிறே. ஆசார்யரில் வைத்துக்கொண்டு ப்ரதமாசார்யனவான ஈச்வரனிறே. 90 “लक्ष्मीनाथसमारम्भां” (லக்ஷ்மீநாதஸமா-ரம்பாம்) என்னக்கடவதிறே. ‡ “இசைவித்தென்னை” என்கிறபடியே முதலடியிலே ருசி ஜநகனுகையாலே ப்ரதமாசார்யனென்னக் குறையில்லையே. (த்வமேவ வித்யா) உபதேசித்த ஜ்ஞாநமும் நீயே. || “ஞானக்கலைகளுக்கெல்லாம் ஆவியும் ஆக்கையும் தானே” என்கிறபடியே ஜ்ஞாநத்தினுடைய ஸத்தாதிகள் அவனதீனமாகையாலும்,

---

§ திருவாய் (10-6-1). :: திருவாய் (2-3-2). ‡ திருவாய் (5-8-9).
|| திருவாய் (1-9-8).

ஜ்ஞாநப்ரதிபாத்யன் அவனுகையாலும், ஜ்ஞாநமும் நீயே என்கிறது. (த்ரவிணம் த்வமேவ) த்ரவிணமாகிறது த்ரவ்யம். அதாவது போகத்துக்கு உபகரணமாயிருக்கை. இத்தால் போகோபகரணமான பரபக்த்யாதிகளும் நீயே என்கிறார். அன்றிக்கே, 90 "**धनं मदीयं**" (தநம் மதீயம்) என்கிறபடியே ப்ராப்யப்ராபகங்களிரண்டும் நீயே என்கிறாராகவுமாம். (த்வமேவ ஸர்வம்) சொல்லிச் சொல்லாதவையெல்லாம் நீயே. (மம தேவதேவ) ஸர்வத்தையும் விட்டு உன்னையே பற்றின எனக்கு விட்டவையுமெல்லாம் அயர்வறுமமரர்களதிபதியான நீயே என்கிறார்.

எட்டாவது சூர்ணை அவதாரிகை:—'இதுதான் உமக்கு ஒருவருக்குமேயோ' என்னில்: 'என்னளவேயன்று; ஸகலலோகங்களிலும் வர்த்திக்கிற ஸகலசேதநருக்கும் ஸகலவிதபந்துவும் ஸர்வாதிகனுன நீயே' என்கிறார்.

வ்யா:—(பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய) ஸர்வலோகங்களிலுமுண்டான ஜங்கமஸ்தாவராத்மகமான ஸகலபதார்த்தங்களுக்கும் உத்பாதகனுனவனே! (த்வமஸ்ய பூஜ்யச்ச) ஆகையாலே ஸர்வத்துக்கும் பூஜ்யன் நீயல்லேயோ? (குருர் கரீயாந்) ச்ரேஷ்டனுன ஆசார்யனும் நீயே. கீழ்ச்சொன்ன பூஜ்யதை பித்ருத்வத்தளவிலே நிற்குமது. இத்தால் 91 "**गरीयान् ब्रह्मदः पिता**" (கரீயாந் ப்ரஹ்மத: பிதா) என்று பூஜ்யதையின் எல்லை சொல்லுகிறது. (ந த்வத்ஸமோஸ்த்யப்யதிக: குதோऽந்ய:) 92 "**सर्वेलाभाय**" (ஸர்வலாபாய) ஆகையாலே த்வத்வ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களிலும் உனக்கு ஸத்ருசர் இல்லையென்ருல் அதிகர் இல்லையென்னுமிடம் சொல்லவேணுமோ? * "ஒத்தார் மிக்காரையிலையாய" இறே. (லோகத்ரயேऽப்யப்ரதிமப்ரபாவ) ஆகையாலே த்ரிவிதசேதநரிலும் காட்டில் ஒப்பில்லாத ப்ரபாவத்தையுடையவனே!

ஒன்பதாவது சூர்ணை அவதாரிகை:—அநந்தரம் கீழ் சரணம் புக்கவதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறது. ஆருடைய ஹ்ருதயத்தாலேயென்னில்: ஸ்வஹ்ருதயத்தாலே. அதென்னென்னில்: அநாதிகாலம் அபராதத்தைப்பண்ணிக் கூடு பூரித்தவன், இன்றாக ஆபிமுக்யம் பண்ணினனேயாகிலும் 81 "**रिपूणामभि वत्सलः**" (ரிபூணமபி வத்ஸல:)

* திருவாய் (2-3-2).

९. तस्मात्प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम्।
पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम्॥

9.தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம் ப்ரஸாதயே த்வாமஹமீசமீட்யம்।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு: ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ! ஸோடும்॥

९. प्रपत्तिं विवृणोति तस्मादिति। ईशमीड्यम् * "न तस्येशे कश्चन तस्य नाम महद्यशः" इतिवत्। पित्रादयस्तत्संबन्धाद्धि क्षमन्ते; अतः सर्वविधबन्धुत्वात् त्वया क्षन्तव्यमित्यर्थः। प्रार्थनापर्यन्तमहाविश्वासः प्रपत्तिः। महाविश्वासपूर्विका प्रार्थना वा॥

79 "यदि वा रावणः स्वयं" (யதி வா ராவண: ஸ்வயம்) என்கிற அவன்படி பார்த்தால் இவனைக்கைக்கொள்ளுகைக்கு ஒரு குறையுமில்லை. ஆகிலும் பதிவ்ரதையாயிருப்பாள் நெடுநாள் வ்யபிசரித்துப் பின்பு பர்த்தாவானவன் பழியாளன் என்கிற இதுவே ஆலப்பநமாக வந்து 'என்னை ரக்ஷிக்கவேணும்' என்று முன்னே நின்றால், வருகை தானே அபராதமாய், அதுக்குமேலே என்னை ரக்ஷிக்கவேணுமென்கையாவது அபராதத்துக்கு மேலெல்லையாய் ஸ்த்ரீத்வஹாநியுமாயிருக்குமிறே. அப்படியே, இவனும் அநந்யார்ஹஶேஷபூதனுமாயிருந்து வைத்து, கனக்க அபராதத்தைப் பண்ணிப்போந்து, இன்று வந்து ஶரணம் புகுருகையாவது அபராதத்துக்கு மேலெல்லையுமாய், ஶேஷத்வஹாநியுமாயிருக்கக்கடவதிறே. ஆனால், ஶரணம் புகுருகையும் அபராதத்துக்கு மேலெல்லையாகில், ஶரணம் புகுகிறதென் க்ஷாமணம் பண்ணுகிறதென்னென்னில்: 34 "तमेव शरणं गतः" (தமேவ ஶரணம் கத:) என்று காகத்தோபாதி புறப்பு புகலில்லாமையாலே ஶரணம் புகவும்வேணும். பூர்வவ்ருத்தத்தைப்பாரா பண்ணின இதுவும் அபராதமென்று பயஹேதுவாகையாலே க்ஷாமணம் பண்ணவும்வேணும்.

வ்யா:—(தஸ்மாத்) "த்வமேவ" இத்யாதிப்படியே நீயே ஸகலவிதபந்துவுமாகையாலே. செய்த குற்றம் பொறுக்கும்போது ஸகலவிதபந்துவுமாகவேணுப்போலேகாணும். அதுதன்னிலும், பர்த்தாவென்றாப்போலே ஒரு முறையேயாய் ஒருவழிப்பட்டு இருக்குமாகில், குற்றமேயாய்த்தலைக்கட்டுகையன்றிக்கே, ஸகலவிதபந்துவுமாயிருக்கை

* तै-ना (१-९)

யாலே இவனுக்குச் செய்யலாகாததில்லை, அவனுக்குப் பொறுக்க லாகாததுமில்லையென்கை. (ப்ரணம்ய) மாநஸமான தண்டன். (ப்ரணிதாய காயம்) காயிகமான தண்டன். இரண்டையும் சொல்லு கையாலே வாசிகம் அர்த்தாத் ஸித்தம். ஆக, த்ரிவித கரணங்க ளாலும் ஶரணம் புக்கபடி சொல்லிற்று. ஏதுக்காகவென்னில்: (ப்ரஸாதயே) ப்ரஸாதிப்பிக்கைக்காக. ஆரையென்னில்: (ஈஶமீட்யம் த்வாம்) ஶேஷியுமாய் ஸ்துத்யனுமாயிருந்துள்ள உன்னை. ஆரென் னில்: (அஹம்) அநந்யார்ஹஶேஷ பூதனுமாயிருந்துவைத்து, அபரா தத்தைப் பண்ணிப்போந்து இன்று வந்து ஶரணம் புக்க நான். ஈஶனென்கையாலே உடையவனென்றபடி. ஈட்யனென்றது—ஸ்துத்ய னென்றபடி. நினைத்தபடி செய்யப் புக்கால் நிவாரகரில்லாமைக்காக உடையவனென்கிறது. ஸ்துதிக்கவேண்டும் விஷயத்திலே த்வேஷித் துப்போந்தேன் என்று தம்முடைய இழவுதோன்ற 'ஈட்யன்' என்கிறார். பொறுக்கைக்குஹேது சொல்லுகிறது மேல். (பிதேவ புத்ரஸ்ய) புத்ரன் பண்ணின குற்றத்தைப் பிதா பொறுக்குமாப் போலவும். (ஸகேவ ஸக்யு:) தோழன் செய்தகுற்றத்தைத் தோழன் பொறுக்குமாப்போலவும். (ப்ரிய: ப்ரியாயா:) ப்ரியையினுடைய குற்றத்தை ப்ரியனானவன் பொறுக்குமாப்போலவும். ஸந்திரார்ஷ:. (ஸோடும்) பொறுக்கைக்கு ஸர்வவிதபந்துவுமாயிருக்கையாலே. (தேவ அர்ஹஸி) தேவரும் அப்படிக்கு அர்ஹர்.

பத்தாவது சூர்ணை அவதாரிகை:—ஆக, முதல் சூர்ணையிலே ப்ராப்யருசிக்கும், ப்ராபகவ்யவஸாயத்துக்குமாகப் பிராட்டி திருவடி களிலே ஶரணம் புக்கு, இரண்டாம் சூர்ணையிலே பிராட்டி ப்ரஸா தத்தாலே பெற்று, அநந்தரம் ஆச்ரயிக்கைக்குறுப்பான உபயவிபூதி நாதத்வம் சொல்லி, அநந்தரம் ஆச்ரயிக்கைக்குத் துணையான ஶீலாதிகுணங்களை முன்னிட்டு, பிராட்டி புருஷகாரமாகத் தாம் ஶரணம்புக்கு, அநந்தரம் பூர்வர்களுடைய ப்ரக்ரியையாலே ஶரணம் புக்கு, அநந்தரம் இதிஹாஸப்ரக்ரியையாலே ஶரணம்புக்கு, அநந்தரம் கீழ் விட்டவையடைய ஈச்வரனேயாகப்பற்றி, 'இதுதான் என்னளவேயன்று, ஸகலசேதநர்க்குமொக்கும்' என்று, கீழ்பண்ணின ப்ரபத்திக்கு க்ஷாமணம் பண்ணினர். † [பூர்வர்களுடைய ருசிபரிக்

† குண்டலிதம் சில ஸ்ரீகோசங்களிலில்லை.

१०. मनोवाक्कायैरनादिकालप्रवृत्तानन्ताकृत्यकरणकृत्याकरणभगवदपचारभाग - वतापचारासह्यापचाररूपनानाविधानन्तापचारान् आरब्धकार्यान् अनारब्ध- कार्यान् कृतान् क्रियमाणान् करिष्यमाणांश्च सर्वानशेषतः क्षमस्व॥

10. மநோவாக் காயை ரநாதி கால ப்ரவ்ருத்தாநந்தா க்ருத்ய கரண க்ருத்யாகரண பகவதபசார பாகவதாபசார அஸஹ்யாபசார ரூப நாவிதாநந்தாபசாராந் ஆரப்த கார்யாந் அநாரப்த கார்யாந் க்ருதாந் க்ரியமாணாந் க்ரிஷ்யமாணாம்ஶ் ச ஸர்வாந் அசேஷத: க்ஷமஸ்வ॥

---

अथ उत्तरखण्डं विवृण्वन् इष्टप्राप्तेरनिष्टनिवृत्तिपूर्वकत्वरूपार्थक्रमात् प्रथमं नमश्शब्दार्थमाह मन इत्यादिना। अनादिकालप्रवृत्तत्वमानन्त्ये हेतुः। प्रथमानन्तशब्दः सामान्यापराधविशेषणम्। सामान्यापराधमुक्त्वा विशेषा - पराधमाह भगवदिति। भगवदपचारः शिशुपालादिकृतः। भागवतापचारस्तु भागवतविषये अर्थादिनिमित्तान्तरेण कृतः। भागवतापचारो भगवदपचारः, भगवदपचारो भागवतापचार इति। भागवतभक्तविषयापचारः असह्यापचारः। आचार्यविषयापराधो वा। भागवते अभागवतत्वनिमित्तापराधो वा। अर्चा- वतारविग्रहस्य अवैलक्षण्यप्रतिपत्तिर्वा। एकैककोटयवान्तरभिदापरो नानाविध शब्दः। सर्वशब्दः अपराधव्यक्तिकात्स्न्यपरः। कर्मणां वैदिककर्मानर्हतापादन शक्तिः, प्रत्यवायकरत्वशक्तिः, वासनाजनकत्वशक्तिश्चास्ति। तत्र अन्यतम - शक्तिमात्रं क्षमाविषयो माभूदिति-अशेषत इत्युक्तम्।

---

ருஹீதமான அர்த்தமேயாகிலும் அவர்கள் பாசுரத்தை முன்னிடவே ஈச்வரன் திருவுள்ளம் ப்ரஸந்நமாம் என்று பார்த்து அவர்கள் பாசுரத்தாலே ஶரணம் புகுந்தார். அதவா 5 **"सकृदेव प्रपन्नाय"** (ஸக்ருதேவ ப்ரபந்நாய) என்று ஸக்ருத் ப்ரபத்திக்குக் கார்யம் செய்கைக்கு ஈச்வரன் சமைந்து நிற்க, ப்ராப்ய த்வராதிஶயத்தாலும், இதொழியச் செல்லாமையாலும் யார் பாசுரத்துக்கு ஈச்வரன் இரங்குமென்று அறியாதே பஹுமுகமாக ப்ரபத்திபண்ணினர்.] ஆக, இவ்வளவாலும் பூர்வகண்டார்த்தத்தை அநுஸந்தித்தாராய் நின்றார். இனி, உத்தரகண்டார்த்தத்தை அருளிச்செய்கிறார். அதில், அநிஷ்டநிவ்ருத்தியுண்டானலல்லது இஷ்டப்ராப்தி கிடையாமையாலே முந்துற நமஶ்ஶப்தார்த்தத்தை அருளிச்செய்கிறார். அதுதனக்கு தேஹாத்மாபிமாநம் தொடக்கமாக, கைங்கர்யத்தில் மமதாபுத்தியீறாக, நடுவுள்ள விரோதியைப்படையப் போக்கித்தர

வேணுமென்றிறே அர்த்தமாக நிர்வஹித்துப்போருவது. அதுதான் ஸகலகர்மக்ஷயத்தாலேயாய்த்து பிறப்பது. ஆகையாலே முந்துறக் கர்மத்தை அருளிச்செய்கிறார். நம்மாழ்வார் * "பொய்ந்நின்றஞான மும்" என்று அவித்யையை முதலாக அருளிச்செய்தார். இவர், 'கர்மத்துக்கடி அஜ்ஞானம், அஜ்ஞானத்துக்கடி தேஹஸம்பந்தம்' என்று கர்மத்தை முந்துற அருளிச்செய்கிறார். ஆழ்வாருக்கு ஸ்வாநுபவமாயிருக்கையாலே தேஹாத்மாபிமானத்வாரா நின்று அஹங்காரம் நலிகிற ப்ரகாரத்தாலே அவித்யை முன்னாக அருளிச் செய்தார். இவர்க்கு ஸ்வாநுபவமாயிருக்கச்செய்தே தர்சநத்துக்குக் கர்மப்ராதாந்யம் சொல்லிப்போருவதொரு நிர்ப்பந்தமுண்டாகை யாலே, அதினுடைய ஸ்திதிக்குறுப்பாகவும், மாயாவாதி அவித்யா நிவ்ருத்தி மோக்ஷம் என்று அவித்யையை ப்ரதாநமாகச் சொல்லு கையாலே அதினுடைய ப்ரதிக்ஷேபார்த்தமாகவும், இவர் கர்மம் முதலாக அருளிச்செய்கிறார். அவர் காரணபரம்பரையை அருளிச் செய்தார். இவர் கார்யபரம்பரையை அருளிச்செய்கிறார்.

வ்யா:—(மநோவாக்காயை:) கர்மத்துக்குப் பரிகரமேதென்று பார்த்தால் மநோவாக்காயங்கள். இவைதான் ஈச்வரனை லபிக்கைக்கும் அவனையிழந்து அநர்த்தப்படுகைக்குமுடலாயிருக்கும். 93 **"मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः"** (மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:) என்றிறே இருப்பது. (அநாதிகாலப்ரவ்ருத்த) அநாதி காலம் பண்ணிப்போந்த. (அநந்த) இவைதான் அளவிறந்திருக்கை. இவைதான் இருக்கும்படியென்னென்னில்: (அக்ருத்யகரண) இது வென்ன, (க்ருத்யாகரண) இதுவென்ன, (பகவதபசார) இதுவென்ன, (பாகவதாபசார) இதுவென்ன, (அஸஹ்யாபசார) இதுவென்ன, (நாநாவித) இப்படி பஹுவிதமாய், (அநந்தாபசாராந்) இவற்றில் ஒரோவிதமே அநந்தமாய், இப்படியுள்ளவைதான் அஸங்க்யாதமா யிருக்கை. இதிறே அபசாரத்தினுடைய அநல்பதையிருந்தபடி. 94 **"यद्ब्रह्मकल्पनियुतानुभवेऽप्यनाश्यं तत्किल्बिषं सृजति जन्तुरिह क्षणार्धे"** (யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப் யநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே) என்று நூறாயிரம் ப்ரஹ்மகல்பம் கூடினாலும் அநுபவித்து முடிக்கவொண்ணாத பாபத்தையிறே இச்சேதநன் ஒரு

* திருவிருத்தம்-1.

११. अनादिकालप्रवृत्त विपरीतज्ञानम् आत्मविषयं कृत्स्नजगद्विषयं च

11. அநாதிகாலப்ரவ்ருத்தம் விபரீதஜ்ஞாநம் ஆத்மவிஷயம் க்ருத்ஸ்ந ஜகத்விஷயஞ்ச

---

अथ मोक्षविरोधिपुण्यपापरूपं क्षामयति अनादीति। आत्मनो जगतश्च स्वातन्त्र्यधीः, देवतान्तरशेषत्वधीः, भगवच्छेषवस्तुनि स्वशेषत्वधीश्च विपरित-ज्ञानम्॥

---

க்ஷணார்த்தத்திலே பண்ணுவது. (ஆரப்தகார்யாந்) பலப்ரதாநத்தில் ஒருப்பட்டவை. (அநாரப்தகார்யாந்) ப்ரபல கர்மதிரோதாநத்தாலே அவஸரப்ரதீக்ஷமானவை. (க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாம்ஶ்ச) காலத்ரயத்திலுள்ளவையும். (ஸர்வாந்) இவைதான் சிலவற்றைச் சொல்லிற்றித்தனை. என்னால் சொல்லி முடிக்கவொண்ணாத எல்லாப் பாபங்களையும். (அஶேஷத: க்ஷமஸ்வ) ஸவாஸநமாகப் பொறுத்தருள வேணும்.

அக்ருத்யகரணமாவது,—ஶாஸ்த்ரவிருத்தமாமவற்றை அநுஷ்டிக்கை. க்ருத்யாகரணமாவது,—ஶாஸ்த்ரவிஹிதமாமவற்றை அநுஷ்டியாதொழிகை. 95 "विदुषोऽतिक्रमे दण्डभूयस्त्वम्" (விதுஷோऽதிக்ரமே தண்டபூயஸ்த்வம்), 96 "शक्तस्यातीव दोषवत्" (ஶக்தஸ்யாதீவ தோஷவத்) என்று ஶக்தனாயிருக்க அநுஷ்டியாதொழிந்தால் தோஷம் கனத்திருக்குமிறே. பகவதபசாரமாவது,—அமுதுபடி சாத்துபடிக்கு அர்ஹமாமவற்றை விச்சேதம்பண்ணுகை. அதாவது,—அவற்றைத் தான் வாங்கி ஜீவித்தல், பிறர்க்குபகரித்தல், அத்தாலே ஜீவிப்பார் பக்கலிலே யாசிதமாயாதல், அயாசிதமாயாதல் பரிக்ரஹித்து ஜீவித்தலும், அவதாரங்களில் ஸஜாதீயபுத்தி பண்ணுகையும், அர்ச்சாவதாரத்தில் உபாதாநஸ்ம்ருதியும், ஈச்வரன் பக்கல் தேவதாந்தரங்களோடு ஸஜாதீயபுத்தியும், அவனதான வஸ்துக்களில் மமதாபுத்தியும். இதுவும் அக்ருத்யகரணங்களில் ஒன்றாயிருக்கப் பிரிய எடுக்கவேண்டிற்று, இதினுடைய க்ரௌர்யாதிஶயமிருந்தபடி. பாகவதாபசாரமாவது—அர்த்தகாமாபிமாந நிமித்தமாக ஸ்ரீவைஷ்ணவர்களோடு விவாதம்பண்ணுகையும், ஜந்மவ்ருத்தாதிகளால் அவர்களைக் குறைய நினைக்கையும், விகலகரணர் பக்கல் க்ஷேபோக்திபண்ணுகையும்,

அஸஹ்யாபசாரமாவது-நிர்நிபந்தநமாக பகவத்பாகவதஸம்ருத்தியைக் கண்டால்பொறுக்கமாட்டாதே முட்டிக்கொள்ளுதல் நான்றுகொள்ளுதல் செய்கை. ஸ்ரீவைஷ்ணவனென்னுமிதுவே ஹேதுவாகப்ரத்வேஷம் பண்ணுகை. புத்ரவாத்ஸல்யம் செல்லாநிற்க, திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக அக்நிதாஹம் முதலான ஹிம்ஸையைப் பண்ணினுனிறே ஒருவன். சிசுபாலாதிகள் பண்ணினவை பகவதபசாரம். ராவணுதிகள் பிராட்டிபோல்வார் விஷயத்தில் பண்ணினவை பாகவதாபசாரம். ஹிரண்யாதிகள் ஸ்ரீப்ரஹ்லாதாதிகள் விஷயத்தில் பண்ணினவை அஸஹ்யாபசாரம்.

பதிஞென்ருவது சூர்ணை அவதாரிகை:—(அநாதிகாலப்ரவ்ருத்த) கீழ் *"பொல்லாவொழுக்கும்" என்கிறபடியே அக்ருத்யகரணுத்யபராதங்களைப் பொறுத்தருளவேணுமென்ருர். இங்கு, அதுக்கடியான விபரீதவ்ருத்தத்தாலுண்டான அபராதத்தைப் பொறுத்தருளவேணுமென்கிருர். வ்ருத்தஹாநி கீழே சொல்லிற்றில்லையோவென்னில்: அங்கு அக்ருத்யகரணக்ருத்யாகரணமென்று ஶாஸ்த்ரவிருத்தமானவற்றை அநுஷ்டிக்கையும், விஹிதாநுஷ்டாநம் பண்ணுதொழிகையுமாகிற வ்ருத்தஹாநி சொல்லிற்று. வேதாந்த விஷயஜ்ஞாநாபாவத்தால் வரும் சில வ்ருத்தஹானிகளுண்டு. அவற்றையாய்த்து இங்கு சொல்லுகிறது. ஆகையாலே புநருக்திதோஷமில்லை.

வ்யா:—(அநாதிகாலப்ரவ்ருத்த) அநாதிகாலம் பண்ணிப்போந்த. (விபரீதஜ்ஞாநம்) இது ஸ்வரூபஸ்பர்சியன்று. ஆனுல் ஒருநாளளவிலே வந்தேறிற்ருேவென்னில்: அங்ஙன் சொல்லவொண்ணுது. அநாதியென்னுமித்தனை. ஸ்வரூபஸ்பர்சியென்னலாம்படியிறே இதின் அநாதித்வம் இருப்பது. பகவத்ப்ரஸாதத்தாலே ஒருநாள்வரையிலே கழியக்காண்கையாலே வந்தேறியென்று அறிந்தவித்தனை. விபரீதஜ்ஞானமாவது,— ஓரர்த்தத்தில் அர்த்தாந்தரபுத்திபண்ணுகை. அதாவது,—ரஜ்ஜுவிலே ஸர்ப்பபுத்தியும் சுக்தியிலே ரஜதபுத்தியும். இதுக்கு விஷயமேதென்னில்: (ஆத்மவிஷயம் க்ருத்ஸ்ந ஜகத்விஷயஞ்ச) ஆத்மவிஷயமாகவும் க்ருத்ஸ்ந ஜகத்விஷயமாகவும். ஆத்மவிஷயமான விபரீதஜ்ஞாநமாவது,—தேஹாத்மாபிமாநம். க்ருத்ஸ்ந

* திருவிருத்தம்-1.

विपरीतवृत्तं चाशेषविषयम् अद्यापि वर्तमानं वर्तिष्यमाणं च सर्वं क्षमस्व॥

१२. मदीयानादिकर्मप्रवाहप्रवृत्ताम् भगवत्स्वरूपतिरोधानकरीम्

விபரீத வ்ருத்தஞ்ச அசேஷ விஷயம் அத்யாபி வர்த்தமாநம் வர்த்திஷ்ய மாணம் ச ஸர்வம் க்ஷமஸ்வ॥

12. மதீயாநாதிகர்மப்ரவாஹப்ரவ்ருத்தாம் பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்

---

पुण्यञ्च स्वतन्त्रात्मधीमूलत्वाद्भ्रान्तिमूलम्। भगवद्भागवतदेवतान्तर-भजनरूपं स्वार्थं स्वपुत्राद्यर्थञ्च यत्पुण्यं तत्–अशेषविषयं विपरीतवृत्तमित्युच्यते। आचार्यसेवादिना शास्त्रजन्यज्ञाने संपन्नेऽपि वासनावशादनुवर्तमानमित्यभि-प्रायेणोक्तम् अद्यापि वर्तमानमिति॥

अथ प्रकृतिः–मदीयेति। बीजाङ्कुरन्यायादनादिता। * "गुणमाया-समावृतः" इत्यस्यार्थमाह भगवत्स्वरूपेति॥

---

ஜகத்விஷயமான விபரீதஜ்ஞாநமாவது,–தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவர ஶரீரங்களிலே தத்தத்புத்திபண்ணுகை. (விபரீதவ்ருத்தம் ச) அதாவது,—விருத்தமாக அநுஷ்டிக்கை. க்ருதஸ்நஜகதவிஷயமான விபரீதவ்ருத்தமாவது,—ஒருவன் தனக்கோரபகாரம் பண்ணினல் ஸ்வகர்மபலமென்றும், தத்தத்கர்மாநுகுணமாக ஈச்வரன் ப்ரவர்த்தகன் என்றும் நினையாதே, நிமித்தமாத்ரமான சேதநனை ஸ்வதந்த்ரனாக புத்திபண்ணி, அவன் செய்தானென்று அவனுக்கு அபகரிக்கை. ஆத்மவிஷயமான விபரீதவ்ருத்தமாவது,—பரதந்த்ரனான தன்னை ஸ்வதந்த்ரனென்று நினைத்துத் தான் ப்ரவர்த்திக்கை. (அஶேஷ-விஷயம்) ஐச்வர்யாதிபுருஷார்த்தங்களை அபேக்ஷிக்கையும்; இப்படி ஸர்வவிஷயமாகவும் முன்பு செய்தவற்றையும். (அத்யாபி வர்த்தமாநம்) இப்போது செய்கிறவற்றையும். (வர்த்திஷ்யமாணஞ்ச) மேல் செய்யப் புகுகிறவற்றையும். (ஸர்வம் க்ஷமஸ்வ) அஜ்ஞனுகையாலே என்னால் அறிந்து தலைக்கட்டவொண்ணாது. ஸர்வஜ்ஞரான தேவர் அறிந்த எல்லாவற்றையும் பொறுத்தருளவேணும்.

பன்னிரண்டாவது சூர்ணை அவதாரிகை:—(மதீயாநாதி) கீழ் கர்மத்தையும் சொல்லி அதுக்கடியான அஜ்ஞாநத்தையும் சொல்லி

---

* जितन्ते (१-३)

நின்றார். இவ்வஜ்ஞாநத்துக்கடியான தேஹஸம்பந்தத்தைக் கடத்தியருளவேணுமென்கிறாரிங்கு. கீழ் "க்ஷமஸ்வ" என்றார். இங்கு "தாரய" என்கிறார். இங்ஙனே வேண்டுவானென்னென்னில்: கர்மமும் அஜ்ஞாநமும் நிக்ரஹரூபமாய்க்கொண்டு அவன் திருவுள்ளத்திலே கிடப்பதொன்றாகையாலே அவன் க்ஷமிக்க நசிக்கும். இவ்வசித்துத்தான் நித்யமாகையாலே நசிக்கவென்பதொன்றில்லை. இனி இதினின்றும் கழலுகையேயாய்த்து உள்ளது. ஆகையால் "தாரய" என்கிறார். ஈச்வரவிபூதியை அழிக்கவேணுமென்றன்றே இவருக்குக் கருத்து. இதினின்றும் தம்மை எடுக்கையிறே உள்ளது. பிரிக்கவென்னுதல் விடுவிக்கவென்னுதல் செய்யலாவது ஸ்வரூபம் தோற்றக் கிடக்கிலிறே. ஸ்வரூபம் நேராக நசித்து தேஹமாய்க் கிடக்கையாலே எடுக்கவேணுமென்கிறார். பாலும் நீரும் தன்னிலே கலந்தால், பாலிது நீரிது என்று பிரித்துக் காணவொண்ணாதபடியும், அது ஒரு பதார்த்தத்தின் கைப்பட்டவாறே ஸாரமான பாலை க்ரஹித்து ருஜீஷமான நீரைக்கழிக்குமாப்போலே ஒரு ஸர்வஶக்தி பிரித்தல், இல்லையாகில் நசித்தல் போலேகாணுமுள்ளது. 97 "मम माया दुरत्यया" (மம மாயா துரத்யயா) என்றும், 97 "मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते" (மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே) என்றும் நான் பண்ணின மாயை ஒருவராலும் கடக்கவொண்ணாதென்றும், என்னையே பற்றிக் கடக்கவேணுமென்றும் அருளிச்செய்கையாலே நீயே கடத்தியருளவேணுமென்கிறார்.

வ்யா:—(அநாதிகர்மப்ரவாஹப்ரவ்ருத்தாம்) அநாதிகாலம் பண்ணிப்போந்த கர்மப்ரம்பரையாலே உண்டானதாய். (மதீய) இதுதான் பிறருண்டாக்கினதொன்றன்றிக்கே, பகவத்ப்ரஸாதமடியாக வந்ததொன்றுமன்றிக்கே என்னாலே ஸம்பாதிக்கப்பட்டதொன்றென்கை. இது செய்யும் கார்யமென்னென்னில்: (பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்) வகுத்த சேஷியான தேவருடைய ஸ்வரூபத்துக்குத் திரோதாநத்தைப் பண்ணக்கடவதாய். அதாவது,—மறைக்கையென்றபடி. பகவத்ஸ்வரூபத்தை இது மறைக்கையாவதென் என்னில்: ஸ்ரிய:பதியாய், புருஷோத்தமனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், உபயவிபூதிநாதனாயிறே ஈச்வரனிருப்பது. இப்படியிருக்கக் குத்ருஷ்டிமுகத்தாலே "நிர்விஶேஷசிந்மாத்ரமாயிருப்ப

विपरीतज्ञानजननीम् स्वविषयायाश्च भोग्यबुद्धेर्जननीम् देहेन्द्रियत्वेन भोग्यत्वेन सूक्ष्मरूपेण चावस्थिताम् दैवीम् गुणमयीम् मायाम्, दासभूतम् 'शरणा - गतोऽस्मि तवास्मि दासः' इति वक्तारं मां तारय॥

விபரீத ஜ்ஞாந ஜநநீம் ஸ்வவிஷயாயாஶ் ச போக்ய புத்தேர் ஜநநீம் தேஹேந்த்ரியத்வேந போக்யத்வேந ஸூக்ஷ்மரூபேண சாவஸ்திதாம் தைவீம் குணமயீம் மாயாம் தாஸபூதம் "ஶரணாகதோஸ்மி தவாஸ்மி தாஸ:" இதி வக்தாரம் மாம் தாரய.

---

विपरीतज्ञानं-देहे अहंधीः। भोग्यभोगोपकरणरूपत्वमाह देहेत्यादिना। दैवीं-त्वल्लीलार्थाम्। "दासभूतं माम्" इति संबन्धः। "शरणागतोऽस्मि, तवास्मि" इति पूर्वोत्तरखण्डार्थः। वक्तारं * "भव शरणमितीरयन्ति" इति ह्युच्यते॥

---

தொரு வஸ்துவுண்டு; அல்லாதவையெல்லாம் அபரமார்த்தம்" என்னும் மாயாவாதி. "சிதசிதீச்வரதத்வங்கள் மூன்றுமுண்டு; அதில் சிதசித்துக்களிரண்டும் ஈச்வரஶேஷமாய், ஈச்வரன் அவற்றுக்கு ஶேஷியாயிருக்கிறனல்லன்; எல்லாம் கூடி ஏகத்ரவ்யபரிணாமம்" என்னும் பேதாபேதவாதி. "கர்மம் பண்ணுகைக்குத் தானுண்டாகில் அதின் பலம் புஜிப்பிக்கைக்குக் கர்மமுண்டாகில் இனி ஈச்வராபேக்ஷைதானென்? அதுகொண்டொரு தேவையில்லைகாண்!" என்னும் ஸாங்க்யவைஶேஷிகர்கள். ஆக இதுவாய்த்து மறைக்கையாவது. இதுக்கடி தேஹஸம்பந்தமாயிறேயிருப்பது (விபரீதஜ்ஞாந ஜநநீம்) அதுக்குமேலே விபரீதஜ்ஞாநத்துக்கும் உத்பாதிகையாய். விபரீதஜ்ஞாநமாவது,— அநாத்மந்யாத்மபுத்தி; அதாவது தேஹத்தில் ஆத்மபுத்தி பண்ணுகை. இத்தால் ஸ்வஸ்வரூபத்தை மறைத்தபடி சொல்லிற்று. ஆகத்தன்னையும் மறைத்து அவனையும் மறைத்ததிறே. இனி தேஹமேயிறே உள்ளது. இத்தால் தன்னரசு நாடாய்விட்டது என்றபடி. (ஸ்வவிஷயாயாஶ்ச போக்யபுத்தேர் ஜநநீம்) தன்னரசு நாடாய்த்தே; இனி கள்ளர் பள்ளிகள் ஸாம்ராஜ்யம் பண்ணுமித்தனையிறே. ஸ்வகார்யபூதமான ஶப்தாதிகளிலே போக்யபுத்தியைப் பிறப்பிக்குமதாய். (தேஹேந்த்ரியத்வேந போக்யத்வேந ஸூக்ஷ்ம

---

* वि-पु (३-७-३३)

ரூபேண சாவஸ்திதாம்) போகாயதநமான தேஹரூபத்தாலும் போகோப கரணமான இந்த்ரியரூபத்தாலும், போக்யமான சப்தாதிரூபத்தாலும், இத்தனைக்கும் கிழங்கான ஸூக்ஷ்மப்ரக்ருதி ரூபத்தாலும் அவஸ்தி தையாய், நாலுவகைப்பட்ட பரிணாமத்தையுடைத்தாய். (தைவீம்) தேவருக்கு க்ரீடாபரிகரமாய். (குணமயீம்) குணத்ரய ப்ரசுரையு மாய். அதாவது,—ஸ்வரூபந்தான் குணத்ரயாத்மகமுமாயிருக்கை. அதில் சேதநர் பரிக்ரஹித்த ஶரீரங்கள் தம:ப்ரசுரமாயும், ரஜ:ப்ரசு ரமாயும், ஸத்வப்ரசுரமாயுமிருக்கும். (மாயாம்) விசித்ரகார்யகரத் வத்தாலே மாயாஶப்தவாச்யையாய், விசித்ரபரிணாமிநியாகையாலே ஆச்சர்யத்தையுடைத்தாய். ஆச்சர்யம் எத்தாலேயென்னில்: பஞ்ச பூதங்களும் ஏகத்ரவ்யபரிணாமங்களாயிருக்க; அந்யோந்யம் பிந்நரூப மாயும் போக்யபோகோபகரணபோகஸ்தாநங்களாயும் சித்ரபடம் போலே ஆச்சர்யகரமாயிருக்கை. (மாம் தாரய) இப்படிப்பட்ட ப்ரக் ருதியிலே அகப்பட்ட என்னைக் கடப்பித்தருளவேணும் என்கிறார். "நாம் எடுத்துவிடுகைக்கடியாக நீர் செய்துவைத்ததேதேனும் உண்டோ? என்கொண்டு என்னை எடுத்துவிடச் சொல்லுகிறது?" என்று பெரிய பெருமாள் திருவுள்ளமாக, "என் பக்கல் கைம்முத லுண்டாய்ச் சொல்லுகிறேனோ? அநாதி காலம் துஷ்கர்மங்களைப் பண்ணிப்போந்தேனேயாகிலும், தேஹாத்மாபிமானியாய்ப் போந்தே னேயாகிலும், ஶப்தாதிவிஷயப்ரவணனாய்ப்போந்தேனேயாகிலும், ஸ்வரூபத்தை நிரூபித்தவாறே உனக்கு அநந்யார்ஹஶேஷமாயிருக்கும் என்னுமிவ்வளவாலே சொல்லுகிறேனென்கிறார்,—(தாஸபூதம்) என்று. "அது ஸர்வஸாதாரணமன்றோ; ஆனபின்பு நாம் கார்யம் செய்கைக்கு உம்முடையபக்கல் ஏதேனுமொரு வ்யாவ்ருத்திவேணுமே" என்ன,—(ஶரணாகதோ஽ஸ்மி தவாஸ்மி தாஸ இதி வக்தாரம்) "ஶரணாக தோஸ்மி" என்றும், "தவாஸ்மி" என்றும், "தாஸ:" என்றும் சொன்னேன். தேவரே உபாயமென்றும் உபேயமென்றும், நான் தேவருக்கு அநந்யார்ஹஶேஷமென்றும் சொன்னேன். (வக்தாரம் மாம்) இப்படி உக்திப்ரதனாயிருந்துள்ள என்னை. (தாரய) இவ்வுக்தி மாத்ரத்தையே பற்றாசாகக்கொண்டு கடப்பித்தருளவேணும்.

---

பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் பதின்மூன்றாவது சூர்ணை வியாக்கியானத்திலிருந்து சரணாகதிகத்ய வ்யாக்யானம் முடிவுவரையில் 1882-வது வருஷத்திலச்சிடப்பட்ட தமிழ்ப் பிரதிக்கும், க்ரந்தமுத்ராபகஸபை தெலுங் குப் பதிப்புக்குமிடையே மிகவதிகமான பாடபேதங்களிருப்பதால் மேலே தமிழ்ப் பதிப்பையும், கீழே தெலுங்குப்பதிப்பையும் தருகிறோம் இனிமேல்.

१३. तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥

13. தேஷாம் ஜ்ஞாநீ நித்ய யுக்த ஏகபக்திர் விசிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்த மஹம் ஸ ச மம ப்ரிய:॥

---

अथ चतुर्थ्यर्थसिद्धप्राप्तिं प्रार्थयते तेषामित्यादिना । परभक्तिस्थाने प्रपदनं। परज्ञानमरमभक्ती देहसंबन्धवेलायामुपासकस्य उपायकोटिनिविष्टे। प्रपन्नस्य तु ते उभयकोटिघटिते। अतः परज्ञानं प्रार्थितं तेषामित्यादिना॥

---

பதின்மூன்றுவது சூர்ணை அவதாரிகை:—(தேஷாமித்யாதி) ஆகக் கீழ் நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்றாய்நின்றது. நமஶ்ஶப்தத்துக்கு அர்த்தம் விரோதிநிவ்ருத்தியிறே. அவ்வளவும் போராதே இவருக்கு. பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷரூப கைங்கர்யஸித்தியும் வேணுமே. இக்கைங்கர்யோபயோகியுமாய், கைங்கர்யத்தோபாதி ஆதரணீயமுமாய், ப்ராப்யபூமியிலும் அநுவர்த்திக்குமவையான பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை அபேக்ஷிப்பாராய், அதுக்குப் பூர்வபாவியாயிருந்துள்ள அநந்யப்ரயோஜநமான பக்திரூபாபந்நஜ்ஞாநத்தை, ஸ்ரீ கீதோபநிஷதாசார்யன் அருளிச்செய்த ச்லோகத்ரய முகத்தாலே அபேக்ஷிக்கிறார்.

வ்யா:-(தேஷாம்) 98 "**आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी**"(ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ) என்கிற ஐச்வர்ய கைவல்ய பகவச்சரணார்த்தி

---

பதின்மூன்றுவது சூர்ணை அவதாரிகை:—கீழ் நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்றாய் நின்றது. நமஶ்ஶப்தத்துக்கு அர்த்தம் விரோதி நிவ்ருத்தியிறே. அவ்வளவும் போராதே இவர்க்கு. பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷமான கைங்கர்யஸித்தியும் வேணுமே. இக்கைங்கர்யோபயோகியுமாய், இக்கைங்கர்யத்தோபாதி ப்ரியவிஷயமுமாய், ப்ராப்யபூமியிலும் அநுவர்த்திக்குமவையான பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தியை அபேக்ஷிக்க நினைத்து அவைதானுண்டாவது அவற்றுக்குப் பூர்வபாவியாயிருந்துள்ள அநந்யப்ரயோஜநதயா பக்திரூபாபந்நஜ்ஞாநமுடையார்க்காகையாலே அதினுடைய ஸித்த்யர்த்தமாக கீதோபநிஷதாசார்யன் அருளிச்செய்த ச்லோகத்ரயத்தையும் முன்னிட்டு அந்த ஜ்ஞாநத்தையுமுண்டாக்கியருளவேணும் என்கிறார்.

வ்யா:—(தேஷாம்) 98 "**आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ**" (ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப) என்று சொல்

களில் வைத்துக்கொண்டு. (ஜ்ஞாநீ) ஜ்ஞாநியானவன், (விஶிஷ்யதே) விசேஷமுடையவனுகச் சொல்லப்படுகிறுன். அவனுக்கு ஏற்றமே தென்னில்: (நித்யயுக்த:-ஏகபக்தி:) இதிறே அவனுக்குள்ள ஏற்றம். நித்யயுக்தனுகையாவது,—ஒரு ப்ரயோஜனத்துக்காக என்னைப்பற்றி அது கைப்பட்டவாறே அகலுகையன்றிக்கே என்னையே ப்ரயோஜநமாகப் பற்றுகை. ஏகபக்தியாவது,—ஒரு ப்ரயோஜநத்தில் ஸ்நேஹத்தைப் பண்ணி, தத்ஸித்த்யர்த்தமாக என்பக்கலிலும் ஸ்நேஹம் பண்ணுகையன்றிக்கே, என்னையே ப்ரயோஜநமாகப் பற்றினவனுகையாலே தன் ஸ்நேஹத்திற்கு என்னையே விஷயமாக்குகை. (ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம்) ஜ்ஞாநிநோऽஹமத்யர்த்தம் ப்ரியோ ஹி. ஜ்ஞாநிக்கு நான் அத்யர்த்தம் ப்ரியனுயிருப்பன். என்பக்கல் அவனுக்குண்டான ப்ரீதிக்குப் பாசுரமிடவொண்ணுது. அபிதேய வசநः- அர்த்தஶப்த:. (ஸ ச மம ப்ரிய:) அவனும் எனக்கு ப்ரியனுயிருப்பன். தன் பக்கல் அவனுக்குண்டான ப்ரேமத்தை அத்யர்த்தம் என்று சொல்லி, அவனிடத்தில் தனக்குண்டான ப்ரேமத்தைக் குறையச் சொல்லுகிறது என்கொண்டு? அவனுடைய ப்ரேமத்துக்குக் குறைந்

---

லுகிற ஐச்வர்ய கைவல்ய பகவச்சரணுர்த்திகளில் வைத்துக்கொண்டு. (ஜ்ஞாநீ) ஜ்ஞானியானவன். அவனென்னென்னில்: (விஶிஷ்யதே) விஶேஷமுண்டு. அவனுக்கு ஏற்றமென்னென்னில்: (நித்யயுக்த:—ஏக-பக்தி:) இது ஏற்றம். நித்ய யுக்தனுகையாவது,—ப்ரயோஜநத்துக்காக என்னைப்பற்றி ப்ரயோஜநம் கைப்பட்டவாறே அகன்றுபோகையன்றிக்கே, என்னையே ப்ரயோஜநமாகப்பற்றினவன். (ஏகபக்தி:) ப்ரயோஜநத்திலே ஸ்நேஹத்தைப் பண்ணி ப்ரயோஜநஶ்ரத்தை மிகுதியாலே என்பக்கலிலும் ஸ்நேஹத்தைப்பண்ணுகையன்றிக்கே என்னையே ப்ரயோஜநமாகப்பற்றினவனுகையாலே ஸ்நேஹத்துக்கும் நானே விஷயமாகை. (ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம்) ஜ்ஞாநிநோஹமத்யர்த்தம் ப்ரியோ ஹி. ஜ்ஞாநிக்கு நான அத்யர்த்த ப்ரியனுயிருப்பன். என்பக்கல் அவனுக்குண்டான ப்ரியத்துக்குப் பாசுரமிடப்போகாது. அபிதேயவசநः—அர்த்தஶப்த: (ஸ ச மம ப்ரிய:) அவனும் எனக்கு ப்ரியனுயிருக்கும். 'அவனுக்கு நான் அத்யர்த்த ப்ரியன்' என்றும், 'அவனும் எனக்கு ப்ரியன்' என்றும் அவன்பக்கல்

उदारास्सर्वे एवैते ज्ञानी त्वात्मैव मे मतम्।
आस्थितस्स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम्॥
உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்।
ஆஸ்திதஸ் ஸஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம்॥

ததோ தன்னுடைய ப்ரேமம்? என்னில்: அவன் றன்னளவிலேயாயிருக்கும் அவன் ப்ரீதி. தன் ப்ரீதி தன்னளவிலேயாயிருக்கும், அணுபூதனுக்குள்ளளவளவேயோ விபுவுக்குப்? குளப்படி கலக்கினுப் போலன்றே கடல் கலங்குவது. ஆயிருக்க, அவன் ப்ரேமத்துக்கு என் ப்ரேமம் எங்கே கிடப்பது என்று அருளிச்செய்கிறான் தன் வாத்ஸல்யாதிஶயத்தாலே. அன்றிக்கே, ஸர்வஶக்தியான தன்னாலும் அபரிஹார்யமாயிருக்கையாலே அதுவே கனத்திருக்குமென்கிறானாகவுமாம். * பயாநாமபஹாரியாலும் பரிஹரிக்கவொண்ணாத பயத்தை விளைப்பிக்குமதொன்றிறே. பயநிவ்ருத்திக்குடலாமவையே பயத்துக் குடலாம்படியிறே அவன் ப்ரேமமிருப்பது.

(உதாராஸ் ஸர்வ ஏவைதே) யாவர் சிலர் யாதொன்றை அபேக்ஷிக்குமிடத்தில் தேவதாந்தரங்கள் பக்கலாதல், மநுஷ்யர்பக்கலாத

தனக்குண்டான ப்ரியத்தைக் குறையச்சொல்லவேண்டுகிறதென? அவனுடைய ப்ரியத்தில் தன்னுடைய ப்ரியம் குறைந்தோவிருப்பது? என்னில்: அங்ஙனன்று. அவன் தன்னளவிலே ப்ரியன். நான் என்னளவிலே ப்ரியன்; அணுவுக்குள்ளதன்றே விபுவுக்குள்ளது. குளப்படி கலங்கினுப்போலன்றே கடல் கலங்குவது. இப்படியிருக்கத் தன் வாத்ஸல்யத்தாலே,'அவனுடைய ப்ரியத்துக்கு என்னுடைய ப்ரியம் எங்கே கிடக்கும்' என்னும் நினைவாலே சொல்லுகிறான். அங்ஙனன்றியிலே ஸர்வஶக்தியாலும் பரிஹரிக்கவொண்ணாத பயத்தைவிளைப்பதான ப்ரியமாகையாலே அதுதானே அத்யர்த்தமென்னவுமாம். * பயாநாமபஹாரியாலும் பரிஹரிக்கவொண்ணாத பயத்தை விளைப்பிப்பதொரு ப்ரியமிறே. பயநிவ்ருத்தி ஹேதுக்கள்தானே பயப்ரவ்ருத்திஹேதுக்களாய்த்து.

(உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்। ஆஸ்திதஸ் ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம்॥) (உதாரர்ஸ்

* வி. பு. (1-17-36)

லன்றிக்கே என் பக்கலிலேயே அபேக்ஷிக்கிறார்கள் அவர்களத்தனை வருமுதாரர். (ஜ்ஞாநீ து) அவர்களில் வைத்துக்கொண்டு விலக்ஷண னாகிறான் ஜ்ஞாநி. அவனுக்கு வைலக்ஷண்யமென்னென்னில்: (ஆத்மைவ) ஜ்ஞாநியானவன் எனக்கு ஆத்மாவாயிருப்பவன். எனக்கு தாரகனென்றபடி. அவதாரணத்தாலே ஒருகாலத்தில் இவன் தாரகனாய் காலாந்தரத்தில் மற்றைப்படியாயிருக்கையன்றிக்கே, எப்போதுமொக்க இவனே தாரகனென்கிறது. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தானொரு சேதநன் * "உண்ணும் சோறு பருகுநீர்" என்கிற படியே தாரகாதிகளெல்லாம் ஈச்வரனே என்று நினைத்திருக்கை ப்ராப்தம். ஆயிருக்க, இது விபரீதமாயிருந்ததீ என்ன,—(மே மதம்) ஆராலும் நினைத்தபடி நினைத்திடுக, முந்துற முன்னம் என் நினைவு இதுவேயென்கிறான். (ஆஸ்திதஸ் ஸஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம்) (அநுத்தமாம் கதிம் மாமேவ) தன்னையொழிந்ததாய், தனக்கு மேலாயிருப்பதொன்றின்றிக்கே பரமப்ராப்யமான என்னையே.

---

ஸர்வ ஏவ) யாதொன்றை யாவர்சிலர் அபேக்ஷிக்குமிடத்து தேவதாந் தரங்களைப் பற்றியாதல், மநுஷ்யாந்தரங்களைப் பற்றியாதலன்றிக்கே என்னையே பற்றி அபேக்ஷிக்கிறார்கள் அவர்களித்தனைவரும் உதாரர். அவர்களில் வைத்துக்கொண்டு, (ஜ்ஞாநீது) ஜ்ஞாநிக்கு விசேஷ முண்டு. விசேஷமென்னென்னில்: (ஆத்மைவ) ஜ்ஞாநியானவன் எனக்கு ஆத்மா; எனக்கு தாரகனென்றபடி. "ஏவ" என்கிற அவதாரணத்தாலே ஒரு காலத்திலே இவனுக்கு தாரகனாய், காலாந் தரத்திலே வேறொன்று தாரகமாயிருக்குமோவென்னில்: ஸர்வகால மும் இவன் எனக்கு தாரகன். பகவதஜ்ஞாநம் பிறந்தானொருவன் * "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்" என்று தாரகபோஷக போக்யங்களுடைய ஈச்வரனென் றன்றோ நினைத்திருப்பது. அது விபரீதமாயிருந்ததீயென்ன,—(மே மதம்) அவன் நினைத்தபடி நினைத்திருக்கிறான். எனக்கு நினைவு இப்படியே. (ஆஸ்திதஸ் ஸஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம்) அநுத்தமாம் கதிம் மாமேவ யுக்தாத்மா ஆஸ்திதஸ் ஸஹி. இப்படி ஆஸ்தாநம் பண்ண அநுத்தமகதியான என்னை. அநுத்தமமான கதி

---

* திருவாய் (6-1-7).

बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।
वासुदेवस्सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥
इति श्लोकत्रयोदितज्ञानिनं मां कुरुष्व ॥

பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே ।
வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥
இதி ச்லோகத்ரயோதித ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ ॥

---

(யுக்தாத்மா) கூடினவனாய். (ஆஸ்திதஸ் ஸ ஹி) இப்படி த்யானம் பண்ணுவான் அவனேயிறே.

(பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே) (பஹூநாம் ஜந்மநாமந்தே) யாவனொருவன் அநேக ஜந்மங்கள் கூடி என்னையே ஆராதித்து ஜந்மாந்தரத்திலே, (ஜ்ஞாநவாந்) மதேகவிஷய ஜ்ஞாநவானாய், (மாம்) என்னை, (வாஸுதேவஸ் ஸர்வமிதி) † "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும்" என்றும், 99 "माता पिता भ्राता" (மாதா பிதா ப்ராதா) என்றும், ‡ "எல்லாம் கண்ணன்" என்றும் சொல்லுகிறபடியே, த்பஜித்தவையெல்லாம் அவனேயென்று, (ப்ரபத்யதே) பற்றுகிறான்; அத்யவஸிக்கிறான் என்றபடி. (ஸ மஹாத்மா) அவன் அறப்பெரியன். ஹேயப்ரதிபடனைகையாலே

---

யாகிறது, தனக்குமேல் உத்தமத்தை உடைத்தன்றிக்கேயிருப்பதொன்று. பரமப்ராப்யனை என்னையே (யுக்தாத்மா) கூடுகிறவன். (ஆஸ்திதஸ் ஸ ஹி) இப்படி ஆஸ்தாநம் பண்ணுகிற்குப். த்யாநப்பண்ணுகிற்கும்.

(பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே । வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:॥) யாவனொருவன் அநேக ஜந்மங்கள் கூட என்னையே ஆராதித்து ஜந்மாந்தரத்திலே (ஜ்ஞாநவாந்) மதேகவிஷயஜ்ஞாநவானாய், (மாம்) என்னை, (வாஸுதேவஸ் ஸர்வம்) † "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையும் அவரேயினியாவார்" என்றும், 99 "माता पिता भ्राता निवासः शरणं सुहृद्गतिर्नारायणः" (மாதா பிதா ப்ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாரயண:) என்றும், ஸர்வவித பந்துவுமாக, (ப்ரபத்யதே) யாவனொருவன் பற்றுகிறான், (இதி)

---

† திருவாய் (5-1-9). ‡ திருவாய் (6-7-1)

நமக்கு ஸம்பந்தஜ்ஞாநமுண்டாகலாம். பத்தனை இவன் அத்தை உணர்ந்திருக்கையாலே அவனுக்கு நாமும் ஒப்பாகமாட்டோம். (ஸுதுர்லப:) அங்ஙனிருப்பானொருவனை ஸம்ஸாரத்திலும் கிடையாது, பரமபதத்திலும் கிடையாது என்கிறான். தேசிகரையுமுட்படக் கலக்க வற்றான இருள்தருமாஞாலத்திலிருந்தே தெளிந்திருக்குமதிகாரியை உபயவிபூதியிலும் கிடையாது என்றபடி. நாமும் ஆசைப்பட்டே போமித்தனை போக்கி, இவன்றனை அதிகாரியை நமக்குங்கூடக் கிடையாதுகாண் என்கிறான். (இதி) இப்படி. (ச்லோகத்ரயோதித ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ) கீழ்ச்சொன்ன ச்லோகத்ரயத்திலும் ப்ரதிபாதிக்கப்பட்ட ஜ்ஞாநத்தையுடையனும்படி என்னைப் பண்ணியருளவேணும். முதல் ச்லோகத்தில் அவனே நமக்கு ப்ரியனென்றான். இரண்டாம் ச்லோகத்தில் அவனே நமக்கு தாரகனென்றான். மூன்றாம் ச்லோகத்தில்

---

இப்படியிருக்கிறவன், (ஸ:) அவன், (மஹாத்மா) அறப்பெரியனன்றோ? அவனையொப்பாரில்லை. அவனுக்கு நாமும் ஒப்பல்லோம். ஆவதென்? இது ப்ரசம்ஸையோவென்னில்: அன்று; உண்மை. இதுக்கு ஹேதுவென்னென்னில்: நமக்கு ஸம்ஸாரதுரிதமாகிற கலக்கம் தட்டாதிருக்கையாலே ஸம்பந்தத்தை உணர்ந்திருக்கலாம். அங்ஙனன்றிக்கே ஸம்ஸாரத்திலே பத்தனாய்க் கலங்கியிருக்கிறவன் ஸம்பந்தத்தை உணர்ந்திருக்கையாலே அவனுக்கு நாமும் ஒப்பல்லோம். (துர்லப:) அவனை ஸம்ஸாரத்தில் கிடையாது. (ஸுதுர்லப) பரமபதத்திலும் கிடையாது. இப்படிக் கலக்கத்திலும் தெளிந்திருக்குமவனை உபயவிபூதியிலும் கிடையாதுகாண் என்றபடி. நாமும் ஆசைப்பட்டே போமித்தனையல்லது, அவனை நமக்குங்கூடக் கிடையாதுகாண் என்கிறான். அதாவதென்னென்னில்: * "தெளிவிசும்பு". என்கிறபடியே தெளிவிக்கையே ஸ்வபாவமாயிறே இருப்பது அத்தேசம். இது § "இருள் தருமா ஞாலம்" என்கிறபடியே அத்தேசிகர் இங்கே வரிலும் கலக்குகையே ஸ்வபாவமாயிறே இருப்பது. (இதி ச்லோகத்ரயோதித ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ) இப்படி ச்லோகத்ரயத்திலும் சொல்லுகிற ஜ்ஞாநத்தையுடையேனும்படி பண்ணியருளவேணும். முதல் ச்லோகத்தாலே அவன் எனக்கு

---

* திருவாய் (9-7-5) § திருவாய் (10-6-1)

१४. *पुरुषस्स परः पार्थ! भक्त्या लभ्यस्त्वनन्यया *भक्त्या त्वनन्यया शक्यः, * मद्भक्तिं लभते पराम् * इति स्थानत्रयोदितपरभक्तियुक्तं मां कुरुष्व॥

14. * புருஷஸ் ஸ பர: பார்த்த! பக்த்யா லப்யஸ் த்வநந்யயா * பக்த்யா த்வநந்யயா ஶக்ய: * மத்பக்திம் லபதே பராம் * இதி ஸ்தாநத்ரயோதித பரபக்தி யுக்தம் மாம் குருஷ்வ॥

१५. परभक्तिपरज्ञानपरमभक्त्येकस्वभावं मां कुरुष्व॥

15. பரபக்தி பரஜ்ஞாந பரமபக்த்யேக ஸ்வபாவம் மாம் குருஷ்வ॥

---

१४. अथ परमभक्तिप्रार्थनं "पुरुषः स परः" इत्यादिना। व्यवहितत्वात् स्थानत्रयेत्युक्तम्, न तु श्लोकत्रयेति॥

१५. अथ बन्धनिवृत्तेरनन्तरभाविनीः परभक्तिपरज्ञानपरमभक्तीः प्रार्थयते परभक्तीति॥ अत एव हि एकस्वभावमित्युक्तम्। पूर्ववदर्थः॥

---

'இவையிரண்டுக்கும் விஷயமுள்ளது அத்தனையதிகாரியைக் கிடைக்கிலன்றே; மூன்றுறமுன்னம் அவனைக் கிடையாது' என்றான்.

பதினாலாவது சூர்ணை அவதாரிகை:—(* 'புருஷஸ் ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ் த்வநந்யயா' † 'பக்த்யா த்வநந்யயா ஶக்ய:' § 'மத்பக்திம் லபதே பராம்' இதி ஸ்தாநத்ரயோதித பரபக்தியுக்தம் மாம் குருஷ்வ) முன் பரபக்த்யாதிகளுக்குப் பூர்வபாவியான பக்தி ரூபாபந்ந ஜ்ஞாநத்தையபேக்ஷித்தார். இங்கு கைங்கர்யத்துக்குப் பூர்வபாவியான பரபக்த்யாதிகளை அபேக்ஷிக்கிறார்.

---

ப்ரியனென்றான். இரண்டாம் ஶ்லோகத்தாலே அவன் எனக்கு தாரகனென்றான். மூன்றாம் ஶ்லோகத்தாலே 'அவையிரண்டுக்கும் விஷயமுள்ளது அவனைக் கிடைக்கிலன்றே; அவனைக் கிடையாது காண்' என்றான். —

பதினாலாவது சூர்ணை அவதாரிகை:—(புருஷஸ் ஸ பர:) ஆகக் கீழ் பரபக்த்யாதிகளுக்குப் பூர்வபாவியான பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தை அபேக்ஷித்தார். இனி, அநந்தரம் கைங்கர்யத்துக்குப் பூர்வபாவிகளான பரபக்த்யாதிகளை அபேக்ஷிக்கிறார்.

---

* கீதை (8--22) † கீதை (11-54) § கீதை (18-54).

வ்யா:—அதில் பரஜ்ஞாந பரம பக்திகள் பரபக்திகார்யமாய் அதுண்டானாலுண்டாமதாகையாலே அத்தை ப்ரதானமாய் எட்டாமோத்திலும் பதினோராமோத்திலும் பதினெட்டாமோத்திலும் * (புருஷஸ் ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ் த்வநந்யயா) என்றும், † (பக்த்யா த்வநந்யயா ஶக்ய:) என்றும், § (மத்பக்திம் லபதே பராம்) என்றும் ஸ்ரீ கீதோபநிஷதாசார்யன் அருளிச்செய்த பரபக்தியுக்தனாக என்னைப் பண்ணியருளவேணும் என்கிறார்.

பதினைந்தாவது சூர்ணை வ்யாக்யாநம்:—(பரபக்தி பரஜ்ஞாந பரம பக்த்யேக ஸ்வபாவம் மாம் குருஷ்வ) இவை மூன்றும் எனக்கு யாவதாத்மபாவியாக உண்டாகவேணும் என்கிறார். இங்கு பரபக்த்யாதிகளை அபேக்ஷிக்கிறது கைங்கர்யோபகரணதயாவல்லது, நிரபேக்ஷோபாய ஸ்வீகாரம் பண்ணினவராகையாலே உபாயதயாவல்ல.

---

வ்யா:—அதில் பரஜ்ஞாந பரமபக்திகள் பரபக்திகார்யமாய் இது உண்டானால் அது தனக்குத்தானே உண்டாம். ஆகையாலே அத்தையே ப்ரதாநமாய் எட்டாமோத்திலும், பதினோராமோத்திலும் பதினெட்டாமோத்திலுமாக மூன்று ப்ரதேஶத்தில் பரபக்தியினுடைய வேஷத்தை கீதோபனிஷதாசார்யன் அருளிச்செய்தபடி * (புருஷஸ் ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ் த்வநந்யயா) † (பக்த்யா த்வநந்யயா ஶக்ய:) § (மத்பக்திம் லபதே பராம்) என்று உபாதானம் பண்ணி, (இதி ஸ்தாநத்ரயோதித) இப்படி மூன்று ப்ரதேஶத்திலும் சொல்லுகிற, (பரபக்தியுக்தம் மாம் குருஷ்வ) பரபக்தியுக்தனாக என்னைப் பண்ணியருளவேணும் என்கிறார்.

பதினைந்தாவது சூர்ணை வ்யாக்யாநம்:—(பரபக்தி பரஜ்ஞாந பரம-பக்த்யேக ஸ்வபாவம் மாம் குருஷ்வ) இப்பரபக்தியும் பரபக்தி கார்யமான பரஜ்ஞாநமும், பரஜ்ஞாநகார்யமான பரமபக்தியும் எனக்கு ஸ்வபாவமாகவேணுமென்று அபேக்ஷிக்கிறார். யாவதாத்மபாவி ஒருபடிப்பட உண்டாகவேணுமென்று அபேக்ஷிக்கிறார். அதுவென்? அத்தேஶவிஶேஷத்தில் அநுபவம் பரமபக்திக்ருதமாயிருக்குமாகில் அதுவே அமையாதோ? பரபக்திபரஜ்ஞாநங்களும் யாவதாத்மபாவியாகவேணும் என்று அபேக்ஷிக்கிற இதுக்கு ஹேதுவென்னென்னில்: அத்தேசவிஶேஷத்தில் அநுபூதாம்ஶமே நாள்தோறும் அநுபவித்துப்

१६. परभक्तिपरज्ञानपरमभक्तिकृतपरिपूर्णानवरतनित्यविशदतमानन्यप्रयोजनानवधिकातिशयप्रियभगवदनुभवोऽहं तथाविधभगवदनुभवजनितानवधिकातिशयप्रीतिकारिताशेषावस्थोचिताशेषशेषतैकरतिरूपनित्यकिङ्करो भवानि॥

16. பரபக்தி பரஜ்ஞாந பரம பக்தி க்ருத பரிபூர்ணாநவரத நித்ய விசத தமாநந்ய ப்ரயோஜநா நவதிகாதிசய ப்ரிய பகவதநுபவோஹம் ததா வித பகவதநுபவஜநிதாநவதிகாதிசய ப்ரீதிகாரிதா சேஷாவஸ்தோசிதாசேஷ சேஷதைகரதி ரூப நித்ய கிங்கரோ பவாநி॥

---

१६. अथ भगवदनुभवजनितप्रीतिततत्करितकैङ्कर्याणि प्रार्थयते परेति। पूर्ववदर्थः। शेषतैकरतिरूपशब्दो बहुव्रीहिः॥

---

பதினாறுவது சூர்ணை அவதாரிகை:—பரபக்த்யாதிகளால் பண்ணும் கைங்கர்யவேஷத்தை இரண்டாம் சூர்ணையிலே பரக்க அரு

---

ளிச்செய்தாரே. பின்னையும் இங்கு அத்தை ப்ரார்த்தியா நிற்பானென்னென்னில்

போருகிறதாகில் அதுவே அமையும். தன் விடாயாலே அதுவும் நித்யமாகவும் தட்டில்லை. எது போலேயென்னில்: நாள்தோறும் சோற்றையே ஜீவியாநிற்கச்செய்தே, அதில் ரஸாந்தரமின்றிக்கே யிருக்கச்செய்தேயும் தன் விடாயாலே அது நித்யாநுபவமாகிறாப் போலே. அங்ஙனன்று பகவத் விஷயம். த்ரிபாத்விபூதியும் யாவதாத்ம பாவியாய் அநுபவியாநின்றாலும் அநுபூதாம்ஶம் அல்பமாய், அநுபாவ்யாம்ஶம் விஞ்சியிருக்கும்படியான அபரிச்சேத்யதை அவ்விஷயத்துக்கு உண்டாகையாலே அநுபாவ்யாம்ஶம் அபூர்வமாயிருக்கும். அதில் ஈச்வரன் அநுபவார்த்தமாக இவனுக்கும் அபூர்வதர்ஶநத்தைப் பண்ணுவிக்கும். அப்போது கண்டபோதே மேல்விழுகையும், அநந்தரம் இதிலே ஜ்ஞாநம் ஸஞ்சரிக்கையும், பின்பு பெறுவிடில் முடியும்படியான தசைபிறக்கையுமான இப்பாகம் அபூர்வதர்ஶநத்திலே உண்டாமவையாகையாலே, "இப்பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளுடைய ஸ்வபாவம் யாவதாத்மபாவி ஒருபடிப்பட எனக்கு உண்டாகவேணும்" என்று அபேக்ஷிக்கிறார். பரபக்திதன்னைக் கைங்கர்யோபகரணதயாவல்லது உபாயபுத்த்யா அபேக்ஷிக்கிறாரல்லர். "த்வத்பாதாரவிந்த யுகளம் ஶரணமஹம் ப்ரபத்யே" என்று ஸாதநாந்தரநிரபேக்ஷமான உபாயத்தைப் பற்றினவராகையாலும், "ஸ்வபாவம் மாம் குருஷ்வ" என்று பக்திதன்னையன்றிக்கே ஸ்வபாவத்தை அபேக்ஷிக்கிறாராகையாலும்.

ளிச்செய்திருக்க, இங்கும் சொன்னால் புநருக்தமன்றோவென்னில்: அங்கு கைங்கர்யருசியை உண்டாக்கவேணுமென்று பிராட்டி திருவடிகளிலே ஶரணம்புக நினைத்து, ஏவம்விதமான கைங்கர்யத்திலே எனக்கு ருசியைத் தந்தருளவேணுமென்கைக்காக, கைங்கர்யஸ்வரூபத்தை அருளிச்செய்தார் கீழ். இங்கு ருசிபூர்வகமாகப் பெரிய பெருமாள் திருவடிகளிலே ஶரணம்புக்குக் கைங்கர்யந்தன்னையே அபேக்ஷிக்கிறாராகையாலே புநருக்திதோஷமில்லை.

வ்யா:—(பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திக்ருத) இப்பரபக்த்யாதிகளாலே பண்ணப்படுமதான. (பரிபூர்ண) அதாவது,–ஸ்வரூபரூபகுண விபூதிகளித்தனையும் ஒருபோகியாக அநுபவிக்கை. (அநவரத) அதாவது,—அவிச்சிந்நமாயிருக்கை. அதாவது—விஷயாந்தரம் கலசாதிருக்கை. (நித்ய) யாவதாத்மபாவி. (விஶதம) விஶதமாவது,—பரபக்திதசையில் அநுபவம். விஶததரமாவது,–பரஜ்ஞாந தசையில் அநுபவம். விஶததமமாவது,—பரமபக்தி

---

பதினாறுவது சூர்ணை அவதாரிகை:—பரபக்தி பரஜ்ஞாநபரமபக்திக்ருதகைங்கர்யஸ்வரூபத்தை இரண்டாம் சூர்ணையிலே பரக்க அருளிச்செய்து, இங்கேயும் சொல்லுகை புநருக்தமன்றோவென்னில்: பரோபதேஶமாக அருளிச்செய்கிறாரல்லாமையாலே புநருக்திதோஷமில்லை. தோஷமில்லாமையேயன்று; குணமாக புத்திபண்ணத்தட்டில்லை; அங்ஙனன்றிக்கே அர்த்தவிநியோகபேதமுமுண்டு. கீழ் பிராட்டி திருவடிகளிலே சரணம்புக்குக் கைங்கர்யருசியை அபேக்ஷிக்கிறாராகையாலே, இப்படிப்பட்ட கைங்கர்யத்திலே ருசியைத் தந்தருளவேணுமென்கைக்காக இப்படிப்பட்ட கைங்கர்யஸ்வரூபத்தை அருளிச்செய்தார். இங்கு ருசிபூர்வகமாகப் பெரியபெருமாள் திருவடிகளிலே ஶரணம்புக்கு, அக்கைங்கர்யம்தன்னையே அபேக்ஷிக்கிறாராகையாலே புநருக்தி தோஷமில்லை.

வ்யா:—(பரபக்திபரஜ்ஞாநபரமபக்திக்ருத) இப்பரபக்த்யாதிகளாலே பண்ணப்படுவதான. (பரிபூர்ண) பரிபூர்ணமாவது,—ஸ்வரூபரூபகுணவிபூதிகள் இத்தனையும் ஒருபோகியாக அநுபவிக்கை. (அநவரத) அவிச்சிந்நமாயிருக்கை. விஷயாந்தரங்கள் கலசாதொழிகை. (நித்ய) யாவதாத்மபாவியாயிருக்கை. (விஶததம) பரமபக்திக்ருதமாயிருக்கை. விஶதமாவது,—பரபக்திதசையில் அநுபவம். விஶததரமாவது,—பரஜ்ஞாநதசையில் அநுபவம். விஶததமமாவது,—பரம

தஶையில் அநுபவம். (அநந்யப்ரயோஜந) இவ்வநுபவத்தால் பிறக்கும் ப்ரீதியும் வேண்டா, ப்ரீதிகாரிதமான கைங்கர்யமும் வேண்டாவென்னும்படி தானே ரஸ்யமாயிருக்கை. (அநவதிகாதிஶய ப்ரிய பகவதநுபவோஹம்) அநவதிகமான அதிஶயத்தையுடைத்தான பகவதநுபவத்தையுடைய நான். (ததாவித பகவதநுபவ ஜநித ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோசித) அப்படிப்பட்ட ப்ரீதிகாரிதமாய், எல்லா அவஸ்தைகளிலும் அநுகூலமாயிருக்கிற. (அஶேஷ ஶேஷதைகரதிரூப) ஸகலஶேஷவ்ருத்தியொன்றிலுமுண்டான அபிநிவேஶத்தை வடிவாக உடையனாய்க்கொண்டு. (நித்யகிங்கரோ பவாநி) நித்யகைங்கர்யத்தைப் பெற்று அநுபவிக்கப்பெறுவேனாகவேணும். அன்றிக்கே நித்யஶப்தம் புநராவ்ருத்திரஹிதமான தேசத்தைச் சொல்லி, அதில் 'கிங்கரோ பவாநி' என்னவுமாம்.

பதினேழாவது சூர்ணை அவதாரிகை:—இப்படி த்வயம் வ்யாக்யாதமாயிற்றதாகில், இனிமேல் செய்கிறதென்னென்னில்: இவ்வதி

---

பக்திதசையில் அநுபவம். (அநந்யப்ரயோஜந) இவ்வநுபவத்தாலே பிறக்கும் ப்ரீதியும் வேண்டா, ப்ரீதிகாரிதமான கைங்கர்யமும் வேண்டாவென்னும்படி தானே ரஸ்யமாயிருக்கை. (அநவதிகாதிஶய ப்ரிய பகவதநுபவோஹம்) அநவதிகமான அதிஶயத்தையுடைத்தான ப்ரீதியால் அநுபவிப்பதான பகவதநுபவத்தை நான் உடையனாய். (ததாவித பகவதநுபவ ஜநிதாநவதிகாதிஶய ப்ரீதி) அப்படிப்பட்ட அநுபவத்தாலே பிறப்பதாய், அநவதிகமான அதிஶயத்தையுடைத்தான ப்ரீதி. (காரிதாஶேஷாவஸ்தோசித) இப்படிப்பட்ட ப்ரீதிகாரிதமாய் எல்லா அவஸ்தைகளிலும் அநுகூலமாயிருக்கை. (அஶேஷ-ஶேஷதைகரதிரூப) ஸகலஶேஷவ்ருத்தியொன்றிலுமுண்டான அபிநிவேஶத்தை வடிவாக உடையனாய்க்கொண்டு. (நித்ய) புநராவ்ருத்திரஹிதமான தேசத்திலே. (கிங்கரோ பவாநி) கைங்கர்யத்தைப்பெற்று அநுபவிப்பேனாகவேணும். அங்ஙனன்றிக்கே நித்யஶப்தம் கைங்கர்ய விஶேஷணமாய், நித்ய கைங்கர்யத்தைப் பெற்று அநுபவிக்கப் பெறவேணுமென்னவுமாம்.

பதினேழாவது சூர்ணை அவதாரிகை:—இப்படி த்வயம் வ்யாக்யாதம். த்வயம் வ்யாக்யாதமாயிற்றாகில், இனிமேல் செய்கிறதென்

காரி பக்கல் பெரியபெருமாள் தமக்குண்டான ப்ரீத்யதிஶயத்தாலே கீழ்ச்சொன்னவற்றை அநுபாஷித்துக்கொண்டு, உமக்கு மத்ப்ரஸாதத்தாலே ஸர்வமும் குறைவற உண்டாயிடுக என்று அருளிச்செய்து இவருடைய ஹ்ருதயத்தை ஸந்துஷ்டமாக்குகிறூர். "இப்படிப் பெரிய பெருமாள் அருளிச்செய்தாரென்று நாங்கள் விச்வஸித்திருக்கும்படி எங்ஙனே?" என்று எம்பார் கேட்க, "எனக்குப் பெரியபெருமாள் தம்முடைய ஶீலாதிகுணங்களைக் கரதலாமலகமாகக் காட்டித்தந்து, அவர் சொல்லுவிக்கச்சொன்ன வார்த்தையாகையாலே அவரருளிச் செய்த வார்த்தையென்று விச்வஸிக்கத் தட்டில்லை" என்று எம்பெருமானூர் அருளிச்செய்தார்.

வ்யா:—'ஏவம்பூத மத்கைங்கர்யப்ராப்தி) இப்படிப்பட்ட என்னுடைய கைங்கர்யலாபத்துக்கு. (உபாயதயாவக்லுப்த) உபாயமாக வேதாந்தங்களிலே சொல்லப்பட்ட கர்மஜ்ஞாநபக்திகளென்ன;

---

னென்னில்: இப்படி உபாயோபேயாத்யவஸிதனுன இவ்வதிகாரி பக்கல் * "சோம்பரையுகத்திபோலும்" என்கிறபடியே பெரியபெருமாள் தமக்குண்டான ப்ரீத்யதிஶயத்தாலே கீழ்ச்சொன்னவற்றைப் பரக்க அநுபாஷித்துக்கொண்டு, 'உமக்கு மத்ப்ரஸாதத்தாலே ஸர்வமும் குறைவற உண்டாகவேணும்' என்று அருளிச்செய்து இவ்ருடைய ஹ்ருதயத்தை ஸந்துஷ்டமாக்குகிறூர். "இப்படிப் பெரியபெருமாள் அருளிச்செய்தாரென்று நாங்கள் விச்வஸித்திருக்கும்படியென்?" என்று எம்பார் கேட்டருள, "எனக்குப் பெரிய பெருமாள் தம்முடைய ஶீலாதிகுணங்களை ஹஸ்தாமலகமாகக் காட்டித் தந்தார். அங்கு திருவுள்ளமாகாதது என் வாயால் புறப்படாதே. அவர் சொல்லுவிக்கச்சொன்ன வார்த்தையாகையாலே அவர் அருளிச்செய்த வார்தையென்று விஶ்வஸித்திருக்கத் தட்டில்லை" என்று உடையவர் அருளிச்செய்தார்.

வ்யா:—(ஏவம்பூதமத்கைங்கர்யப்ராப்தி) இப்படிப்பட்ட என்னுடைய கைங்கர்யப்ராப்திக்கு. (உபாயதயாவக்லுப்த) உபாயமாக வேதாந்தத்திலே சொல்லப்பட்ட உபாஸநாத்மகமான கர்மஜ்ஞாந பக்திகள் உமக்கு இல்லையேயாகிலும். (ஸமஸ்தவஸ்துவிஹீநோऽபி)

* திருமாலை 37.

१७. एवंभूतमत्कैङ्कर्यप्राप्त्युपायतयाऽवक्लृप्तसमस्तवस्तुविहीनोऽपि, अनन्त–तद्विरोधिपापाक्रान्तोऽपि, अनन्तमदपचारयुक्तोऽपि, अनन्तमदीयापचार-युक्तोऽपि, अनन्तासह्यापचारयुक्तोऽपि, एतत्कार्यकारणभूतानादिविपरी-ताहङ्कारविमूढात्मस्वभावोऽपि,

17. ஏவம்பூத மத் கைங்கர்ய ப்ராப்த் யுபாயதயா அவ:க்லுப்த ஸமஸ்த வஸ்து விஹீநோபி, அநந்த தத்விரோதி பாபாக்ராந்தோபி அநந்த மதபசாரயுக்தோபி, அநந்த மதீயாபசாரயுக்தோபி, அநந்தாஸஹ்யாப சாரயுக்தோபி, ஏதத்கார்யகாரண பூதாநாதி விபரீதாஹங்கார விமூடாத்ம ஸ்வபாவோபி,

---

१७. अथ भगवद्वचः–एवमित्यादि। वक्ष्यमाणचरमश्लोकप्रथमपदार्थमाह एवंभूतेति। अवक्लृप्तं–विहितम्। समस्तवस्तुशब्देन कर्मज्ञानभक्तियोगाः, तदनुगुणाः अमानित्वादिगुणाश्च विवक्षिताः। विहीनेति–त्यागोनूदित इति भावः। परिशब्दार्थमभिप्रयन्नाह अनन्तेति। विरोधिभूयस्तया कालान्तरेऽपि तन्नै–राश्यं हि तदर्थः॥ एतदिति–बीजाङ्कुरनयात् कार्यकारणभावः। * "अथात अहङ्कारादेशः" [छान्दो ७-२५ १] इत्युक्ताहङ्कारव्यावृत्त्यर्थः विपरीताहङ्कारशब्दः। विमूढात्मस्वभावः तिरोहितशेषभावः॥

---

(ஸமஸ்த வஸ்து விஹீநோऽபி) இவ்வுபாஸநாங்கமான ஜீவபர யாதாத்ம்யஜ்ஞாநமென்ன, இதுக்கடியான வர்ணாச்ரமாசாரமென்ன, இவை எல்லாவற்றுக்குமடியான அமாநித்வாத்யாத்மகுணங்க ளென்ன, இங்ஙன் சொல்லப்பட்டவையெல்லாம் உமக்கில்லையேயா கிலும். (அநந்த தத்விரோதி பாபாக்ராந்தோऽபி) இவையில்லாமையே யன்றியே, இவற்றுக்கு விரோதியான அநந்தபாபங்களாலே ஆக்

---

இவ்வுபாஸநாங்கமான ஜீவபரயாதாத்ம்யஜ்ஞாநமென்ன, இதுக்கடியான வர்ணாச்ரமாநுஷ்டாநமென்ன, இதுக்கெல்லாவற்றுக்குமடியான அமாநித்வாத்யாத்மகுணங்களென்ன, இப்படிச் சொல்லுகிற ஸர்வமும் உமக்கில்லையேயாகிலும். (அநந்ததத் விரோதிபாபாக்ராந்தோऽபி) இவையில்லாமையேயன்றியே இவற்றுக்கு விரோதியான அநந்தபாபங்களாலே ஆக்ராந்தராயிருந்தீரேயாகிலும். இவற்றிலே இழியவொட்டாதேயிருக்கிற ஸகலபாபங்களாலே நெருக்குண்டிருந் தீரேயாகிலும். (அநந்தமதபசாரயுக்தோऽபி) முடிவில்லாத நம்விஷயமான

ராந்தராயிருந்தீரேயாகிலும். (அநந்தமதபசார யுக்தோபி) கீழ்ச் சொன்ன விரோதிபாபங்கள் மாத்ரமன்றிக்கே, முடிவில்லாத நம் விஷயமான அபசாரத்தோடே கூடியிருந்தீரேயாகிலும். (அநந்த மதீயபசார யுக்தோऽபி) இவ்வளவன்றிக்கே மதபிமாநாந்தர்ப்பூதராயிருப்பார் திறத்தில் உண்டான அளவிறந்த அபசாரத்தோடு கூடியிருந்தீரேயாகிலும். (அநந்தாஸஹ்யாபசாரயுக்தோऽபி) நிர்நிபந்தனமாக பகவத்பாகவதவிஷயங்களிலுண்டான அளவிறந்த அபசாரத்தோடு கூடியிருந்தீரேயாகிலும். (ஏதத் கார்யகாரணபூதா நாதிவிபரீதாஹங்கார) இப்படிப்பட்ட பாபங்களுக்குக் கார்யமுமாய், காரணமுமாயிருந்துள்ள அநாதியான விபரீதாஹங்காரம். விபரீதாஹங்காரமாவது,— அஹமல்லாத வஸ்துவிலே அஹம் புத்தி பண்ணுகை. இதுக்கடி பாபங்களாகையாலே பாபகார்யமுமாய், பாபங்களுக்குமடி தேஹாத்மாபிமானமாகையாலே தான் காரணமுமாயிருக்கும். அஹமர்த்தந்தான் ஜ்ஞாநாநந்தஸ்வரூபமாய், ப்ரக்ருதே:பரமாயிருப்பதொன்றாயிருக்க, து:க்கரூபமுமாய், ஜடமுமாய், ஸததபரிணாமினியுமான

---

அபசாரத்தோடேகூடியிருந்தீராகிலும். கீழ்ச்சொன்ன விரோதிபாபங்களும் அபசாரமாகின்றன. அவையாகிறன,—ஶாஸ்த்ர விருத்தமானத்தைச் செய்கையும், விஹிதமானவற்றைச் செய்யாதொழிகையும். அவைதான் ஈச்வராஜ்ஞாதிலங்கநமாகையாலே மதபசாரமாகக்கடவது. அதில் பகவதபசாராதிகளுடைய க்ரௌர்யாதிஶயத்தாலே பிரியச்சொல்லுகைக்காக அக்ருத்யகரணக்ருத்யாகரணங்களைக் கீழ் பாபஶப்தத்தாலே சொன்னார். (அநந்தமதபசாரயுக்தோऽபி அநந்தமதீயாபசாரயுக்தோऽபி, அநந்தாஸஹ்யாபசாரயுக்தோऽபி) இப்படி மத்விஷயத்திலும் மதீயர் பக்கலிலும் அஸஹ்யமாயுமுள்ள அஸங்க்யாதமான அபராதங்களை உடையீராயிருந்தீரேயாகிலும். (ஏதத் கார்யகாரண பூதாநாதி விபரீதாஹங்கார) இப்படிப்பட்ட பாபங்களுக்குக்கார்யமும் காரணமுமாயிருக்கும் அநாதியான விபரீதாஹங்காரம். தேஹாத்மாபிமானத்துக்கடி பாபங்களாகையாலே கார்யமுமாய், பாபங்களுக்கடி தேஹாத்மாபிமாநமாகையாலே காரணமுமாயிருக்கும், விபரீதாஹங்காரமாவது,— அஹமல்லாததிலே அஹப்புத்திபண்ணுகை. அதாவது,— அஹமர்த்தம் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய், ஏகரூபமாய், ப்ரக்ருதே:

**एतदुभयकार्यकारणभूतानादिविपरीतवासनासंबद्धोऽपि, एतदनुगुणप्रकृति - विशेषसंबद्धोऽपि, एतन्मूलाध्यात्मिकाधिभौतिकाधिदैविक-**

ஏததுபய கார்ய காரண பூதாநாதி விபரீத வாஸநா ஸம்பத்தோऽபி, ஏத தநுகுண ப்ரக்ருதி விசேஷ ஸம்பந்தோऽபி, ஏதந் மூலாத்யாத்மிக ஆதி பௌதிக ஆதிதைவிக

---

उभयशब्दः पापाज्ञानपरः ॥

---

ப்ரக்ருதியிலே அப்புத்திபண்ணுகை பாபகார்யமுமாய் பாபகாரணமுமாயிருக்குமிறே. இத்தால் வரும் அவத்யமேதென்ன,—(விமூடாத்மஸ்வபாவோऽபி) இப்படிப்பட்ட அஹங்காரத்தாலே மறைக்கப்பட்ட ஆத்மாவினுடைய ஶேஷத்வஸ்வரூபத்தை உடையீராயிருந்தீரேயாகிலும். (ஏததுபய கார்யகாரணபூதாநாதி விபரீதவாஸநா ஸம்பத்தோऽபி) கீழ்ச்சொன்ன பாபங்களுக்கும் அஹங்காரத்துக்கும் கார்யமுமாய், காரணமுமாய், அநாதியுமாய்ப்போருகிற துர்வாஸநையாலே கட்டுண்டிருந்தீரேயாகிலும். (ஏததநுகுணப்ரக்ருதி விஶேஷஸம்பத்தோऽபி)

---

பரமாயிருக்க, து:க்கரூபமாய் ஜடரூபமாய் ஸததபரிணாமிநியான ப்ரக்ருதியிலே அஹம்புத்திபண்ணுகை. இத்தால் பலித்தகார்யமேதென்னில்: (விமூடாத்மஸ்வபாவோऽபி) ஆத்மாவுக்கு ஸ்வபாவமான ஶேஷத்வம் மறையுண்டது. ஶேஷத்வம் ஆத்மாவுக்கு அந்தரங்க ஸ்வரூபமாயிருக்க, ஸ்வபாவமென்பானென்னென்னில்: ஶேஷத்வம் ஸ்வரூபமே. அத்தை இவனால் செய்யலாவதில்லை. அவன்கையிலே கிடக்கையாலே. இனி, ஸ்வரூபம் ஶேஷத்வமானால் ஸ்வபாவமும் "ஶேஷோऽஹம்" என்றிருக்கை. அத்தைத் தவிர்ந்து "ஸ்வதந்த்ரோऽஹம்" என்னப்பண்ணுகை இப்படிப்பட்ட விபரீதாஹங்காரத்தாலே. மறைக்கப்பட்ட ஆத்மஸ்வரூபத்தையுடையீராயிருந்தீரேயாகிலும். (ஏததுபய கார்ய காரணபூதாநாதி விபரீதவாஸநாஸம்பத்தோऽபி) இப்படிப் பட்டபாபங்களுக்கும் அஹங்காரத்துக்கும் கார்யமுமாய் காரணமுமாயிருந்துள்ள விபரீத வாஸநையாலே ஸம்பத்தராயிருந்தீரேயாகிலும். பாபத்திலும் அஹங்காரத்திலும் பழகிப்போந்த வழக்கத்தாலேவாஸநைகார்யமுமாய், பாபத்திலும் அஹங்காரத்திலும் மூட்டுவதுவாஸநையாகையாலே காரணமுமாயிருக்குப். விபரீதவாஸநையாவது துர்வாஸநை. இப்படிப்பட்ட துர்வாஸநையாலே கட்டுண்டிருந்தீரேயாகிலும்.

இவற்றுக்கெல்லாம் காரணமான துஷ்ப்ரக்ருதியாலே ஒரு ஸர்வஶக்தி பிரிக்கப்பார்க்கிலும் அரிதாம்படி பிணையுண்டிருந்தீரேயாகிலும். (ஏதந்-மூலாத்யாத்மிகாதிபௌதிகாதிதைவிக) இப்ரக்ருதிஸம்பந்தமடியாக வருகிற தாபத்ரயங்கள். ஆத்யாத்மிகமாவது,—ஆதியும் வ்யாதியும். ஆதியாவது,—100 "कामक्रोधभयद्वेषलोभमोहविषादजाः। शोकासूयाव - मानेर्ष्यामात्सर्यादिमयास्तथा।" (காமக்ரோதபய த்வேஷ லோப மோஹ விஷாதஜா:। ஶோகாஸூயாவமானேர்ஷ்யாமாத்ஸர்யாதிமயாஸ் ததா॥ என்கிறவை. வ்யாதியாவது:-101 "शिरोरोगप्रतिश्यायज्वरशूलभगन्धरैः। गुल्मश्वासश्वयथुभिश्छर्द्यादिभिरनेकधा॥ तथाक्षिरोगातिसारकुष्ठाङ्गामय - सञ्ज्ञकैः॥ (ஶிரோரோகப்ரதிஶ்யாய ஜ்வரஶூலபகந்தரை:। குல்மஶ்வாஸ ஶ்வயதுபிஶ் சர்த்யாதிபிரநேகதா॥ ததாக்ஷிரோகாதிஸார குஷ்டாங்காமய ஸஞ்ஜ்ஞகை:) என்னுமவை. ஆதிபௌதிகமாவது:—102 "पशुपक्षि - मनुष्याद्यैःपिशाचोरगराक्षसैः। सरीसृपाद्यैश्च नृणां जन्यन्ते चाधिभौतिकाः॥") (பஶுபக்ஷிமநுஷ்யாத்யை: பிஶாசோரகராக்ஷஸை:। ஸரீஸ்ருபாத் - யைஶ்ச ந்ருணாம் ஜந்யந்தே சாதிபௌதிகா:॥) என்கிறவை. ஆதிதைவிக

---

(ஏததநுகுண ப்ரக்ருதி விஶேஷ ஸம்பத்தோऽபி) ஏததநுகுணமாவது,—இவற்றையெல்லாம் விளைப்பதாயிருக்கை. விஶேஷப்ரக்ருதியாவது,—துஷ்ப்ரக்ருதியென்றபடி. "பத்தோऽபி" என்னவமைந்திருக்க "ஸம்பத்தோऽபி" என்றது ஒரு ஸர்வஶக்தி பிரிக்கப் பார்த்தாலும் பிரிக்கவரிதாம்படியாகப் பிணையுண்ட உறைப்பைச் சொன்னபடி. இப்படிப்பட்ட துஷ்ப்ரக்ருதியிலே ஸம்பந்தித்திருந்தீரேயாகிலும். (ஏதந்மூலாத்யாத்மிகாதிபௌதிகாதிதைவிக) இப்ரக்ருதியடியாக வருகிற தாபத்ரயங்கள். ஆத்யாத்மிகமாவது,—ஆதியாயும் வ்யாதியாயுமிருக்கும். ஆதியாவது,—100 (காமக்ரோத பயத்வேஷ லோபமோஹவிஷாதஜ:। ஶோகாஸூயாவமானேர்ஷ்யா மாத்ஸர்யாதி-மயஸ் ததா॥) என்கிற இவை. வ்யாதியாவது,—101 (ஶிரோரோகப்ர-திஶ்யாய ஜ்வர ஶூலபகந்தரை:। குல்மாஶ்ஶ்வயதுஶ்வாஸச்சர்த்யாதி-பிரநேகதா॥ ததாக்ஷிரோகாதிஸார குஷ்டாங்காமயஸஞ்ஜ்ஞிதை:॥) என்கிற இவை. ஆதிபௌதிகமாவது,— 102 (பஶுபக்ஷிமநுஷ்-யாத்யை: பிஶாசோரகராக்ஷஸை:। ஸரீஸ்ருபாத்யைஶ்ச ந்ருணாம் ஜாயதே சாதிபௌதிக:) என்கிற இவை. ஆதிதைவிகமாவது,—103

**सुखदुःखतद्धेतुतदितरोपेक्षणीयविषयानुभवज्ञानसङ्कोचरूपमच्चरणारविन्दयुगलै-
कान्तिकात्यन्तिकपरभक्तिपरज्ञानपरमभक्तिविघ्नप्रतिहतोऽपि**

ஸுகதுக்க தத்தேது ததிதரோபேக்ஷணீய விஷயாநுபவஜ்ஞாந ஸங்கோச
ரூப மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி
விக்ந ப்ரதிஹதோபி

---

**सुखदुःखतद्धेतुशब्देन अभोग्यविषया विवक्षिताः। ज्ञानस्य सङ्कोचः आत्मपरमात्मविषये। विषयानुभवरूपः ஜ्ञानसङ्कोचरूपश्च विघ्नः॥**

---

மாலது,–103 "**शीतोष्णवातवर्षाम्बु वैद्युतादिसमुद्भवः**" (ஶீதோஷ்ணவாத வர்ஷாம்பு வைத்யுதாதிஸமுத்பவ:) என்கிறவை. (ஸுகது:க்க தத்தேது இப்படி மூன்றுவகைப்பட்ட ஸுகதுக்கங்களென்ன, அதுக்கு ஹேதுவாயிருந்துள்ள.

அவைதான் எவையென்னில்: (ததிதரோபேக்ஷணீய விஷய) தனக்கும் பிறர்க்கும் உபேக்ஷணீயரான மத்யஸ்தர்க்கும் உண்டாமதான காமக்ரோதாதிவிஷயங்களென்ன இவற்றினுடைய. தனக்குக் காமம் அந்வயத்திலே ஸுகஹேதுவாய், வ்யதிரேகத்தில் துக்கஹேதுவாயிருக்கும். தனக்கு க்ரோதம் எதிரியை நலியும்போது ஸுகஹேதுவாய், அதுவே எதிரியளவில் பலியாதொழிந்தால் துக்கஹேதுவாயிருக்கும். ஸ்வேதரரான அநுகூலர்க்குக் காமம் அந்வயத்தில் ஸுகஹேதுவாய் வ்யதிரேகத்தில் துக்கஹேதுவாயிருக்கும். ஸ்வே

---

(ஶீதோஷ்ணவாத வர்ஷாம்பு வைத்யுதாதி ஸமுத்பவ:) என்கிற இவை. (ஸுகது:க்க தத்தேது) இவை ஸுகது:க்கஹேதுவாயிருக்கும்.

இவை ஹேதுவானால் விஷயத்தைப்பற்றியன்றோ ஸுகது:க்கங்களுண்டாவது. அதுக்கு விஷயமேதென்னில்: (ததிதரோபேக்ஷணீய) ஸ்வவிஷயமும், இதரவிஷயமும், உபேக்ஷணீயவிஷயமும். ஸ்வவிஷயத்தில் ஸுகது:க்கப்ரகாரம் ஏதென்னில்: ஸ்வவிஷயத்தில் காமம் அந்வயத்தில் ஸுகஹேதுவாய், வ்யதிரேகத்தில் து:க்கஹேதுவாயிருக்கும். ஸ்வவிஷயத்தில் க்ரோதமானது, எதிரியை நியமித்தல் முடித்தல் செய்யும்போது ஸுகஹேதுவாய், எதிரியைக் காணுதொழிதல், கண்டு மேல்விழவொண்ணுதொழிதல் செய்தால் க்ரோதம் விஞ்சித் தன்னையே நலிகையாலே து:க்கஹேதுவாயிருக்கும்.

தரரான ப்ரதிகூலர்க்குக் காமம் அந்வயத்தில் துக்கஹேதுவாய், வ்யதிரேகத்தில் ஸுகஹேதுவாயிருக்கும். மத்யஸ்தர்க்குக் காமாதிகளுடைய அந்வய வ்யதிரேகங்களிலுண்டான ஸுகதுக்கங்கள் உபேக்ஷணீயங்களாயிருக்கும். (அநுபவஜ்ஞாநஸங்கோசரூப) இப்படி ஸ்வகீயமாயும், பரகீயமாயும், உபேக்ஷணீயருடையதாயுமிருந்துள்ள விஷயங்களின் அநுபவமானது ஜ்ஞாநஸங்கோசரூபமாயிருக்கும். ஆகையாலே அஜ்ஞாநமடியாக உண்டாகக்கடவ பரபக்த்யாதிகளுக்கு விஷயாநுபவந்தான் ப்ரதிபந்தகமாயிறேயிருப்பது. அத்தையருளிச்செய்கிறார். (மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திவிக்ந ப்ரதிஹதோऽபி) நிரதிசயபோக்யமான என் திருவடிகளிலே நித்யமாய் ஏகரூபமாயிருந்துள்ள பரபக்த்யாதிகளுக்கு விக்நமாயிருந்துள்ள விஷயாநுபவத்தாலே அழிந்திருந்தீரேயாகிலும். ஆக, மச்சரணாரவிந்தயுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திவிக்நதபாவஸ்தித மத்ஜ்ஞாநஸங்கோசரூப ததிதரோபேக்ஷணீய விஷயாநுபவஜநிதாத்யாத்மிகாதிபௌதிகாதிதைவிக ஸுகது:க்காதீந

---

ஒரு ரோகாதிகளில் கனத்த வ்யாதி து:க்கஹேதுவாய், அதைக் குறித்து நொய்ய வ்யாதி ஸுகஹேதுவாயிருக்கும். ஒருவன் நோய்கொண்டு கிடந்தால், அதுக்குமேலே தண்டலிலேயிட்டுக் கனக்க நலியப்புக்கு நோயென்று விட்டுப்போந்தால் அந்நோய் ஸுகஹேதுவாயிருக்கும். இதரவிஷயத்தில் ஸுகது:க்கங்களில் வந்தால் அநுகூலவிஷயத்தில் வ்யஸநம் து:க்கஹேதுவாய், ப்ரதிகூலவிஷயத்தில் வ்யஸநம் ஸுகஹேதுவாயிருக்கும். மத்யஸ்தங்களில் உபேக்ஷாவிஷயமாயிருக்கும். (ததிதரோபேக்ஷணீய விஷயாநுபவஜ்ஞாநஸங்கோசரூப) இப்படி ஸ்வவிஷயமாயும், அநுகூலவிஷயமாயும், ப்ரதிகூலவிஷயமாயும் மத்யஸ்தவிஷயமாயுமிருந்துள்ள அநுபவம் ஜ்ஞாநஸங்கோசரூபமாயிருக்கும். எதுக்கு ஸங்கோசமென்னில்: பகவத்விஷயமான ஜ்ஞாநத்துக்கு ஸங்கோசரூபமாயிருக்கும். இந்த ஜ்ஞாநந்தானேதென்னில்: பரபக்த்யாதிகளுக்கும் பூர்வகாலீநமான அநந்யப்ரயோஜநதயா பக்திரூபாபந்நஜ்ஞாநம். இந்த ஜ்ஞாநத்துக்கு ஸங்கோசரூபமாகையாலே இதடியாகப்பிறப்பதான பக்த்யாதிகளுக்கு விக்நமாய் முடியும். ஆகையாலே (மச்சரணாரவிந்தயுகளைகாந்திகாத்யந்திக பரபக்திபரஜ்ஞாந பரமபக்திவிக்நப்ரதிஹதோऽபி) என்னுடைய

क्लेशकर्माद्यशेषदोषासंस्पृष्टं स्वाभाविकानवधिकातिशय-
க்லேச கர்மாத்யசேஷ தோஷாஸம்ஸ்ப்ருஷ்டம் ஸ்வாபாவிகாநவதி காதிசய

மகதையாலும் குணத்ரயாத்மகதையாலும், ஸ்ருஷ்ட்யாதிநிர்வாஹக மான காலரூபத்வத்தாலும். அதில் பத்தராகிறார்,—ஜ்ஞாநஸங்கோசார்ஹஸ்வரூபராய், புண்யபாபபலமான ஸுகது:க்காநுபவத்திலே ஸ்திதியையுடையராய், தத்தேதுவான புண்யபாபரூபகர்மப்ரவ்ருத்திகராயிருப்பார்கள். முக்தராகிறார்,—நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே ஜ்ஞாநஸங்கோசஹேதுவான தேஹஸம்பந்தாதிகள் நிவ்ருத்தமாய், அதடியாக ஆவிர்ப்பூதஸ்வரூபராய், கைங்கர்ய ஸுகத்திலே ஸ்திதியையுடையராய், தததுரூபமாக 112 "सोऽश्नुते सर्वान् कामान्" (ஸோऽச்நுதே ஸர்வாந் காமாந்) என்கிறபடியே பகவத்குணாநுபவப்ரவ்ருத்திகராயும், 113 "येन येन धाता गच्छति" (யேந யேந ததா கச்சதி) என்கிறபடியே காயிகமான கைங்கர்யப்ரவ்ருத்திகராயும், அத்தாலே களித்து 70 "हा वुहा वुहा वु" (ஹா வுஹா வுஹா வு) என்கிறபடியே வாசிகப்ரவ்ருத்திகராயும் இருப்பர்கள். நித்யராகிறார்,— அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தராய் முக்தரைப்போலே ஒருநாளளவிலே வந்து கிட்டினவரன்றிக்கே, அநாத்யநந்த கைங்கர்யஸுகத்திலே ஸ்திதியையுடையவராய், ஸதாதர்சநப்ரவ்ருத்திகராயும், நித்யாஞ்ஜலி || ப்ரவ்ருத்திகராயும், நித்யஸ்துதி ப்ரவ்ருத்திகராயுமிருப்பர்கள். [ஆகையாலேயாயிற்று நித்யரென்று இவர்களுக்குப் பேராயிற்று.] ப்ரக்ருதிதத்வம் குணத்ரயாத்மகமாய், ஸததபரிணாமஸ்வரூபமாய், சேதநகர்மாநுகுணமாகப் பரிணமிக்கையிலே ஸ்திதியையுடைத்தாயும், சேதநருக்கு ஸ்வஸ்வரூப பரஸ்வரூப புருஷார்த்தஸ்வரூப உபாயஸ்வரூப விரோதிஸ்வரூப ஸம்பந்தஸ்வரூப திரோதாநகரமாயுமிருக்கும். பஞ்சோபநிஷன்மயமான அசித்து சுத்தஸத்வமயமாயும், ஸதைகரூப ஸ்வரூபமாயும், நித்யமுக்தர்களுடைய கைங்கர்யத்துக்கு உபகரண ரூபேணவும், ஈச்வரனுடைய ரக்ஷணக்ருத்யத்துக்கு அநுகூலமாக வ்யூஹவிபவரூபேணவும் ஸ்திதியையுடைத்தாயும், ஸர்வத்ர ப்ரகாசப்ரவ்ருத்திகமாயுமிருக்கும். காலம் ப்ரக்ருதியிற்காட்டில் வ்யாவ்ருத்தமாய், ஏகஸ்வரூபமாய், நிமேஷகாஷ்டாத்யவஸ்தாயுக்தமாய்கொண்டு

|| (பா) புடராய்.

ப்ராக்ருதபதார்த்தங்களென்ன, தத்ஸம்ஸ்ருஷ்டசேதநரென்ன, இவற்றினுடைய நிர்வஹணத்திலே ஸ்திதியையுடைத்தாயும், ஸகலத்தினுடைய உத்பத்திவிநாஶாதி ப்ரவ்ருத்திகமாயுமிருக்கும். இவற்றை ஸ்வாதீநமாக உடையனுகையாவது,—அந்தராத்மதயா நின்று நியமிக்கை-ஆக, ஸகல சேதநாசேதநங்களினுடைய ஸத்தாஸ்திதி ப்ரவ்ருத்திகள் ஈச்வராதீனமாகையாலே இவற்றினுடைய ஶரீரத்வமும், ஈச்வரனுடைய ஶரீரித்வமும் சொல்லிற்றாயிற்று.

(க்லேஶ கர்மாத்யஶேஷ தோஷாஸம்ஸ்ப்ருஷ்டம்) சேதநாசேதநங்களிரண்டும் ஶரீரமாய், ஈச்வரன் சரீரியாயிருக்கிருனுகில், சரீரஸம்பந்தப்ரயுக்தமான தோஷம் சரீரிக்கு வாராதோவென்னில்: தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனென்கிறது. க்லேசமாவது,—114 "अविद्यास्मिताभिनिवेशरागद्वेषाः पञ्च क्लेशाः" (அவித்யாஸ்மிதாபிநிவேஶராகத்வேஷா: பஞ்ச க்லேஶா:) இவையென்ன, இவற்றுக்குக் காரணமுமாய் கார்யமுமாயிருந்துள்ள புண்யபாபரூபகர்மங்களென்ன (ஆதி) ஶப்தக்ராஹ்யமான விபாகாஶயங்களென்ன, இவைமுதலான அஶேஷதோஷங்களாலும் ஸ்பர்சிக்கப்படாதவன். விபாகமாவது,—தேவாதிஜாதியோகமென்ன, ஆயுஸ்ஸென்ன இவை முதலானவை. ஆஶயமாகிறது,—தத்தஜ்ஜாத்யநுகுண புத்திபேதங்கள். (அஶேஷ) பதத்தாலே அசித்கதமான பரிணமத்தையும், சேதநகதமான து:க்காஜ்ஞாநாதிகளேயும் நினைக்கிறது. அஸம்ஸ்பர்ஶத்தாலே ப்ராகபாவத்தை நினைக்கிறது.

(ஸ்வாபாவிகேத்யாதி) இதில் ஸர்வஸாதாரணமாயும், ஆச்ரிதவிஷயமாயும், ஆச்ரிதவிரோதிவிஷயமாயும் மூன்று வகைப்பட்ட குணங்களேச் சொல்லுகிறது. ஸ்வாபாவிகமாகையாவது,—ஜலத்துக்கு ஶைத்யம்போலவும் அக்நிக்கு ஔஷ்ண்யம் போலவும் யாவத்த்ரவ்யபாவியாயிருக்கை. (அநவதிகாதிஶய) 115 "एकैकगुणावधीप्सया सदा स्थिताः" (ஏகைககுணவதீப்ஸயா ஸதாஸ்திதா:) என்கிறபடியே தனித்தனியே நிஸ்ஸீமமாய், ஆஶ்சர்யாவஹமுமாயிருக்கை. (ஜ்ஞாந) ஈச்வரஜ்ஞாநமாகிறது.—41 "यो वेत्ति युगपत्सर्वं प्रत्यक्षेण सदा स्वतः" (யோ வேத்தி யுகபத்ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:) என்கிறபடியே ஸர்வகாலமும் ஸர்வவஸ்துக்களேயும் ஒருகாலே ஸாக்ஷாத்கரிக்கும் ஸாமர்த்யம்.

**ज्ञानबलैश्वर्यवीर्यशक्तितेजस्सौशील्यवात्सल्यमार्दवार्जवसौहार्दसाम्यकारुण्य - माधुर्यगाम्भीर्यौदार्यचातुर्य**

ஜ்ஞாநபலைச்வர்ய வீர்யசக்தி தேஜஸ் ஸௌசீல்ய வாத்ஸல்ய மார்த்தவார்ஜவ ஸௌஹார்த்த ஸாம்ய காருண்ய மாதுர்யகாம்பீர்யௌதார்ய சாதுர்ய

அதாகிறது,—விஷமஸ்ருஷ்டியிலே கர்மீபவித்திருந்துள்ள அஸங்க்யாதமான ஆத்மாக்களினுடைய ஸ்வரூபபேதத்தையும், [நாமபேதத்தையும்,] தத்தத் கர்மபேதத்தையும் ஸாக்ஷாத்கரிக்கும் ஶக்தி. (பல) அதாவது,— ஸ்ருஷ்டமான ஸகலபதார்த்தங்களையும் ஸ்வஸங்கல்பஸஹஸ்ரைகதேஶத்தாலே தரிக்கும் தாரணஸாமர்த்யம். (ஐச்வர்ய) அதாவது,— ஸகலாத்மாக்களையும்கர்மாநுகுணமாக நியமிக்கும் நியமஸாமர்த்யம். (வீர்ய) அதாவது,—ஸ்ருஷ்ட்யாதி ஸகலவ்யாபாரங்களையும் பண்ணாநின்றாலும், அநாயாஸரூபமான அவிகாரித்வம். 116 **"यथा सन्निधिमात्रेण गन्धः क्षोभाय जायते। मनसो नोपकर्तृत्वात् तथाऽसौ परमेश्वरः॥"** (யதா ஸந்நிதி மாத்ரேண கந்த: க்ஷோபாய ஜாயதே। மநஸோ நோபகர்த்ருத்வாத் ததாऽஸௌ பரமேச்வர:) (ஶக்தி) அதாவது,—ப்ரவ்ருத்யுந்முகரான சேதநருக்கு சக்தியைக்கொடுத்து ப்ரவர்த்திப்பிக்கும் ப்ரவர்த்தகத்வ ஸாமர்த்யம். அகடிதகடநா ஸாமர்த்யமாகவுமாம். ஜகதுபாதான ஶக்தியென்னவுமாம். (தேஜ:) அதாவது,—பராபிபவந ஸாமர்த்யம். 117 **"कुरून् प्रच्छादयन् श्रिया"** (குரூந் ப்ரச்சாதயந் ஶ்ரியா) 42 **"तमेव भान्तमनुभाति सर्वं"** (தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்) இவ்வாறு குணங்களும் ஸர்வவிஷயம்.

இப்படி ஜ்ஞாநாதிஷட்குணயுக்தனான ஈச்வரனுக்கே, அநந்தரம் ஆஶ்ரிதவிஷயமாகப் பன்னிரண்டு குணம் சொல்லுகிறது. (ஸௌஶீல்ய) சீலமாவது,—43 (மஹதோ மந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷஸ்வபாவத்வம்) ஸௌஶீல்யமாவது,—அந்த மஹத்த்வம் தன் திருவுள்ளத்திலுமின்றிக்கேயொழிகை. 44 (ஆத்மாநம் மாநுஷம் மந்யே). (வாத்ஸல்ய) அதாவது,—ஆச்ரிதகதமான தோஷமும் குணமாய்த் தோற்றும்படியான ப்ரேமம். அதாவது,—ஆச்ரிதருடைய தோஷத்தைத் தன் பேறாகப்போக்கி ஸ்வகுணங்களாலே தரிப்பிக்கை. [* செய்தகுற்றம் நற்றமாகவே கொண்டு † பாலேபோல் சீரில்

* திருச்சந்த 111. † பெரியதிருவ 58

தரிப்பிக்கை. அதாவது,—அத்ய ஜாதமான வத்ஸத்தின்பக்கல் தேனுவிருக்கும்படி] 45 (கோபாலத்வம் ஜுகுப்ஸிதம்). (மார்த்தவ) இது ரூபகுணமாயிருக்க, ஆத்மகுண ப்ரகரணபடிதமாகையாலே மாநஸமான தௌர்ப்பல்யத்தைக் காட்டுகிறது. அதாகிறது,—ஆச்ரிதவிச்லேஷம் பொறுக்கமாட்டாதொழிகை. 118 "संसराम्यस्य वाक्यानि" (ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யாநி) 46 (அநித்ரஸ் ஸததம் ராம:). (ஆர்ஜவ) அதாவது,—ஆச்ரிதஸம்ச்லேஷார்த்தமாகத் தன்னுடைய மநோவாக்காயங்கள் ஏகரூபமாயிருக்கை. அதாவது,—அவர்களுடைய செவ்வைக்கேடுதானே செவ்வையாம்படி தான் செவ்வியனாயிருக்கை. (ஸௌஹார்த்த) அதாவது,—"ஶோபநாஶம்ஸீதி ஸுஹ்ருத்" ஆச்ரிதருடைய ஸந்நிதியோடு அஸந்நிதியோடு வாசியற அவர்களுடைய ஸர்வமங்களங்களையும் அந்வேஷியாநிற்கை. (ஸாம்ய) அதாவது,—ஜாதிகுணவ்ருத்தாதிகளுடைய உத்கர்ஷாபகர்ஷங்கள் பாராதே ஆபிமுக்யமே ஹேதுவாக, ஆச்ரயணீயத்வே ஸமனாகை 47 (குஹேந ஸஹித:) 48 (ஶபர்யா பூஜிதஸ் ஸம்யக்). (காருண்ய) அதாவது,—49 (ஸ்வார்த்த நிரபேக்ஷ பரது:க்காஸஹிஷ்ணுத்வம்). 119 "भृशं भवति दुःखितः" (ப்ருஶம் பவதி து:க்கித:), 120 "स्त्री प्रणष्टेति कारुण्यात्" (ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாத்). (மாதுர்ய) அதாவது,—ஸ்வரூபரூபகுணவிபூதிகளாலுண்டான ஸர்வதோமுகமான ஸாரஸ்யம். ஹந்தும் ப்ரவ்ருத்தனானாலும் அவனுக்கு ரஸாவஹனாயிருக்கை. 52 (அஹார்யமிவ ஸூர்யேண), 51 (ஏஹ்யேஹி புல்லாம்புஜபத்ரநேத்ர), 31 (ஸர்வ கந்தஸ் ஸர்வரஸ:). (காம்பீர்ய) அதாவது,—ஆச்ரிதர்க்குச்செய்ய நினைத்திருக்குமவை ஒருத்தராலும் பரிச்சேதிக்கவொண்ணாதாயிருக்கை. அதாவது,—தன்னுடைய கொடையின் சீர்மையையும், கொள்ளுகிறவனுடைய சிறுமையையும் பாராதொழிகை. எல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்யாதானாயிருக்கை. [52 (யஆத்மதா பலதா:)] * "உன்னடியார்க்கென் செய்வனென்றே இருத்தி நீ" (ஔதார்ய) அதாவது,—ஆச்ரிதருடைய அபேக்ஷிதங்களை இரந்து கொடுக்கை. 54 (ஸ ஸர்வாநர்த்திநோ த்ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்யச) 55 (உதாராஸ் ஸர்வ ஏவைதே). (சாதுர்ய) அதாவது,—ஆச்ரிதருடைய தோஷங்களைப் பிராட்டியும் அறியாதபடி மறைத்துவைக்கை. ஆச்ரிதராயிருப்பார். தன்னுடைய ரக்ஷகத்வத்திலே அதிஶங்கை

* பெரியதிருவ 53.

**स्थैर्यधैर्यशौर्यपराक्रमसत्यकामसत्यसङ्कल्पकृतित्वकृतज्ञताद्यसंख्येयकल्याणगुण-गणौघमहार्णवं परब्रह्मभूतं पुरुषोत्तमं**

ஸ்தைர்ய தைர்ய சௌர்ய பராக்ரம ஸத்யகாம ஸத்ய ஸங்கல்ப க்ருதித்வ க்ருதஜ்ஞதாத்யஸங்க்யேய கல்யாண குணகணௌகமஹார்ணவம் பரப்ரஹ்மபூதம் புருஷோத்தமம்

---

பண்ணினால், அவ்வதிசங்கையைப் போக்கிரக்ஷிக்கை. 56 (பாதாங்குஷ்டேந சிக்ஷேப ஸம்பூர்ணம் தசயோஜநம்) 121 **"बिभेद च पुनस्सालान्"** (பிபேத ச புநஸ் ஸாலாந்). (ஸ்தைர்ய) அதாவது,—ப்ரத்யூஹ ஸஹஸ்ரம் உண்டானாலும், ஆச்ரிதரக்ஷண ப்ரதிஜ்ஞை குலையாதொழிகை. மஹாராஜர் தடக்கமானார் நேராக விரோதிக்கச்செய்தேயும் 57 (ந த்யஜேயம் கதஞ்சந) என்றாரிறே. ஆக, இப்பன்னிரண்டு குணம் ஆச்ரிதவிஷயம்.

அநந்தரம் மூன்று குணம் ஆச்ரிதப்ரதிபக்ஷவிஷயம். (தைர்ய) அதாவது,—எதிரியை மதியாதொழிகை. லங்கையிலே ராவணனும் பலமுமெல்லாம் குறியழியாதிருக்க, அவன் தம்பியைக் கடலுக்கு இக்கரையிலே லங்காராஜ்யத்துக்கு அபிஷேகம் பண்ணிவைத்தானிறே. 122 **"अब्धिं न तेरिथ"** (அப்திம் ந தேரித). மூலபலம் ஸந்நிஹிதமான வன்று பெருமாள் திருவுள்ளம் பூர்வக்ஷணத்திற்காட்டில் ஒரு விக்ருதியின்றிக்கேயிருந்தபடியைச் சொல்லிற்றாகவுமாம். (சௌர்ய) அதாவது,—பரபலத்திலே சென்று புகும்போது ஸ்வபலம்போலேயிருக்கையும், 59 (சிந்நம் பிந்நம் சரைர் தக்தம்) என்கிறபடியே ப்ரஹர்த்தாவாயிருக்கையும். (பராக்ரம) அதாவது,—சாரிகை வரும்போது கையும் வில்லுமாக ஸஞ்சரிக்கும் ஸஞ்சாரத்திலே எதிரிகள் துவக்குண்டு எதிரியென்றறியாதபடி ஸஞ்சரிக்கை. 123 **"प्रहर्तारं शरीरेषु"** (ப்ரஹர்த்தாரம் சரீரேஷு).

(ஸத்யகாம) அநந்தரம் ஆச்ரிதவிஷயமாயும், உபாயவிஷயமாயும், உபேயவிஷயமாயுமிருக்கும் நாலு குணங்களைச் சொல்லுகிறது. நித்யமான காமங்களை உடையவனென்கிறது. அதாகிறது,—ஆச்ரிதர்க்கு அநுபாவ்யமான குணங்களையும் விபூதிகளையும் சொல்லுகிறது. அன்றிக்கே, "காம்யந்த இதி காமா:" ஆச்ரிதரக்ஷணவிஷய மநோரதம்

காமமாகிறது. அது அப்ரதிஹதமாயிருக்கையென்றுமாம். (ஸத்ய ஸங்கல்ப) அதாவது,-அபூர்வமான போக்யங்களை ஸங்கல்பித்து, அநுபவிப்பிக்குமிடத்தில் அமோகமாயிருக்கை. * "காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து" இருக்குமவர்களுக்குக் கண்ணாலே கண்டு அநுபவிக்கைக்கு தேவமநுஷ்யாத்யவதாரஸங்கல்பம் அப்ரதிஹதமாயிருக்கையென்றுமாம். (க்ருதித்வ) அதாவது,— ஆச்ரிதர் அபிமதம் பெற்றால் அப்பேறு தன்னதாயிருக்கை. 60 (அபிஷிச்ய சலங்காயாம்).இவர்கள் கர்த்தவ்யங்களையடையத் தான் ஏறிட்டுக்கொண்டு செய்கை என்றுமாம். ஆதிகர்மணி க்திந்நந்த:. (க்ருதஜ்ஞதா) அதாவது,- ஆச்ரிதர் ஒருகால் சரணமென்ன, அம்மாத்ரத்தாலே பின்பு செய்யும் குற்றம் பாராதே அத்தையே நினைத்திருக்கை. [ஆச்ரிதவிஷயத்தில் தான் செய்தவற்றையொழிந்து அவர்கள் செய்தவற்றையே நினைத்திருக்கையென்னவுமாம்.] ஆச்ரிதர்க்கெல்லாம் செய்தாலும், ப்ரதமத்திலே சரணமென்ற உக்திமாத்ரத்தையே நினைத்திருக்குமென்னவுமாம். [ஆச்ரிதர்க்கு எல்லாம் செய்தாலும், அத்தை மறந்து அவர்கள் செய்ததையொழியத் தான் செய்யாதவற்றையே நினைத்திருக்கையென்னவுமாம்.]62(ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா). (ஆதி) இவைமுதலான. (அஸங்க்யேய கல்யாண குணகணௌக மஹார்ணவம் என்னுடைய மநஸ்ஸுக்கு கோசரமாயிருப்பன சில குணங்கள் சொல்) லிற்றித்தனைபோக்கி, அநுக்தமான குணங்களுக்கு எண்ணில்லை. ஒரு மஹார்ணவத்தில் ஜலபரமாணுவுக்கு ஸங்க்யையுண்டாகிலாய்த்து பகவத்குணங்களுக்கு ஸங்க்யையுண்டாவது. 63 (வர்ஷாயுதைர் யஸ்ய குணா ந ஶக்யா:) 64 (சதுர்முகாயுர் யதி கோடிவக்த்ர:)

(பரப்ரஹ்மபூதம் புருஷோத்தமம்) பரப்ரஹ்மஶப்தத்தாலும், புருஷோத்தமஶப்தத்தாலும் வேதாந்தங்களிலே ப்ரஸித்தனானவன். [பரப்ரஹ்மமாவது,—] ப்ருஹத்த்வப்ரும்ஹணத்வகுணயோகத்தாலே ப்ரஹ்மஶப்தவாச்யத்வம். ப்ருஹத்த்வமாவது,—தான் பெரியனாகை. ப்ரும்ஹணத்வமாவது,— † "தம்மையேயொக்க அருள் செய்வர்" என்றும், 124 "मम साधर्म्यमागताः" (மம ஸாதர்ம்யமாகதா:) என்றும் சொல்லுகிறபடியே ஆஶ்ரிதரைத் தன்னைப்போலேயாக்குகை.

* திருவாய் (8-5-2) † பெரியதிரு (11-3-5)

श्रीरङ्गशायिनम् अस्मत्स्वामिनं प्रबुद्धनित्यनियाम्यनित्यदास्यैकरसात्मस्वभावोऽहं तदेकानुभवः तदेकप्रियः परिपूर्णं भगवन्तं विशदतमानुभवेन निरन्तरमनुभूय तदनुभवजनितानवधिकातिशयप्रीतिकारिताशेषावस्थोचिताशेषशेषतैकरतिरूप नित्यकिङ्करो भवानि ॥

ஸ்ரீரங்கசாயிநம் அஸ்மத்ஸ்வாமிநம் ப்ரபுத்த நித்யநியாம்ய நித்யதாஸ்யை கரஸாத்மஸ்வபாவோஹம் தேதேகாநுபவஸ் ததேக ப்ரிய: பரிபூர்ணம் பகவந்தம் விசததமாநுபவேந நிரந்தரமநுபூய ததநுபவ ஜநிதாநவதிகாதிசய ப்ரீதிகாரிதா சேஷாவஸ்தோசிதா சேஷ சேஷதைகரதிரூப நித்யகிங்கரோ பவாநி ॥

---

† "தன்னுகவேகொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளும்" புருஷோத்தமத்வமாவது, — 125 "यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः। अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः॥" (யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷரமக்ஷராதபி சோத்தம: । அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:॥) என்று ஸர்வாதிகனென்றும், "புரு-பஹு, ஸநோதி ததாதீதி புருஷ:" என்று ஸர்வாபேக்ஷித பலப்ரதனுகையாலே பரமோதாரனென்றும் சொல்லப்படுகை. (ஸ்ரீரங்கஶாயிநம்) இப்படி என்றுமொக்க ஓலைப்புறத்திலே கேட்டுப் போகையன்றிக்கே, கண்ணாலே கண்டு அநுபவிக்கலாம்படி, கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற நீர்மையைச் சொல்லுகிறது. (அஸ்மத்ஸ்வாமிநம்) இத்தால் * "கிடந்ததோர் கிடக்கை" என்கிறபடியே, கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற அழகாலும் சீலத்தாலும், தம்மோடு எனக்குண்டான முறையை உணர்த்தினவரென்றபடி. 126 "गुणैर्दास्यमुपागतः" (குணைர் தாஸ்யமுபாகத:) என்னக்கடவதிறே.

இதுக்குக் கீழ் கைங்கர்யப்ரதிஸம்பந்தியைச் சொல்லிற்றாய்த்து. இனிமேல் கைங்கர்யத்துக்கு ஆச்ரயமான ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார். (ப்ரபுத்த நித்யநியாம்ய நித்யதாஸ்யைக ரஸாத்ம ஸ்வபாவோऽஹம்) நித்யநியாம்யமாய், நித்யமான தாஸ்யத்தையே ஏகரஸமாக உடைத்தாயிருந்துள்ள ஆத்மஸ்வபாவம் உள்ளபடி ப்ரகாசித்த நான். இத்தால் ஸ்வாதந்த்ர்யமும் விஷயாந்தரமும் ஆத்மநாஶகமென்றபடி. (ததேகாநுபவ:) பகவத்விஷயமொன்றுமே ஜ்ஞாநத்துக்கு விஷயமாம்

---

† திருவாய் (3-9-4) * திருமாலை 23.

படியாய். (ததேகப்ரிய:) அவனையே பக்திக்கு விஷயமாக்கினவனாய். இத்தால் பகவதநுபவஹேதுவாயிருந்துள்ள பரபக்த்யாதிகளை நினைக்கிறது. (பரிபூர்ணம் பகவந்தம் விஶததமாநுபவேந நிரந்தரமநுபூய) ஜ்ஞாநாதிகளால் குறைவற்றிருக்கிற ஈச்வரனைப் பரிபூர்ணமாக விஶததமாநுபவத்தாலே இடைவிடாதே அநுபவித்து. பூர்ணாநுபவமாகிறது,—ஸ்வரூபரூபகுணவிபூதிகளெல்லாம் அநுபவத்துக்கு விஷயமாயிருக்கை. விஶதாநுபவமாகிறது,—ப்ரத்யக்ஷாநுபவமென்னலாம்படி தத்ஸமமாயிருக்கை. அதுதான் ப்ரபக்திதஶாநுபவம். விஶததராநுபவமாகிறது பரஜ்ஞாநதஶாநுபவம். விஶததமாநுபவமாகிறது பரமபக்திதஶாநுபவம். நிரந்தராநுபவமாகிறது,—இடையிடையே விஷயாந்தரம் கலசாதிருக்கை. (ததநுபவஜநிதாநவதிகாதிஶய ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோசிதாஶேஷ ஶேஷதைகரதிரூப நித்ய கிங்கரோ பவாநி) அவ்வநுபவத்தாலே ஜநிதமான அநவதிகாதிஶய ப்ரீதியாலே செய்விக்கப்படுமதாய், ஸர்வாவஸ்தைகளிலும் உசிதமான ஸகலஶேஷவ்ருத்தியொன்றையுமே பற்றின ஆசையை வடிவாக உடைத்தாய், யாவதாத்மபாவியான கைங்கர்யத்துக்கு ஆச்ரயபூதனாக வேணும். அநவதிகாதிஶயமாகையாவது,—யாவதாத்மபாவியான கைங்கர்யத்துக்கு அடியாயிருக்கையும், பரபக்த்யாதிகளிற்காட்டில் அதிஶயித்திருக்கையும். அஶேஷாவஸ்தைகளாவன,— அந்த:புரம், திருவோலக்கம், பூஞ்சோலை, நீர்வாவி இவை முதலானவையென்னுதல், பரவ்யூஹ விபவார்ச்சாவதாரங்களாகிற அவஸ்தாவிஶேஷங்களென்னுதல். அஶேஷஶேஷதையாகிறது,—127 "निवासशय्यासनपादुकांशुकोपधानवर्षातपवारणादिभिः" (நிவாஸஶய்யாஸந பாதுகாம்ஶுகோபதாநவர்ஷாதபவாரணாதிபி:) என்றும், * "சென்றால் குடையாம்" என்றும், 128 "यदा यदा हि" (யதா யதா ஹி) என்றும் சொல்லுகிறபடியே நாநாவிதமான அடிமைகள்.

இரண்டாவது சூர்ணை அவதாரிகை:—(ஸ்வாத்ம நித்ய நியாம்யேதி) ப்ராப்யத்தை ப்ரார்த்தித்தார் கீழ். இத்தால் அநந்யகதித்வமென்ன, ஆகிஞ்சந்யமென்ன, ஸ்வதோஷமென்ன இவற்றை முன்னிட்டுக்கொண்டு, இந்தக் கைங்கர்ய ஸித்த்யர்த்தமாகத் திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

* முதல்-திருவ 53.

२. स्वात्मनित्यनियाम्यनित्यदास्यैकरसात्मस्वभावानुसन्धानपूर्वकभगवदनवधिकातिशयस्वाम्याद्यखिलगुणगणानुभवजनितानवधिकातिशयप्रीतिकारिताशेषावस्थोचिताशेषशेषतैकरतिरूपनित्यकैङ्कर्यप्राप्त्युपाय(भूत)भक्तितदुपायसम्यग्ज्ञानतदुपायसमीचीनक्रियातदनुगुणसात्त्विकतास्तिक्यादिसमस्तात्मगुणविहीनः दुरुत्तरानन्ततद्विपर्ययज्ञानक्रियानुगुणानादिपापवासनामहार्णवान्तर्निमग्नः तिलतैलवद्दारुवह्निवत्

2. ஸ்வாத்ம நித்ய நியாம்ய நித்ய தாஸ்யைகரஸ ஆத்மஸ்வபாவாநு ஸந்தாந பூர்வக பகவதநவதிகாதிசய ஸ்வாம்யா த்யகில குணகணநுபவ ஜநித அநவதிகாதிசய ப்ரீதிகாரித அசேஷாவ ஸ்தோசித அசேஷ சேஷதைகரதி ரூப நித்யகைங்கர்ய ப்ராப்த்யுபாய (பூத) பக்தி தது‌பாய ஸம்யக்ஜ்ஞாந ததுபாய ஸமீசீநக்ரியா தத நுகுண ஸாத்விகதாஸ்திக்யாதி ஸமஸ்தாத்ம குணவிஹீந: துருத்தராநந்த தத்விபர்யய ஜ்ஞாந க்ரியாநுகுண அநாதி பாபவாஸநா மஹார்ணவாந்தர்நிமக்ந:, திலதைலவத் தாருவஹ்நிவத்

---

வ்யா:--ஸ்வஸ்வரூபாநுஸந்தாந ப்ரீதியாலும், பகவத் குணாநுபவ ப்ரீதியாலும், கைங்கர்ய ஸ்வரூப கதநப்ரீதியாலும், (ஸ்வாத்ம நித்ய நியாம்ய) என்று தொடங்கி, (நித்ய கைங்கர்ய) என்னுமளவும் செல்ல உக்தத்தை அநுபாஷிக்கிறார். பாரதந்த்ர்யரஸத்தாலே ஸ்வரூபாநுஸந்தாநமும், பகவத்வைலக்ஷண்யத்தாலே தத்குணாநுபவமும், உபயாநுகூலமாக ப்ரீதிகாரிதமாகையாலே கைங்கர்யமும் அபிமதமாயிருக்குமிறே. (அநவதிகாதிசயஸ்வாம்ய) என்று ஔபாதிகஸ்வாம்யத்தை வ்யாவர்த்திக்கிறது. மாதாபித்ருப்ரப்ருதிகளுடைய ஸ்வாமித்வம் ஓரோரக்ஷணங்களுக்கு உறுப்பாய், ஒரு நாளிலே முடியவும் கடவதாயிறே இருப்பது. அங்ஙனன்றிக்கே இந்த ஸ்வாமித்வம் ஸர்வவிதரக்ஷணங்களுக்கும் உறுப்பாய் ஸத்தாப்ரயுக்தமாயுமிருக்குமிறே. ஸ்வாமித்வப்ரயுக்தமான குணங்களைச் சொல்லிற்றுக் கீழ்ச் சூர்ணையிலே. அவற்றுக்கு அடியான ஸ்வாமித்வத்தை முதலாகச் சொல்லுகிறது இங்கு. கைங்கர்ய ப்ராப்த்யுபாய [பூத] பக்தியாகிறது பரபக்தி. ததுபாய ஸம்யக் ஜ்ஞாநமாகிறது,—ஜீவபர யாதாத்ம்யவிஷயமாய், அநவரதபாவநாரூபமாம்படி பரிபக்வமான ஜ்ஞாநவிசேஷம். (ததுபாய ஸமீசீநக்ரியா) ஸமீசீநக்ரியையாகிறது,—ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநத்தையுடைத்தாய், த்ரிவிதபரித்யாகயுக்தமான

கர்மயோகம். (த த நு கு ண ஸாத்விகதாஸ்திக்யாதி ஸமஸ்தாத்மகுண விஹீந:) கீழ்ச்சொன்ன கர்மயோகத்துக்கனுகுணமாய், ஸத்வப்ரதாந மாய், 128 "शमो दमस्तपश्शौचं क्षान्तिरार्जवमेव च। ज्ञानं विज्ञानमास्तिक्यं" (ஶமோ தமஸ் தபஶ்ஶௌசம் க்ஷாந்திரார்ஜவ மேவ ச। ஜ்ஞானம் விஜ்ஞானமாஸ்திக்யம்) என்கிறபடியே ஶமதமாத்யாஸ்திக்ய பர்யந்த மான குணங்களும், அமாநித்வாத்யாத்மகுணங்களுமான ஸமஸ்தாத்மகுணங்களாலே ஶூந்யனாயிருந்தேனேயாகிலும். (துருத்தராநந்த தத்விபர்யய ஜ்ஞாநக்ரியாநுகுணாநாதி பாபவாஸநா மஹார்ணவாந்தர் நிமக்ந:) இதுக்குக்கீழ் 129 "अकिञ्चनः" (அகிஞ்சந:) என்கிறபடியே தம்முடைய ஆகிஞ்சந்யம் சொன்னாராய், இதுக்குமேல் 129 "अहमस्य पराधानामालयः" (அஹமஸ்ம்யபராதாநாமாலய:) என்கிறபடியே ஸ்வதோஷக்யாபநம் பண்ணுகிறார். கடக்கவரிதாய், அவதியின்றிக்கே, கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞானங்களுக்கு விபரீதமாயிருந்துள்ள ஜ்ஞாந மென்ன, வ்ருத்தமென்ன இவற்றுக்கு அநுகுணமாய் அநாதியாயி ருந்துள்ள பாபவாஸனையாகிற பெருங்கடலிலே அழுந்திக்கிடக்கிற. பாபவாஸனையாகிறது பாபத்தால் வந்த வாஸனையாதல், பாபஹேது வான வாஸனையாதல்.

(திலதைலவதித்யாதி) பாபவாஸனையில் அகப்படுகைக்கடியான ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தனமான ஸ்வரூபதிரோதாநத்தைச் சொல்லு கிறது. (திலதைலவத் தாருவஹ்நிவத் துர்விவேச) ப்ருக்ருத்யாத்ம விவேகம் பண்ணுமிடத்தில் சிலரால் பிரிய அநுஸந்திக்க அரிதென்னு மிடத்துக்கு [இரண்டு] த்ருஷ்டாந்தம் சொல்லுகிறார். விரகராய், சக்தருமாயிருப்பார் பிரிக்கில் பிரிக்குமத்தனையிறே. எள்ளில் எண்ணெ போலவும், அரணியில் அக்நிபோலவுமிருக்கை. இப்படி ஜ்ஞாந வாஸனையாலும் பகவத்ப்ரஸாதத்தாலுமாக ப்ரக்ருதியையும் ஆத்மாவையும் பிரிய அநுஸந்திக்குமதொழிய, அல்லாதார்க்கு பிரிய அநுஸந்திக்கவொண்ணாதபடியிறே ப்ரக்ருதியில் ஆத்மா அழுந்தித் திரோஹிதமாய்க்கிடக்கிறபடி. 130 "दारुण्यग्निर्यथा तैलं तिले तद्वत्पुमानपि। प्रधानेऽवस्थितो व्यापी चेतनात्मात्मवेदनः॥" (தாருண்யக்நிர் யதா தைலம் திலேதத்வத் புமாநபி। ப்ரதாநேऽவஸ்திதோ வ்யாபீ சேத-நாத்மாத்மவேதந:॥) என்னக்கடவதிறே. (த்ரிகுணக்ஷணக்ஷரணஸ்வபாவ) ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களையும், ஸததபரிணாமித்வத்தையும் ஸ்வபாவ

**दुर्विवेचत्रिगुणक्षणक्षरणस्वभावाचेतनप्रकृतिव्याप्तिरूपदुरत्ययभगवन्मायातिरोहितस्वप्रकाश : अनाद्यविद्यासञ्चितानन्ताशक्यविस्रंसनकर्मपाशप्रग्रथित : अनागतानन्तकालसमीक्षयाऽप्यदृष्टसन्तारोपाय:,निखिलजन्तुजातशरण्य!श्रीमन्! नारायण! तव चरणारविन्दयुगलं शरणमहं प्रपद्ये॥**

**३. एवमवस्थितस्याप्यर्थित्वमात्रेण परमकारुणिको भगवान्**

துர்விவேச த்ரிகுணக்ஷணக்ஷரண ஸ்வபாவ அசேதந ப்ரக்ருதி வ்யாப்தி ரூப துரத்யய பகவந்மாயா திரோஹித ஸ்வப்ரகாச: அநாத்யவித்யா ஸஞ்சித அநந்த அசக்யவிஸ்ரம்ஸந கர்மபாச ப்ரக்ரதித: அநாகத அநந்த கால ஸமீக்ஷயாபி அத்ருஷ்ட ஸந்தாரோபாய: நிகில ஜந்து ஜாத சரண்ய! ஸ்ரீமந்நாராயண! தவ சரணாரவிந்த யுகளம் சரணமஹம் ப்ரபத்யே ॥

3. ஏவமவஸ்திதஸ்யாபி அர்த்தித்வ மாத்ரேண பரமகாருணிகோ பகவாந்

மசுக உடைத்தாய். (அசேதந ப்ரக்ருதிவ்யாப்திரூப) ஜடஸ்வபாவமான ப்ரக்ருதியிலே அவர்ஜநீயமான ஸம்பந்தத்தையுடைத்தாய். (துரத்யய பகவந்மாயா திரோஹித ஸ்வப்ரகாஶ:) 97 (மம மாயா துரத்யயா) என்கிறபடியே கடக்கவரிதுமாய், ஒரு ஸர்வஶக்தியாலே பிணைக்கப் பட்டதாய், 131 **"मायान्तु प्रकृतिं विद्यात्"** (மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்) என்கிறபடியே மாயாஶப்தவாச்யையாயிருந்துள்ள ப்ரக்ருதி யாலே மறைக்கப்பட்ட ஆத்மப்ரகாஶத்தை உடையனாய். (அநாத்ய வித்யா ஸஞ்சிதாநந்தாஶக்ய விஸ்ரம்ஸந கர்மபாஶப்ரக்ரதித:) அநாதி யான அஜ்ஞாநத்தாலே திரட்டப்பட்டதாய், முடிவின்றிக்கே என்னோடு பிறரோடு வாசியற ஒருவராலும் அவிழ்க்க ஶக்யமன்றிக்கே யிருந்துள்ள புண்யபாப ரூபமான கர்மமாகிற கயிற்றாலே * "புறமறக் கட்டிக்கொண்டு" என்கிறபடியே கட்டுண்டவனாய். இவ்வளவும் வர 129 (அபராதாநாம் ஆலயத்வம்) சொல்லிற்றாய்த்து. (பாபவாஸநா மஹார்ணவாந்தர் நிமக்ந:) என்று வைத்து, பின்பு (பகவந்மாயா திரோ ஹித ஸ்வப்ரகாஶ:) என்று வைத்து, பின்பு (கர்மபாஶப்ரக்ரதித:) என்கையாலே வாஸநாகார்யம் ஸ்வரூப திரோதாநரூபமான அஜ்ஞா நம்; தத்கார்யம் கர்மம் என்று சொல்லிற்றாய்த்து.

* திருவாய் (5-1-6).

(அநாகதாநந்தகாலஸமீக்ஷயாப்யத்ருஷ்ட ஸந்தாரோபாயோऽஹம்) ஆகையாலே † மேல் வரப்புகுகிறதாய், அநந்தமாயிருந்துள்ள கால பரம்பரைகளடையப்பார்த்தாலும் காணப்படாமலிருந்துள்ள ஸம்ஸார ஸாகர ஸமுத்தரணோபாயத்தை உடையனல்லாத நான். (நிகில ஜந்து ஜாதஶரண்ய) இப்படி அநுகூலங்களில் ஒன்றுமின்றிக்கே, ப்ரதி கூலங்களில் இல்லாததின்றிக்கே, ஜநநமாத்ரயோகிகளான ஸகல ஜந்துக்களுக்கும் ஶரணவரணார்ஹனானவனே! இத்தால் எனக்கும் ஶரணவரணார்ஹனென்று கருத்து. "அகிலஜகத்ஸ்வாமிந்" என்று வைத்து, "அஸ்மத்ஸ்வாமிந்" என்னுமாப்போலே. (ஸ்ரீமந்) பூர்வ வ்ருத்தம் பார்த்து, 9 (க்ஷிப்யாமி) என்ன அவஸரமின்றிக்கே, அருகே யிருந்து சேர்ப்பாருமுண்டென்கிறார். (நாராயண) இஜ்ஜந்து விமுகமாய்க்கிடக்கும் தசையிலும், ஸத்தையை நோக்கிக்கொண்டு போந்தவனல்லையோ? ஆக, அருகிருக்கும் பிராட்டியைப் பார்த்தாலும், தேவரைப் பார்த்தாலும் எவ்வழியாலும் ரக்ஷித்தேயாகவேணும் என்றபடி. (தவசரணாரவிந்தயுகளம்) பரமகாருணிகரான தேவருடைய தாய், ஸர்வஸுலபமாய், நிரதிஶய போக்யமாய், ஒன்றுக்கொன்று உபமாநமாமதொழியச் சலித்துப்பார்த்தாலும் வேறு உபமானமின் றிக்கேயிருக்கிற திருவடிகளை. (ஶரணம் ப்ரபத்யே) உபாயமாக அத்யவஸிக்கிறேன். இது, கத்யர்த்தமானாலும், "கத்யர்த்தா புத்த்யர்த்தா:" என்கிற ந்யாயத்தாலே அத்யவஸாயத்தைக் காட்டுகிறது.

மூன்றாவது சூர்ணை அவதாரிகை:—(ஏவமவஸ்திதேத்யாதி) உபாய வரணஸமநந்தரம், அர்த்தித்வமாத்ரத்தாலே எனக்கு தாஸ்யரஸத்தைத் தந்தருளவேணும் என்று மஹாவிச்வாஸத்தை முன்னிட்டுக் கொண்டு தம்முடைய ப்ராப்யத்தை அர்த்திக்கிறார்.

வ்யா:—(ஏவமவஸ்திதஸ்யாபி) உக்தப்ரகாரத்தாலே நின்ற எனக்கும். அதாகிறது,—அபராதாநாமாலயனாய், அகிஞ்சநனாய்க் கொண்டு, உன் திருவடிகளையே உபாயமாகப்பற்றின எனக்கும் என்றபடி. (அர்த்தித்வமாத்ரேண) விரோதிவர்க்கத்தில் உபேக்ஷை யாதல், ப்ராப்யத்தில் த்வரையாதலின்றிக்கே, நிரபேக்ஷனாயிராதே அபேக்ஷித்த மாத்ரமே கொண்டு. (பரமகாருணிகோ பகவாந்)

† (பா) இதுக்கு முன்பு பாராதே, மேலும் முடிவின்றிக்கேயிருந்துள்ள.

स्वानुभवप्रीत्योपनीतैकान्तिकात्यन्तिकनित्यकैङ्कर्यैकरतिरूपनित्यदास्यं दास्यतीति विश्वासपूर्वकं भगवन्तं नित्यकिङ्करतां प्रार्थये॥

४. तवानुभूतिसंभूतप्रीतिकारितदासताम्।
देहि मे कृपया नाथ! न जाने गतिमन्यथा॥

५. सर्वावस्थोचिताशेषशेषतैकरतिस्तव।
भवेयं पुण्डरीकाक्ष! त्वमेवैवं कुरुष्व माम्॥

६- एवंभूततत्त्वयाथात्म्यावबोधतदिच्छारहितस्यापि

ஸ்வாநுபவ ப்ரீத்யோபநீத ஐகாந்தி காத்யந்திக நித்ய கைங்கர்யைகரதிரூப நித்யதாஸ்யம் தாஸ்யதீதி விச்வாஸபூர்வகம் பகவந்தம் நித்ய கிங்கரதாம் ப்ரார்த்தயே ॥

4. தவாநுபூதிஸம்பூதப்ரீதிகாரித தாஸதாம்।
தேஹி மே க்ருபயா நாத! ந ஜாநே கதிமந்யதா ॥

5. ஸர்வாவஸ்தோசிதாசேஷசேஷதைகரதிஸ் தவ।
பவேயம் புண்டரீகாக்ஷ த்வமேவைவம் குருஷ்வ மாம் ॥

6. ஏவம்பூத தத்வயாதாத்மயாவ போத ததிச்சாரஹிதஸ்யாபி

---

என்னுடைய ஸாம்ஸாரிகமான து:க்கத்தைக்கண்டு 119 (ப்ருஶம் பவதி து:க்கித:) என்கிறபடியே அறப்பொறுக்கமாட்டாத ஸ்வபாவத்தையுடையனாய், ஆத்மோஜ்ஜீவநத்துக்குஹேதுவான ஜ்ஞாநஶக்த்யாதிகளால் பரிபூர்ணராயிருந்துள்ளவர். இவ்விஶேஷணங்களிரண்டும் அர்த்தநாமாத்ரத்தாலே புருஷார்த்தப்ரதனைக்கு ஹேதுக்களாகச் சொல்லுகிறது. இனிமேல் அபேக்ஷிதந்தன்னையே சொல்லுகிறது. (ஸ்வாநுபவப்ரீத்யோபநீதைகாந்திகாத்யந்திக நித்யகைங்கர்யரதி-ரூப) தன்னை அநுபவிக்குமத்தாலுண்டான ப்ரீதியால் உண்டாக்கப்பட்டதாய், ஒருபடிப்பட்டு முடிவின்றிக்கேயிருந்துள்ள கிங்கரபாவத்தைப்பற்றியிருந்துள்ள ஆசையை வடிவாக உடைத்தான. (நித்ய தாஸ்யம் தாஸ்யதீதி) யாவதாத்மபாவியான தாஸ்யத்தைத் தந்தருளுமென்கிற. (விச்வாஸபூர்வகம்) விச்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு. (பகவந்தம் நித்யகிங்கரதாம் ப்ரார்த்தயே) கல்யாணகுணங்களுக்கெல்லாம் ஊற்றுவாயான ஜ்ஞாநஶக்த்யாதிகள் ஆறும் தன்னை ஆச்ரயித்து நிறம்பெறும்படியான ஸர்வேச்வரனைக்குறித்து நித்யகிங்கரதையை ப்ரார்த்திக்கிறேன். தாஸ்யமென்றும் கிங்கரதையென்றும் பர்யாயம்.

நாலாவது ஐந்தாவது சூர்ணைகள் அவதாரிகை:— (தவாநுபூதீத்யாதி) தப்பாசுரத்தாலே ப்ராப்யத்தை ப்ரார்த்தித்தார் கீழ்; ஐதிஹாஸிக புருஷர்கள் ப்ரார்த்தித்த ப்ரகாரத்தே ப்ரார்த்திக்கிறார் இங்கு, என்ன பாசுரத்துக்கு இரங்கும் ஈச்வரன் என்று அறியாதபடியான தம்முடைய ப்ராப்யத்வரையாலே.

நாலாவது சூர்ணை வ்யாக்யானம்:—(தவாநுபூதிஸம்பூத ப்ரீதிகாரித தாஸதாம் தேஹி) உன்னுடைய அநுபூதியாலுண்டான ப்ரீதியாலே பண்ணப்பட்ட தாஸ்யரஸத்தைத் தந்தருளவேணும். (மே) ருசிக்கு மேற்பட இன்றியிலேயிருக்கிற எனக்கு. (க்ருபயா நாத) இத்தலையில் துர்க்கதியைக் கண்டு இரங்கின இரக்கத்தாலும், அவர்ஜநீய ஸம்பந்தத்தாலும். (ந ஜாநே கதிமந்யதா) இப்ரகாரமொழிய வேறொரு உபாயம் அறிகிறிலேன்.

ஐந்தாவது சூர்ணை வ்யாக்யாநம்:—(ஸர்வாவஸ்தோசிதாஶேஷஶேஷைதைகரதிஸ் தவ) இத்தாஸ்யத்துக்கடியான ப்ரீதியும் எனக்குண்டாம்படி தேவரே பார்த்தருளவேணுமென்கிறார். தேவர் திருவடிகளிலே ஸர்வாவஸ்தைகளுக்கும் உசிதமான ஸர்வஶேஷத்வத்தையொன்றையுமே பற்றியிருந்துள்ள ப்ரேமத்தையுடையேனாகவேணும். (பவேயம் புண்டரீகாக்ஷ) 88 (ஜிதந்தே புண்டரீகாக்ஷ) என்கிறபடியே ருசிஜநகமான கடாக்ஷத்தாலேயே இப்ரேமத்தை உடையேனும்படி பண்ணியருளவேணும். (த்வமேவைவம் குருஷ்வ மாம்) என் பக்கல் ஒரு கைமுதலின்றிக்கே ஸர்வாபேக்ஷிதங்களுக்கும் தேவர் கைபார்த்திருக்கிற என்னை தேவரே இப்படிப் பண்ணியருளவேணும்.

ஆறுவது சூர்ணை அவதாரிகை:—(ஏவம்பூதேத்யாதி) "நாம் உம்முடைய அபேக்ஷிதம் தருகைக்கு, ப்ராப்யத்தினுடைய யதாஜ்ஞாநமும், தத்ருசியும் உமக்குண்டோ" என்ன, "இப்பாசுரம் சொன்ன மாத்ரமே கொண்டு, அதின் அர்த்த தாத்பர்யத்திலே என் மநஸ்ஸு நிஷ்டமாம்படி தேவரே பார்த்தருளவேணும்" என்கிறார்.

வ்யா:—(ஏவம்பூத தத்வயாத்ம்யாவபோத ததிச்சாரஹிதஸ்யாபி) ஜீவஸ்வரூபமென்ன, பரஸ்வரூபமென்ன, ப்ராப்திபலமான கைங்கர்யமென்ன, இவற்றினுடைய யாதாத்ம்யஜ்ஞாநமின்றிக்கேயிருந்ததாகிலும், அதில் இச்சையுமின்றிக்கேயிருந்ததேயாகிலும். (ஏதநுச்சாரண

**एतदुच्चारणमात्रावलम्बनेन उच्यमानार्थपरमार्थनिष्ठं मे मनस्त्वमेवाद्यैव कारय॥**

**७. अपारकरुणाम्बुधे! अनालोचितविशेषाशेषलोकशरण्य! प्रणतार्तिहर! आश्रितवात्सल्यैकमहोदधे! अनवरतविदितनिखिलभूतजातयाथात्म्य! सत्यकाम! सत्यसङ्कल्प! आपत्सख! काकुत्स्थ! श्रीमन्! नारायण! पुरुषोत्तम! श्रीरङ्गनाथ!**

ஏததுச்சாரணமாத் ராவலம்பநேந உச்யமாநார்த்த பரமார்த்த நிஷ்டம் மே மநஸ் த்வமேவ அத்யைவ காரய॥

7. அபாரகருணாம்புதே! அநாலோசித விசேஷ அசேஷ லோக சரண்ய! ப்ரணத ஆர்த்திஹர! ஆச்ரித வாத்ஸல்ய ஏக மஹோததே! அநவரத விதித நிகிலபூதஜாத யாதாத்ம்ய! ஸத்யகாம! ஸத்யஸங்கல்ப! ஆபத்ஸக! காகுத்ஸ்த! ஸ்ரீமந்நாராயண! புருஷோத்தம! ஸ்ரீரங்கநாத!

---

மாத்ராவலம்பநேந) உக்தமான பாசுரத்தினுடைய உச்சாரணமாத்ரத்தையே பற்றாசாகக்கொண்டு, (உச்யமாநார்த்த பரமார்த்த நிஷ்டம் மே மந:) ஒரு முதலின் றிக்கேயிருக்கிற என்னுடைய * நிறைவா நில்லா † ப்ரமாதியான மநஸ்ஸை இதில் சொல்லாப்படாநின்றுள்ள அர்த்தத்தினுடைய யாதாத்மயத்திலே நிஷ்டமாம்படி. (த்வமேவாத்யைவ காரய) ஸஹகார்யந்தரநிரபேக்ஷரான தேவரே விளம்பமற இப்போதே பண்ணியருளவேணும்.

ஏழாவது சூர்ணை அவதாரிகை:—(அபாரேத்யாதி) இப்படித் தம் அபேக்ஷிதம் செய்கைக்கு ஹேதுவான அத்தலையில் ஸ்வபாவங்களை அருளிச்செய்கிறார்.

வ்யா:—(அபாரகருணாம்புதே) கரைகடந்த க்ருபாஸமுத்ரமானவனே! கருணையாகிறது பரவ்யஸநாஸஹிஷ்ணுத்வம். அது தான் அபரிச்சேத்யமாகையாலே ஸமுத்ரமாகப்பேசுகிறார். [அதுக்கு அபாரத்வமாகிறது,] 119 (வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி துஃக்கித:) என்கிறபடியே ஆச்ரிதரளவன்றிக்கே ஸ்ருதுஷ்யஸாமாந்யத்திலும் வந்தேறுகை. இத்தால் என்னளவும் வர வெள்ளங்கோத்தது என்கிறார். (அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்ய) ஜந்ம வ்ருத்த ஜ்ஞாநங்களால் வரும் ஏற்றத் தாழ்வுகள் ஏதேனும பாராதே இருந்ததே குடியாக எல்லார்க்கும் ஶரணவரணார்ஹனானவனே! இத்தால் கீழ்ச்சொன்ன க்ருபாகார்யமான ஸர்வலோகஶரண்யத்வம் சொல்

---

* பெரியதிரு (1--1--4). † கீதை (6-34).

விற்றுயிற்று. (ப்ரணதார்த்திஹர) இப்படி உக்தமான க்ருபையையும் ஸர்வலோகஶரண்யதையையும் அநுஸந்தித்துத் திருவடிகளிலே தலை சாய்ந்தார் இழவுகளைப் போக்குமவனே! (ஆச்ரிதவாத்ஸல்யைக மஹோததே) அன்றீன்றகன்றினுடம்பில் வழும்பைத் தன் பேறாகப் போக்கும் தேனுவைப்போலே, ஆஶ்ரிதருடைய தோஷங்களைத் தன் பேறாக க்ஷமிக்கையாகிற ஸ்வபாவம், அநுஸந்தாதாக்களுக்குப் பரிச்சேதிக்கவொண்ணாதிருக்கும் பெருமையை உடையவனே! (மஹோ-ததே) என்று கீழ்ச்சொன்ன கருணாம்புதியில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. (அநவரத விதித நிகில பூதஜாத யாதாத்ம்ய) ஸர்வகாலத்திலுமறியப்பட்ட ஸகலபூதஸமூஹத்தினுடைய உண்மையை உடையவனே! இத்தால் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞரான தேவர்க்கு, நான் அறிவிக்க வேண்டும்படியாயிருந்ததோ என்னுடைய தண்மை என்று கருத்து. (ஸத்யகாம) நித்யமான காமங்களை உடையவனே! இத்தால் ஆச்ரிதருடைய அபேக்ஷிதங்களைக்கொடுக்கைக்கடியான அவாப்தஸமஸ்த காமத்வம் சொல்லுகிறது. (ஸத்யஸங்கல்ப) அமோகமான ஸங்கல்பத்தையுடையவனே! அபூர்வமாக போகங்களை ஸங்கல்பித்துக் கொடுக்குமிடத்தில் அவை தப்பாதிருக்கை. (ஆபத்ஸக) ஆபத்து நேரிடுமாகில், அங்குத்தைக்குத் துணையாமவனே! தன்னால் வரும் ஆபத்துக்கும் பிறரால் வரும் ஆபத்துக்கும் ரக்ஷகரான தேவர் கைவிட்டாலும் தேவரையே துணையாகப்பற்றலாயிருக்கை. (காகுத்ஸ்த) தன்னால் வரும் ஆபத்துக்கும் நாமே துணையென்னுமிடம் எங்கே கண்டோமென்ன, ககுத்ஸ்தவம்ஶப்ரஸூதரான தேவர் ஆசரித்ததாக

132 “वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत्” (வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்) என்று ஸ்ரீ ராமாயணத்தில் எழுதக்கண்டிலோமோ என்கிறார். (ஸ்ரீமந்) தேவர் உபேக்ஷித்தாலும் தேவராலும் உபேக்ஷிக்கவொண்ணாதபடி அருகேயிருந்து சேரவிடுவாருமுண்டென்கை. இத்தால் அருகிருக்கிற பிராட்டியைப் பார்த்து ரக்ஷித்தருளவேணுமென்கிறார். (நாராயண) அவள்தானேசிதகுரைக்கிலும் *“என்னடியாரது செய்யார்” என்னுமவரல்லீரோ தேவர். இத்தால் நம்மிருவர்க்குமுண்டான ஸம்பந்தத்தைப் பார்த்து ரக்ஷித்தருளவேணுமென்கிறார். (புருஷோத்தம) உன் பக்கல் அர்த்தித்துப் பெறுவாரை உதாரர் என்னுமவரல்லீரோ தேவர்? தேவர் ஔதார்யகுணத்தைப் பார்த்து ரக்ஷித்தருளவேணுமென்கிறார். (ஸ்ரீரங்கநாத) கீழ்ச்சொன்ன

* பெரியாழ்திரு (4-10-2).

मम नाथ! नमोऽस्तु ते॥
॥इति श्रीरङ्गगद्यं समाप्तम्॥
மம நாத! நமோSஸ்து தே॥
॥ இதி ஸ்ரீரங்ககத்யம் ஸமாப்தம் ॥

ஸ்வபாவங்களெல்லாம் என்று மொக்க ஓலைப்புறத்திலே கேட்டுப் போகாமே ப்ரத்யக்ஷிக்கலாம்படியன்றோ தேவர் கோயிலிலே கண் வளர்ந்தருளுகிறபடி. (மம நாத) கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறது இம்முறையை எனக்கு உணர்த்துகைக்காக என்கிறார். (நமோஸ்துதே) முறையை அறிந்தவர்களுக்கு அபேக்ஷிதமாய் ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தை அபேக்ஷித்துத் தலைக்கட்டுகிறார். [† "உண்டிட்டாயினி உண்டொழியாய்" என்னக்கடவதிறே. தேவரீர்க்கே ஶேஷமான] இவ்வாத்மவஸ்து தேவரீர்க்கே போக்யமாய்த் தலைக்கட்டவேணும்.

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த
ஸ்ரீரங்க கத்யவ்யாக்யாநம் ஸம்பூர்ணம்
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

## ஸ்ரீவைகுண்ட கத்ய வ்யாக்யாநம்.

ப்ரவேசம்

பாஷ்யகாரர் தம் திருவுள்ளக் கருத்தில் அறுதியிட்ட அர்த்தம் பனைநிழற்போலே தம்மொருவரளவிலே பர்யவஸியாதே, கல்பகதருச் சாயை போலே பரோபகாரார்த்தமாக உபாயோபேயங்களை அநுஷ்டிப்பான் என்று பரோபதேஶப்ரவ்ருத்தராகிறார் ஸ்ரீவைகுண்டகத்யத்திலே. பெரிய கத்யத்தில், ஸாமாந்ய பகவத்விஷயமாக அவரை நோக்கி ஸ்வப்ரார்த்தநையாக அருளிச்செய்தார். ஸ்ரீரங்ககத்யத்தில், ஸௌலப்யத்துக்கு எல்லைநிலமான பெரியபெருமாள் விஷயமாக அவரை நோக்கி ஸ்வப்ரார்த்தநையாக அருளிச்செய்தார். இதில் பரத்வத்துக்கு எல்லைநிலமான ஸ்ரீவைகுண்டநாதன் விஷயமாகப் பிறரைநோக்கிக் கர்த்தவ்யோபதேஶம் பண்ணுகிறார்.

† திருவாய் (10-10-6).

ஸ்ரீபாஷ்யத்தில், லோகத்தில் துராசாரம் உபாயமென்பார், தேவதாந்தரோபாஸநம் உபாயமென்பார், தேவதையையொழியவே கேவல கர்மம் உபாயமென்பார், கேவலம் ஜ்ஞாநம் உபாயமென்பார், கர்ம ஜ்ஞாநஸமுச்சயம் உபாயமென்பாராய்க்கொண்டு வேதவாக்யங்களை விகல்பிக்கிற பாஹ்ய குத்ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக, "நீங்கள் சொல்லுகிற வாக்யங்களுக்குப் பொருள் நீங்கள் சொல்லுகிறபடியல்ல; யுக்திகளிருந்தபடியாலும், ப்ரமாணாந்தரங்கள் இருந்தபடியாலும், கர்மஜ்ஞாநஸஹக்ருதையான பக்தியே உபாயம் என்று சொல்லுகிற இதுவே பொருள்" என்று ஸாதிக்கவேண்டுகையாலே, ப்ரபத்தியும் உள்ளே ஸூசிதமாய்க் கிடக்கச்செய்தேயும், பக்தியிலே நோக்காக உபபாதித்தருளினர். இவ்வளவாலே, துஸ்ஸகையான பக்தியை உபாயமென்று ப்ரமித்து, மந்தமதிகள் பயப்படாமைக்காக, இப்படிப்பட்ட பக்திஸித்திக்கும் புருஷார்த்த ஸித்திக்கும் சரமமான உபாயம் ப்ரபத்தியே என்னுமிடத்தை உபபாதித்தருளினர் பெரிய கத்யத்திலே. பக்திஸாத்குண்யத்துக்கும் ப்ரபத்தியே வேணுமென்று ப்ரபத்தி வைபவம் சொன்ன இவ்வளவாலே ப்ரபத்தி அங்கமாய், பக்திதானே ஸ்வதந்த்ரோபாயமோவென்னும் அதிஸங்கை பிறவாமைக்காக, ஸுஸகமாய், ஸ்வரூபாநுரூபமாய், இதரநிரபேக்ஷமாய், ஸ்வதந்த்ரமான ப்ரபத்தி உபாயமென்னுமிடத்தை வெளியிட்டார் ஸ்ரீரங்ககத்யத்திலே. இனி, இதில் இப்படி உபாயநிஷ்கர்ஷம் பிறந்தபின்பு, இவ்வுபாயப்ராப்யமான தேஸவிஸேஷ வைபவத்தையும், அத்தேசாதிபதியாய், அநுபாவ்யமான அவ்வஸ்து வைபவத்தையும், அவ்வஸ்து வைபவாநுபவஜநிதமான கைங்கர்யத்தையும், ச்ரோதாக்களுக்கு ருசி பிறக்கைக்காக அருளிச்செய்து, இவ்வர்த்தத்தில் ருசிபிறக்கைக்கடியான பாக்யமுடையார் இப்பேறு பெற்று வாழ்ந்திடுகவென்று, உபாயாம்ஸத்தை ஸங்குசிதமாக அநுவதித்து, உபேயாம்ஸத்தைப் பரக்க அருளிச்செய்து தலைக்கட்டுகிறார்.

இக்கத்யந்தானும் ஆறு சூர்ணையாயிருக்கும். அதில் முதல் சூர்ணையாலே, ஸரண்யமான வஸ்துவினுடைய ஸ்வரூபரூபகுண விபூதிவைலக்ஷண்யத்தையும், அதுக்கு எதிர்த்தட்டான தன்னுடைய வைலக்ஷண்யத்தையும் அநுஸந்தித்து, இப்படியிருந்துள்ள எனக்கு அவ்வஸ்துவைப் பெறுகைக்கு ப்ரபத்தியையொழிய வேறு உபாயமில்லை

யென்று அறுதியிட்டு, அவனுடைய ஸௌஶீல்யாதிகுணங்களே பற்றாசாக அவன் திருவடிகளிலே ஶரணம் புகுவானென்கிறார். இரண்டாம் சூர்ணையிலே, பலத்துக்கு ஸக்ருதேவ அமைந்திருக்கச் செய்தேயும் மநஸ்ஸு வேறொன்றில் கவலை போகாமைக்கும் [தனக்குக்] காலக்ஷேபத்துக்குமாக நித்யாநுஸந்தானம் பண்ணுவான் என்கிறார். மூன்றாம் சூர்ணையிலே, இவ்வுபாயநிஷ்டனானவனுக்குப் பலப்ராப்திக்குறுப்பான அர்ச்சிராதிவழியே போய் ப்ரக்ருதிமண்டலத்தைக் கடக்கும்படியையும் கடந்து சென்று ப்ரவேசிக்கிற நித்ய விபூதிவைபவத்தையும், அத்தேசத்தினுடைய பண்பையும், அங்குள்ள அலங்காரங்களையும், அப்படி அலங்க்ருதமான தேசத்தில் உலகுடைய நாய்ச்சிமாரும் தானுமாய் எழுந்தருளியிருக்கும் இருப்பையும், [அவர்களாலே பரிசர்யமாணனாயிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனையும்,] அந்நாய்ச்சிமாருக்கு அநுபாவ்யமான அவயவஸௌந்தர்யத்தையும், அதுக்கும் அதிஶயாபாதகமான திவ்யாபரணங்களுடைய ஸௌகடிதத்வத்தையும், இவற்றைக் காத்தூட்டும் திவ்யாயுத வர்க்கத்தையும், இஸ்ஸமுதாயத்தைக் கண்டநுபவித்து, அவ்வநுபவஜநிதப்ரீதியாலே அநேகதா பவித்து அடிமைசெய்யும் ஸூரிபரிஷத்தையும், அவர்களாலே அநவரதபரிசரித சரணநளினனாய் எழுந்தருளியிருக்கும் இருப்பையும் அநுஸந்தித்து, 'இப்பேற்றை நாமெப்போது பெறக்கடவோம்' என்று மநோரதித்து, அம்மநோரதாநுகுணமாகச் சென்று கிட்டி, "பெருமானே! என்னால் நித்யகைங்கர்யம்கொண்டருள வேணும்" என்று ப்ராத்தித்து ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவான் என்கிறார். நாலாம் சூர்ணையில், இவனபேக்ஷாநுகூலமாக அவனாலே ஸ்வீக்ருதனாய்க்கொண்டு அநுகூலவ்ருத்தியைப் பண்ணிக்கொண்டிருப்பான் என்கிறது. ஐந்தாம் சூர்ணையிலே இப்புருஷார்த்தத்தை நெடுங்காலம் இழந்த இழவுதீர, அநந்யபரனாய் இமையாத கண்ணினனாய்க் கொண்டு ஸதா தர்ஶநம் பண்ணிக்கொண்டிருக்குமிருப்பைச்

சொல்லுகிறது. ஆறும் சூர்ணையிலே, அவனிவனை வினவிக் குளிரக் கடாக்ஷித்துத் திருவடிகளைத் தலையிலே வைக்க, * அடிசூடுமரசாய், ஸ்வாராஜ்ய ஸாம்ராஜ்ய துரந்தரனாயிருக்குமிருப்பைச் சொல்லுகிறது.

முதல் சூர்ணை அவதாரிகை:—அதில் முதல் சூர்ணையாலே (ஸ்வாதீந த்ரிவிதசேதந) என்று தொடங்கி, (நாராயணம்) என்னுமளவாகச் சேதநாசேதந விலக்ஷணஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுகுணமான குணங்களையும் சொல்லுகிறது.

வ்யா:—(ஸ்வாதீந) இத்தால் பராதீநமான ப்ரவ்ருத்யாதிகளையுடைய சேதநாசேதநங்களைப்போலன்றிக்கே, ஸ்வாதீந ஸ்வவ்யாபாரனாயிருக்குமிருப்பைச்சொல்லுகிறது. இத்தால் 133 "जगद्वशे वर्ततेदं कृष्णस्य सचराचरम्" (ஜகத்வசே வர்த்ததேதம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம்) என்கிறபடியே தன்னையொழிந்தவையடையத் தானிட்ட வழக்காயிருக்குமென்கிறது. அவைதான் எவையென்னில்: (த்ரிவிதசேதநா-சேதந) பத்தமுக்தநித்யபேதேந மூன்றுபடிப்பட்ட ஆத்மவர்க்கமென்ன, ப்ராக்ருதாப்ராக்ருதகாலரூபமான அசித்தென்ன இவை. இவை தானேயோ பரதந்த்ரமாயிருப்பனவென்னில்: (ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம்) இவற்றினுடைய தர்மிஸ்வரூபமென்ன, தர்மமான ஸ்வபாவமென்ன, இவற்றினுடைய வ்யாபாரமென்ன இவை. (ஸ்திதி) வ்யவஸ்தித ஸ்வபாவம். 134 "नित्यो नित्यानां" (நித்யோ நித்யாநாம்) என்றும், 135 "नित्या सततविक्रिया" (நித்யா ஸதத விக்ரியா) என்றும், சேதநாசேதநங்களிரண்டின் ஸ்வபாவமும் நித்யமாகையாலே, (ஸ்வரூப ஸ்திதி) என்று ஸத்தாநுவ்ருத்தி சொல்லவேண்டா. சேதநனுக்கு ஸ்வரூபபேதமாவது,—மாயாவாதிகள்போலே ஏகாத்மாவாயிருக்கையன்றிக்கே, 134 "एको बहूनां" (ஏகோ பஹூநாம்) என்றும், 136 "नानात्मानो व्यवस्थिताः" (நாநாத்மாநோ வ்யவஸ்திதா:) என்றும் ஸுகது:க்காதிபேதத்தாலே ஆத்மாக்கள் அநேகரூபமாயிருக்கை. ஸ்வபாவபேதமாவது,—ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வ நித்யத்வ ஸ்வயம்ப்ரகாசத்வ சேஷத்வாதிகள். ப்ரவ்ருத்திபேதமாவது,—ஜ்ஞாநசிகீர்ஷா ப்ரயத்நாதிகள். அசேதநத்துக்கு ஸ்வரூபபேதமாவது,—ப்ரக்ருதி மஹதஹங்கார தந்மாத்ராகாசாதிபேதத்தாலும், கலாகாஷ்டா

* பெருமாள் திரு (10-7).

**क्लेशकर्माद्यशेषदोषासंस्पृष्टम्, स्वाभाविकानवधिकातिशयज्ञानबलैश्वर्यवीर्य - शक्तितेजः**

க்லேச கர்மாதி அசேஷ தோஷ அஸம்ஸ்ப்ருஷ்டம், ஸ்வாபாவிக அநவதி காதிசயஜ்ஞாநபல ஐச்வர்ய வீர்ய சக்தி தேஜ:

---

முஹூர்த்தாதிபேதத்தாலும் பின்னமான கார்யகாரணாவஸ்த வஸ்துக்கள். ஸ்வபாவபேதமாவது,—ஜடத்வ பரிணாமித்வ நித்யத்வ பரார்த்தத்வ ஸத்வாதி குணாஶ்ரயத்வாதிகள். ப்ரவ்ருத்திபேதமாவது,- கார்யாரம்பகத்வோபாதாநத்வ திரோதாயகத்வாப்ரகாஶத்வாதிகள்.

'க்ருஹோபகரண ப்ருத்யாதிகளினுடைய ஸ்வரூபஸம்பாதநாதி வ்யாபாரங்கள் ராஜாதிகளுக்கும் ஸ்வாதீநமாயனவன்றோ இருப்பது; அவ்வோ மாத்ரமோ?' என்னில்: (க்லேஶகர்மாத்யஶேஷதோஷா ஸம்ஸ்ப்ருஷ்டம்) அவர்களுக்கு க்லேஶகர்மாதி தோஷங்கள் உண்டாயி ருக்குமே. ஈச்வரனுக்கோவென்னில்: 137 "**क्लेशकर्मविपाकाशयैरपरामृष्टः पुरुषविशेष ईश्वरः**" (க்லேஶகர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட: புருஷ விஶேஷ ஈச்வர:) என்கிறபடியே ஈத்ருஶஸமஸ்ததோஷங்களுமின் றிக்கேயிருக்குமிறே. (க்லேஶ) அதாவது,—114 (ராகத்வேஷாபி-- நிவேஶா: க்லேஶா:). (கர்ம) அதாவது புண்யபாபரூப கர்மம். (விபாக) அதாவது,—138 "**जात्यायुर्भोगा विपाकाः**" (ஜாத்யாயுர் போகா விபாகா:). (ஆதி) ஶப்தம் வாஸநையைச்சொல்லுகிறது. 139 "**आशयो नाम वासना**" (ஆஶயோ நாம வாஸநா) என்னைக்கடவதிறே. இவற்றுக்கு வச்யனன்றிக்கேயிருக்கை. இவை ஹேயங்களுக்கெல் லாம் உபலக்ஷணமாய், 140 "**समस्तहेयरहितं**" (ஸமஸ்தஹேயரஹிதம்) என்றும், 11 (விநா ஹேயைர் குணாதிபி:) என்றும் சொல்லுகிற படியே ஸமஸ்தஹேயப்ரத்யநீகனென்று சொல்லுகிறது.

இப்படி ஹேயப்ரத்யநீகனாயிருக்குமளவேயோவென்னில்: ஸமஸ்த கல்யாணகுணங்களுக்கும் ஆதாரபூதன் என்கிறார். (ஸ்வாபாவிகா நவதிகாதிஶய ஜ்ஞாநபலைச்வர்ய வீர்யஶக்திதேஜ:) 141 "**स्वाभाविकी ज्ञानबलक्रिया च**" (ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச) என்றும், 142 "**त इमे सत्याः कामाः**" (த இமே ஸத்யா: காமா:) என்றும் சொல்லுகிற படியே, ஒரு ஸாதநாநுஷ்டாநத்தாலேயாதல், ஒரு தேவதா ப்ரஸா

தத்தாலேயாதல், ஒரு நாள் வரையிலேயாதல் போதல் வருதல் செய்கை யன்றிக்கே, குணங்கள் தர்மிக்கு ஸத்தாப்ரயுக்தமாயிருக்குமென்கை. இப்படி ஸ்வபாவஸித்தமாயிருந்துள்ள குணங்கள்தான் பரிச்சிந்நமா யிருக்குமோவென்னில்: (அநவதிகாதிஶய) 143 "यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह" (யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ) என்றும், || "உயர்வறவுயர்நலமுடையவன் யவனவன்" என்றும் சொல்லுகிறபடியே குணங்களினுடைய மிகுதிக்கு எல்லையற்றிருக்கும். 'உள்ள குணங்களுக்கு எல்லையற்றிருந்தாலும், இல்லாத குணங்களும் சில உண்டாயிருக்குமோ? உள்ள குணங்கள்தான் எவை' என்னு மபேக்ஷையிலே கிளம்புகிறது, —(ஜ்ஞாநபலைச்வர்ய வீர்யஶக்திதேஜ: ப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணகணௌக மஹார்ணவம்) (ஜ்ஞாந) அதாவது, 41 (யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:) என்கிறபடியேஸர்வகாலமுமுண்டானஸர்வபதார்த்தஸாக்ஷாத் காரம். (பல) அதாவது,—144 "स दाधार पृथिवीं द्यामुतेमां" (ஸ தாதார ப்ருதிவீம் த்யாமுதேமாம்) என்றும், 145 "विष्टभ्याहमिमं कृत्स्न मेकांशेन स्थितो जगत्" (விஷ்டப்யாஹமிமம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்திதோ ஜகத்) என்றும் சொல்லுகிறபடியே உபபவிபூதியையும் அக்லேஶேந வஹிக்கவல்ல மிடுக்கு. (ஐச்வர்ய) 146 "क्षरात्मानावीशते देव एकः" (க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:) என்கிறபடியே, இப்படி த்ரிவிதஜகத்தைத் தன் § குடைநிழலின் கீழே அமுக்கி ஆளவல்ல ளைகயாகிற நியந்த்ருத்வம். (வீர்ய) 147 "न श्रमो न च खेदस्ते जगद्धारणशासने" (ந ஶ்ரமோ ந ச கேதஸ்தே ஜகத்தாரண ஶாஸநே) என்று சொல்லுகிறபடியே ஜகத்தாரண நியமநங்களிலே ஶாரீரமான [ஸமாநஸர்வ] க்லேஶங்கள் என்றுமின்றியிலேயிருக்கை. (ஶக்தி) 141 "परास्य शक्तिर्विविधैव श्रूयते" (பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே) என்றும், 148 "न हि पालनसामर्थ्यं ऋते सर्वेश्वरं हरिं" (ந ஹி பாலந ஸாமர்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்) என்றும், 149 "चेष्टा तस्या-प्रमेयस्य व्यापिनोऽव्याहतात्मिका" (சேஷ்டா தஸ்யாப்ரமேயஸ்ய வ்யாபி நோऽவ்யாஹதாத்மிகா) என்றும் சொல்லுகிறபடியே ஏறிட்டுக் கொண்டதொரு கார்யம் முட்டுப்படாதபடி செய்து தலைக்கட்டவற் றான ஸாமர்த்யம். (தேஜ:) 150 "रकारादीनि नामानि रामत्रस्तस्य रावण।

|| திருவாய் (1-1-1). § (பா) குடைக்கீழே.

**प्रभृत्यसंख्येयकल्याणगुणगणौघमहार्णवम्,**

ப்ரப்ருதி அஸங்க்யேய கல்யாண குண கணௌகமஹார்ணவம்

---

**रत्नानि च रथाश्चैव त्रासं सञ्जनयन्ति मे**" (ரகாராதீநி நாமாநி ராமத்ரஸ்தஸ்ய ராவண। ரத்நாநி ச ரதாஶ்சைவ த்ராஸம் ஸஞ்ஜநயந்தி மே) என்கிறபடியே, வ்யாபாராந்தர நிரபேக்ஷமாக இவன் பேர் சொன்னபோதே எதிரிகள் குடல் குழம்பும்படியான மதிப்பு. அன்றியே, இத்தால் பஹுப்ரயத்நஸாத்யமானவற்றை அல்பயத்நத்தாலே தலைக்கட்டவல்லனென்றபடி. 151 "**तस्य नाम महद्यशः**" (தஸ்ய நாம மஹத் யஶ:) என்கிறபடியே வீர்யஶக்த்யாதிகளால் பிறக்கும் புகழாகவுமாம்.

ஆனால் இப்படி ஷாட்குண்யமேயோ உள்ளதென்னில்: (ப்ரப்ருதி) 152 "**तवानन्तगुणस्यापि षडेव प्रथमे गुणाः**"(தவாநந்த குணஸ்யாபி ஷடேவ ப்ரதமே குணா:) என்கிறபடியே, இவை துடக்கமான குணங்கள் பலவுமுளவென்கிறார். 'இப்படிப்பலவுமுண்டானாலும் இத்தனையென்று எண்ணப்பட்டிருக்குமோ?' என்னில்: (அஸங்க்யேய) 153 "**सङ्ख्यातुं नैव शक्यन्ते गुणाः**" (ஸங்க்யாதும் நைவ ஶக்யந்தே குணா:) என்றும், 64 "**स ते गुणानामयुतैकदेशं वदेन्न वा**" (ஸ தே குணாநாமயுதைகதேஶம் வதேந்ந வா) என்றும் சொல்லுகிறபடியே எண்ணிறந்திருக்கும். 'இப்படி எண்ணிறந்திருக்கைக்கடிதோஷகுணங்கள் கூடியோ' என்னில்: (கல்யாண) 145 "**बहवो नृप कल्याणगुणाः**" (பஹவோ ந்ருப கல்யாணகுணா:) என்றும், 153 "**सङ्ख्यातुं नैव शक्यन्ते गुणा दोषाश्च शार्ङ्गिणः। आनन्त्यात्प्रथमो राशिः अभावदेव पश्चिमः॥**" (ஸங்க்யாதும் நைவ ஶக்யந்தே குணா தோஷாஶ்ச ஶார்ங்கிண:। ஆநந்த்யாத் ப்ரதமோ ராஶி: அபாவாதேவ பஶ்சிம:) என்றும், 140 "**समस्तहेयरहितं विष्णवाख्यं**" (ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ண்வாக்யம்) என்றும், 38 "**समस्तकल्याणगुणात्मकोऽसौ**" (ஸமஸ்தகல்யாணகுணாத்மகோऽஸௌ) என்றும் சொல்லுகிறபடியே ஹேயரஹிதமான குணங்கள் முடிவின்றிக்கேயிருக்கும். (கல்யாண) ஆச்ரயமான அவன் தன்னோடு அநுபோக்தாக்களோடு வாசியற மங்களாவஹமாய்,ஸுகாவஹமாயுமிருக்கும். 155 "**कल्याणं मङ्गलं शुभं**" (கல்யாணம் மங்களம் ஶுபம்) என்னக்கடவதிறே. லோகத்திலும் 'இங்குத் திரளென்? து:க்கமோ? கல்யாணமோ?' என்று து:க்கப்ரதியோகியாக ஸுகத்தைச் சொல்லக்கடவதிறே.

(குண) கேட்டபோதே செவிபுதைக்கவேண்டுப்படியாயிருக்கையன்றிக்கே, "गुण्यन्त इति गुणाः" (குண்யந்த் இதி குணா:) என்றும், * "ஈர்கின்ற குணங்களையுடையாய்" என்றும் சொல்லுகிறபடியே "அஹோ! அஹோ!" என்று † கிழவிநூல்கொண்டு பலகாலும் ஆவர்த்திக்கும்படியாயிருக்கை. இப்படி ஒரோ குணங்களேயோ ஸங்க்யையும் அவதியுமின்றிக்கேயிருப்பதென்னில்: (கண) 156 "तेजसां राशिं" (தேஜஸாம் ராஶிம்) என்றும், § "ஒண்சுடர்க்கற்றை" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமித்வாநுபந்தியான சௌர்யமென்ன, வீர்யமென்ன, பராக்ரமமென்ன, சாதுர்யமென்ன, ஸ்தைர்யமென்ன, தைர்யமென்ன, ஏவமாதிகுணங்கள்; ஸௌலப்யாநுபந்தியான பவ்யதையென்ன, க்ருபையென்ன, அபராதஸஹத்வமென்ன, க்லேஶஸஹிஷ்ணுத்வமென்ன, தோஷத்தில் குணபுத்தியென்ன, ப்ரத்யுபகாரநைரபேக்ஷ்யமென்ன ஏவமாதிகள்; ஸௌஶீல்யாநுபந்தியான ஸ்வவைபவாஜ்ஞாநமென்ன, பரகீயஹேயாஜ்ஞாநமென்ன, அக்ருத்ரிமத்வமென்ன, ஏவமாதிகள்; வாத்ஸல்யாநுபந்தியான பக்ஷபாதமென்ன, தோஷத்தில் குணபுத்தியென்ன, உபகாரநைரபேக்ஷ்யமென்ன ஏவமாதிகள்; ஸந்தோஷாநுபந்தியான ப்ரியமோத ப்ரமோத ஆநந்தாதிகுணங்களென்ன, ஏவமாதியான ஒரோ குணங்களைப்பற்றித் திறம்திறமாக வரும் குணங்களுக்கு ஒரெல்லையில்லையெனகிறது. இப்படிக்கொத்த குணங்கள்தான் தனித்தனியே அலகலகாயோ இருப்பதென்னில்: (ஓக) ஊர் வாரியும் காட்டு வாரியும், மலைவாரியும், ஏரிகளுடைந்தவாரியும் ஓரிடத்திலே கூடினால் கங்கும் கரையுமழிந்து, கரைகாணவொண்ணாதே திரைமேல்திரையாக ஒரு வெள்ளமாக வருமாப்போலே, ஸமஸ்தகுணங்களும் ஒரு வழிப்பட்டிருக்குமென்கிறது. எல்லாம் கூடினாலும் ஆற்று வெள்ளம் தனித்தனி நீர்களைப் பிரித்தறியவொண்ணாதபடியும், கரையழியப் பெருகினாலும், ஓரிடத்தில் வந்த நீர் அவ்விடத்தில் நிலைநில்லாதொழியக்கடவதுமாய், மலையில் அடியற்றவாறே வற்றக்கடவதுமாயிறே இருப்பது. அப்படி இவ்வாச்ரயத்தில் நிலைநில்லாதபடி அஸ்திரங்களுமாய், அநித்யங்களுமாயோ இருப்பது என்னில்: (அர்ணவம்) என்கிறது. 158 "समुद्र इव सिन्धुभिः" (ஸமுத்ர இவ ஸிந்துபி:) என்கிறபடியே எல்லா நீரும் கூடிக் கடலிலே பர்யவஸிக்கவும், அவ்

* திருவாய் (8-1-6). † (பா) கீழ்விநூல்; கீழ்நூல். § திருவாய் (7-7-6)

**परमपुरुषम्, भगवन्तम्, नारायणं, स्वामित्वेन गुरुत्वेन सुहृत्त्वेन च परिगृह्य,**
பரமபுருஷம் பகவந்தம் நாராயணம் ஸ்வாமித்வேந குருத்வேந ஸுஹ்ருத்த்வேந ச பரிக்ருஹ்ய

விடத்தைவிட்டுப் போகாதொழியவும், வற்றுதொழியவும் கடவதாயிருக்குமாப்போலே, இங்கும் எல்லா குணங்களும், சேரவிருக்கக் கடவதுமாய், நித்யமுமாயிருக்கும். (அர்ணவம்) அர்ணஸ்ஸாகிறது, ஜலமாகையாலே, லவணேக்ஷு ஸுரா ஸர்ப்பி ததி க்ஷீரங்களாகிற இவ்வருகில் பரிச்சிந்நங்களான ஷட்ஸமுத்ரங்கள்போலன்றிக்கே, இவையித்தனைக்குமவ்வருகாய், அதிக பரிமாணசுத்தஜலப்போலே பெருத்திருக்கும் என்கிறது. 'இப்படியானாலும், அதுதானும் லோகாலோகச்வேத த்வீபாதிகளாலே பரிச்சிந்நமாயன்றோ இருப்பது; அதுபோலேயோ இங்கும்' என்ன—(மஹார்ணவம்) 158 "**गुणानामाकरो महान्**" (குணாநாமாகரோ மஹாந்) என்றும், 159 "**समस्तकल्याणगुणामृतोदधिः**" (ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததி:) என்றும் சொல்லுகிறபடியே, அம்ருதமயமாயிருப்பதொரு ||'பெருப்புறக் கடல்' என்கிறது.

இப்படிப்பட்ட ஸ்வரூபரூபகுணங்களையுடையதான வஸ்துதான் ஏதென்னில்: (பரமபுருஷம்) இத்யாதி; ஏவம்பூதன் நாராயணன் என்கிறது. கீத்ருக்பூதனென்னில்: (பரமபுருஷம்) புருஷஶப்தம் ஜீவேச்வரஸாதாரணமாகையாலே, 'பரம'பதத்தையிட்டு வ்யாவர்த்திக்கிறது. "பரோ மா அஸ்மாதிதி பரம:" என்று இவனுக்கு மேலாயிருப்பாரில்லை என்கிறது. இப்படி ஸர்வாதிஶாயியான வஸ்துவுக்குப்பேரென்னென்னில்: (பகவந்தம்) (ஸ்வாதீநத்ரிவித) என்று தொடங்கி ஸ்ருஷ்டிஸ்தித்யாதிகர்த்ருத்வம் சொல்லுகையாலும், (ஜ்ஞாநபலைச்வர்ய) என்று ஷாட்குண்யயோகம் சொல்லுகையாலும், 11 "**संभर्तेति तथा भर्ता भकारोर्थद्वयान्वितः। नेता गमयिता स्रष्टा गकारार्थस्तथा मुने॥**" (ஸம்பர்த்தேதி ததா பர்த்தா பகாரோऽர்த்தத்வயாந்வித:। நேதா கமயிதா ஸ்ரஷ்டா ககாரார்த்தஸ் ததா முநே॥) இத்யாதிச்லோகங்களாலும், 11 "**ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजांस्यशेषतः। भगवच्छब्दवाच्यानि विना हेयैर्गुणादिभिः॥**" (ஜ்ஞாநஶக்திபலைச்வர்ய வீர்யதேஜாம்ஸ்யஶேஷத:। பகவச்சப்த வாச்யாநி விநா ஹேயைர் குணாதிபி:॥) என்கிற ச்லோகத்தாலும் ப்ரதிபாதிதமான நிர்வசநத்தால் பலிதமான திருநாமம் சொல்லுகிறது. இத்தால் பூர்ணஷாட்குண்யனென்றும், ஜகத்காரணபூதனென்றும்

|| பெரியதிரு (7-10-1)

சொல்லிற்றாய்த்து. 'ப்ரஹ்மாதிகளுக்கும் தத்குணலேஶயோகத்தாலே ஔபசாரிகமாக பகவச்சப்தவாச்யத்வம் உண்டாயிராதோ?' என்னில்: அதுக்காக-(நாராயணம்) அநந்யபரமான நாராயணாநுவாகவிஸித்தனாய், 160 "नारायणाद्ब्रह्मा जायते। नारायणाद्रुद्रो जायते।" (நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்ரோ ஜாயதே।) என்கிறபடியே ப்ரஹ்ம ருத்ராதிகளுக்குங்கூடக் காரணபூதனுமாய், ப்ராப்யனுமானவனென் கிறது. (நாராயணம்) பகவச்சப்தத்தாலும் ஷாட்குண்யமாத்ரமிறே சொல்லிற்று. (ப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணகணௌக மஹார்ணவம்) என்று ஸமஸ்தகல்யாணகுணாச்ரயத்வம் சொல்லுகையாலே, அத்தால் பலிதமான திருநாமம் சொல்லுகிறது. (நாராயணம்) (பரமபுருஷம்) என்கையாலே ஸ்ரீபுருஷஸூக்த ப்ரமாண ப்ரதிபாத்யத்வம் சொல்லுகிறது; (பகவந்தம்) என்கையாலே 161 "भगवान् – पवित्रं वासुदेवः" (பகவாந் பவித்ரம் வாஸுதேவ:) 162 "पवित्रं वासुदेवो भगवान्" (பவித்ரம் வாஸுதேவோ பகவாந்) 163 "सङ्कर्षणो भगवान्" (ஸங்கர்ஷணோ பகவாந்)164 "प्रद्युम्नो भगवान्" (ப்ரத்யும்நோ பகவாந்) இத்யாதிரஹஸ்யாம்நாய ப்ரதிபாத்யத்வம் சொல்லுகிறது;(நாராயணம்) என்கையாலே நாராயணாநுவாகப்ரதிபாத்யத்வம் சொல்லுகிறது. ஆக, இத்தால், 165 "आदौ मध्ये तथान्ते च विष्णुस्सर्वत्र गीयते" (ஆதௌ மத்யே ததாऽந்தே ச விஷ்ணுஸ் ஸர்வத்ர கீயதே) 166 "वेदैश्च सर्वैरहमेव वेद्यः" (வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:) என்று சொல்லுகிற படியே க்ருத்ஸ்ந வேதப்ரதிபாத்யன் நாராயணன் என்னுமர்த்தம் சொல்லுகிறது.

இதுக்கு முன்பு ப்ராப்யவிஷயவைலக்ஷண்யம் சொல்லிற்று. இனி, இவ்விஷயத்தில் பண்ணும் கைங்கர்யப்ரார்த்தனையைச் சொல்லுகிறது, (தத்ப்ராப்தயே) என்னுமளவாக. (ஸ்வாமித்வேந குருத்வேந ஸுஹ்ருத்த்வேந ச பரிக்ருஹ்ய) நாராயணஶப்தத்தால் ப்ரதிபாதிக்கப்படுகிற அர்த்தத்தை அநுஸந்திக்கிறபடி. ஸ்வாமித்வ ஸௌலப்ய ஸௌஶீல்ய வாத்ஸல்யாதிகளிறே நாராயணஶப்தார்த்தம். (ஸ்வாமித்வேந) என்கையாலே ஸ்வாமித்வம் சொல்லுகிறது. (குருத்வேந) என்கையாலே * "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி" என்கிற ஸௌலப்யம் சொல்லுகிறது. (ஸுஹ்ருத்த்வேந) என்கையாலே ஸௌஶீல்யம் சொல்லுகிறது. சகாரத்தாலே வாத்ஸல்யம் சொல்

* பெரியாழ்திரு (5-2-8)

**एकान्तिकात्यन्तिकतत्पादाम्बुजद्वयपरिचर्यैकमनोरथः,**
ஐகாந்திக *(ஆத்யந்திக) தத்பாதாம்புஜத்வய பரிசர்யைக மநோரத:

லுகிறது. அன்றிக்கே, சகாரத்தாலே ஸமுச்சயமாய், வாத்ஸல்யம் உபலக்ஷிதமாகவுமாம். அன்றிக்கே, (ஸ்வாமித்வேந) என்று, (பரமபுருஷம்) என்று பரமபுருஷஶப்தத்தாலே ஸூசிதமான புருஷஸூக்தத்தில் ப்ரதிபாதிதமான ஸ்வாமித்வத்தைச் சொல்லுகிறது. (குருத்வேந) என்று, (பகவந்தம்) என்கையாலே பகவச்சப்தஸூசிதமான ரஹஸ்யாம்நாயத்தில் 163 (ஸங்கர்ஷணோ பகவாந்) என்று ஸங்கர்ஷணரூபேண ஜ்ஞாநப்ரதாநம் பண்ணின குருத்வத்தைச் சொல்லுகிறது. (ஸௌஹ்ருத்த்வேந) என்று, (நாராயணம்) என்று நாராயணஶப்தத்தாலே ஸூசிதமான நாராயணாநுவாகத்தில், 167 **"अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः"** (அந்தர் பஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:) என்றும், 168 **"तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः"** (தஸ்யா: ஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:) என்றும் இவற்றை விடமாட்டாதே உட்புகுந்து கலந்திருக்கும் என்று ப்ரதிபாதிதமான ஸௌஹார்த்தத்தைச் சொல்லுகிறது. (ஸ்வாமித்வேந) என்கையாலே ஶரணாகதி பண்ணுகைக்குப் பற்றுசான ஸ்வஸ்வாமிஸம்பந்தம் சொல்லுகிறது. (குருத்வேந) என்கையாலே ஶிஷ்யாசார்யஸம்பந்தம் சொல்லுகிறது. (ஸௌஹ்ருத்த்வேந) என்கையாலே 99 (ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:) என்று லக்ய நிபந்தநமான ஸம்பந்தம் சொல்லுகிறது. ஸௌஶீல்யம் சொல்லுகிறது என்றும் சொல்லுவர்கள். இத்தால் ஸர்வவிதஸம்பந்தமும் அவனோடு என்றபடி. (பரிக்ருஹ்ய) என்று ஒருதலை மாற்றமாகத் தான் ப்ரதிபத்திபண்ணுகையன்றிக்கே, ஸர்வாவிகீதமாக லோகபரிக்ருஹீதமான அர்த்தமென்கை. (பரிக்ருஹ்ய) பரிதோ க்ருஹீத்வா. ஶாஸ்த்ராவலோகநத்தாலும், ஆசார்யோபதேஶத்தாலும், பகவதநுஷ்டாநத்தாலுமாகிற ஸர்வப்ரகாரத்தாலும் நெஞ்சிலே ஸ்வீகரித்து.

இப்படி அத்தலையில் ஸ்வாமித்வாநுஸந்தாநம் பண்ணினவநந்தரம் 169 **"आत्मदास्यं हरेः स्वाम्यं"** (ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம்) என்று ஸ்வாமித்வப்ரதிஸம்பந்தியான தாஸ்யாநுகுணவ்ருத்திவிஶேஷத்தை ஆசைப்படும்படி சொல்லுகிறது,—(ஐகாந்திக தத் பாதாம்புஜத்வய பரிசர்யை கமநோரத:) என்கிற பதத்தாலே. (ஐகாந்திக) ஏகாந்தஸம்பந்தியாயிருக்கை; அதாவது,—அந்தரங்கமென்றபடி. அது 'தத்'

* 'ஆத்யந்திக' பதம் வ்யாக்யாநத்திலில்லை.

பதத்தோடே அந்வயிக்கவுமாம். தத்பாதாம்புஜத்வயத்தோடே அந்வயிக்கவுமாம். பரிசர்யையோடே அந்வயிக்கவுமாம். தத்பதத்தோடே அந்வயித்தபோது நிருபாதிகபந்துவானவன் என்றபடி. தத்பாதாம்புஜத்வயத்தோடே அந்வயித்தபோது 170 **"त्वत्पादपङ्कजपरिग्रहधन्यजन्मा भूयासमित्यभिनिवेशकदर्थ्यमानः"** (த்வத் பாதபங்கஜ பரிக்ரஹ தந்ய ஜந்மா பூயாஸமித்யபிநிவேஶ கதர்த்யமாந:) என்றும், 171 **"अङ्के निधाय करभोरु यथासुखं ते संवाहयामि चरणौ"** (அங்கே நிதாய கரபோரு யதாஸுகம் தே ஸம்வாஹயாமி சரணௌ) என்றும், பாஹ்யவிஷயங்களில் காமம்போலே அப்ராப்தமாயிருக்கையன்றிக்கே, ஶேஷியுடைய திருவடிகளிலே ஶேஷபூதனுக்குப் பிறக்கும் காமம் ஸ்வத: ப்ராப்தமென்கை. (தத்பாதாம்புஜத்வய) தச்சப்தம் ப்ரக்ருதபராமர்ஶியாகையாலே (நாராயணம்) என்று ப்ரஸ்துதனானவனைப் பராமர்சிக்கிறது. இத்தால் "நாராயண-சரணௌ" [த்வயம்] என்கிறபதத்தை நினைக்கிறது. (பாதாம்புஜத்வய) (தத்) என்று தர்மி ப்ரஸ்துதமாயிருக்கச்செய்தேயும், (பாத) என்று திருவடிகளைச் சொல்லுகிறது, ஸ்தநந்தயப்ரஜைக்கு மாதாவினுடைய முலைக்கண் அபேக்ஷிதமானாப்போலே ஶேஷபூதனுக்கும் ஸ்வரூப ப்ராப்தமாகை. அங்கு முலைக்கண்ணில் பாலூறுமாப்போலே 172 **"विष्णोः पदे परमे मध्व उत्सः"** (விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:) என்றும், 173 **"तवामृतस्यन्दिनि पादपङ्कजे"** (தவாம்ருதஸ்யந்திநி பாத-பங்கஜே) என்றும் சொல்லுகிறபடியே இவனுக்கும் திருவடிகளிலே போக்யதையூற்று இருக்குமே. (அம்புஜ) இதுதான் வைதமாய், கஷாயபாநம்போலேயிருக்கையன்றிக்கே, ராகப்ராப்தமாம்படி போக ரூபமாயிருக்கும். [அம்புஜ] அமரர் சென்னிப் பூவாகையாலே குளித்து † மயிருக்குப் பூவைக்கும்போது "ஶிரஸா தாரயேத்" என்று விதிக்கவேண்டாவிறே. (த்வய) உபாயம் த்வயமாயிருக்கையாலே உபேயமும் த்வயமாயிருக்கிறபடி. 174 **"चरणद्वन्द्वं व्रजामि"** (சரணத்-வந்த்வம் வ்ரஜாமி) என்னக்கடவதிறே. இத்தால் "சரணௌ" என்கிற த்விவசநத்தை நினைக்கிறது. (பரிசர்யா) சர்யா—சரித்ரம்; அநுஷ்டாநம்; கைங்கர்யமென்றபடி பரிசர்யையாவது—ஸர்வவிதகைங்கர்யமென்றபடி. இவ்வவயவஶக்தியையொழிய, பரிசர்யையென்கிற ரூடியாலே கௌரவ்யவிஷயத்தில் பண்ணும் அநுவ்ருத்திக்குப் பேராய், அத்தால் கைங்கர்யத்தை விவக்ஷிக்கிறதாகவுமாம். அன்றிக்கே பரிதஶ்சர்யை

---

† (பா) மயிரும் பூவுமிருக்கும்போது.

**तत्प्राप्तये च तत्पादाम्बुजद्वयप्रपत्तेः**

தத்ப்ராப்தயே ச தத்பாதாம்புஜத்வயப்ரபத்தே:

யாய், அதாவது,–175 "**विश्वतः पर्येति**" (விச்வத: பர்யேதி) என்றும் § "கொண்டகோயிலை வலம் செய்து" என்றும், ‡ "வலம் செய்து நாளும் மருவுதல் வழக்கு" என்றும் சொல்லுகிறபடியே ப்ரதக்ஷிணாத்யுபலக்ஷணமான அநுகூலவ்ருத்தியைச் சொல்லிற்றாகவுமாம். (ஏகமனோரத:) புறம்புள்ள பலங்களையெல்லாம் விட்டு, கைங்கர்யமொன்றுமே பெறவேணுமென்னும்படியான அபிநிவேசத்தையுடையனாய். (தத்ப்ராப்தயே) கீழ் ப்ரஸ்துதமாய், மநோரதவிஷயமான பரிசர்யையைப் பெறுகைக்காக. (ச) என்று கீழ் வேறொன்றினுடைய ப்ராப்தியைச் சொல்லி, இதினுடைய ப்ராப்திக்கும் என்று ஸமுச்சயிக்கிறதல்லவே; சகாரத்துக்குப் பொருளென்? என்னில்: அநுக்தஸமுச்சயமாய், 176 "**महात्मभिर्मामवलोक्यतां नय**" (மஹாத்மபிர் மாமவலோக்யதாம் நய) என்றும், * அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்" என்றும் சொல்லுகிறபடியே தத்ப்ராப்திபலமான ததீய சேஷத்வப்ராப்திக்குமாகவென்று அநுக்தஸமுச்சயமாகவுமாம். அன்றிக்கே, (ச) என்று, † "நின்புகழில் வைகும்தம் சிந்தையிலும் மற்றினிதோ நீ அவர்க்கு வைகுந்தமென்றருளும்வான்" என்றும், 177"**त्वद्गतो मे मनोरथः यदि नाशं न विन्देत तावतास्मि कृती सदा**"(த்வத்கதோ மே மநோரத: யதி நாசம் ந விந்தேத தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா) என்றும் சொல்லுகிறபடியே பரிசர்யாமநோரதந்தானே போந்திருக்க, அதுக்கு மேலே இது பெறவேணுமென்றிருந்தானாகில் என்று ப்ராப்தியை ஸமுச்சயிக்கிறதென்னவுமாம்.

இதுக்குக் கீழ் உபேயஸ்வரூபம் சொல்லிற்று; மேல் இதுக்கு ஸத்ருசமான உபாயநிஷ்கர்ஷமும் ததநுஷ்டாந ப்ரகாரமும் சொல்லுகிறது, (சரணமநுவ்ரஜேத்) என்றதறுதியாக. (தத்பாதாம்புஜ த்வய ப்ரபத்தே:) என்று தொடங்கி, (மந்வாந:) என்றறுதியாக உபாயநிஷ்கர்ஷம் சொல்லுகிறது. (தஸ்ய) என்று தொடங்கி (சரணாரவிந்த) அறுதியாக உபாயவேஷம் சொல்லுகிறது. (அநந்யாத்ம) தொடங்கி, (அநுவ்ரஜேத்) என்றதறுதியாக உபாயஸ்வீகாரம் சொல்லுகிறது. (தத்பாதாம்புஜ த்வய) ப்ராப்யந்தானே ப்ராபகமென்கிறது. ப்ராப்யப்ராபகங்களிரண்டும் ஒன்றாகில் கார்யகாரணயோரைக்யம் ப்ரஸங்கிக்கும். ஐக்யம்

§ திருவாய்(10-1-5) ‡ திருவாய்(2-10-8) * அமல-1. † பெரியதிருவ-53.

ப்ரஸங்கித்தால் ஸாத்யஸாதநத்வங்களின்றிக்கேயொழியும். இன்றிக்கேயொழிந்தவாறே அவற்றில் ப்ரவர்த்தகரின்றிக்கேயொழியும்; ப்ரவ்ருத்தியில்லாமையாலே ப்ரவர்த்தகஶாஸ்த்ரத்துக்கு வையர்த்யமும் அப்ராமாண்யமும் பிறக்கும். இத்தனை அநர்த்தங்களுண்டாயிருந்தன. இதுக்குப் பரிஹாரமேதென்னில்: தத்பாதாம்புஜத்வய பரிசர்யை ப்ராப்யம். தத்பாதாப்புஜத்வயப்ரபத்தி உபாயம் என்றிட்டு பேதமுண்டாகையாலே ஒரு விரோதமில்லை. ஆனால், பரிசர்யா ப்ரபத்திகள் உபாயோபேயங்களாகில் 178 "ब्रह्म वेद ब्रह्मैव भवति" (ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி) என்றும், 179 "ब्रह्मविदाप्नोति परं" (ப்ரஹ்ம விதாப்நோதி பரம்) என்றும், "மாமேகம் ஶரணம்வ்ரஜ" 129 "त्वमेवोपायभूतो मे भव" (த்வமேவோபாயபூதோ மே பவ) என்றும் ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் ஒன்றென்றும், எம்பெருமானே உபாயோபேயங்களென்றும் சொல்லுகிற ப்ரமாணவ்யவஹாரங்கள் செய்யும்படியென்னென்னில்: பரிசர்யாவிஷயமும் ப்ரபத்திவிஷயமும் ஒன்றாகையாலே. விஷயமொன்றானல் பேதம் நடக்குமோவென்னில்: பேதகம் (भेदकं) விஶேஷணம்; பேத்யம் (भेद्यं) விஶேஷ்யம் என்கிற ந்யாயத்தாலே பரிசர்யாஜநித ப்ரீதிவிஶிஷ்டவிஷயமும், ப்ரபத்திஜநித ப்ரஸாதவிஶிஷ்டவிஷயமும், விஶேஷணபேதத்தாலே வேறாகையாலே வஸ்து ஒன்றானாலும் பேதத்துக்குக் குறையில்லை. ஆனால், "அஜோ க்ஜோ மஹிஷ:" என்கிறவிடத்தில் விஶேஷணபேதாதீநமாக விஶேஷ்ய ஸ்வரூபத்துக்கு பேதம் நடந்ததில்லையோவென்னில்: விருத்தவிஶேஷணமான அவ்விடத்தில் அப்படியாகிலும், "தேவதத்த: ஶ்யாமோ யுவா ஸமபரிமாண:" என்றவிடம்போலே அவிருத்தவிஶேஷணமானவிடத்தில், விஶேஷணபேதாயத்த விஶிஷ்டாகாரபேதம் வரச்செய்தேயும் ஸ்வரூபபேதம் பிறவாது. 180 "स एव सृज्यः स च सर्गकर्ता" (ஸ ஏவ ஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்க்ககர்த்தா) என்று ப்ரஹ்மமொன்றுமே கார்யகாரணமாமிடத்தில், ஸூக்ஷ்மசிதசித் விஶிஷ்டம் ப்ரஹ்மகாரணம், ஸ்தூலசிதசித்விசிஷ்டம் ப்ரஹ்மகார்யம் என்று அவிரோதேந நிர்வஹிக்கிறப்போலே.

(ப்ரபத்தே:) 73 (ததேகோபாயதாயாச்ஞா ப்ரபத்தி:) என்று திரநுஷ்டேயமான உபாயங்களில் எனக்கன்வயமில்லை. ரக்ஷகனானவனே உபாயமாகவேணுமென்று பிறக்கிற ப்ரார்த்தநாத்யவஸாயம்

**अन्यत्र मे कल्पकोटिसहस्रेणापि साधनमस्तीति मन्वानः, तस्यैव भगवतो नारायणस्य, अखिलसत्त्वदयैकसागरस्य, अनालोचितगुणागुणाखण्डजनानुकूलामर्यादशीलवतः,**

அந்யத்ர மே கல்ப கோடி ஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தீதி மந்வாந: அகில ஸத்வதயைக ஸாகரஸ்ய அநாலோசித குணாகுண அகண்டஜநாநுகூல அமர்யாத சீலவத:,

ப்ரபத்தி. (அந்யத்) இப்ரபத்தியையொழிய மற்று உபாயாந்தரங்களில்லையோவென்னில்: (அந்யத்) துடங்கி, (மந்வாந:) அறுதியாக, அவையெல்லாம் நெஞ்சுடையார்க்கு நல்லதீர்த்தம், நமக்கு அதிகாரமில்லையென்றிருப்பான் என்கிறார். (அந்யத்) பக்தி, தத்பேதமான ஸத்வித்யை துடக்கமானவை, ததங்கமான ஜ்ஞாநகர்மங்கள் துடக்கமான ப்ரபத்திவ்யதிரிக்தமான உபாயம். இப்படி ஶாஸ்த்ரங்களிலே தாத்பர்யம்பண்ணி விதிக்கிற இவை உபாயங்களன்றோவென்னில்: (ந மே) இங்கே அஸ்தியைக் கூட்டி (ந மேஸ்தி) இவையெல்லாம் ஶக்தாதிகாரம்; அஜ்ஞனாய், அஶக்தனாய், கர்மப்ரவாஹத்திலே அழுந்தி அதடியாக * "மாறிமாறிப்பல பிறப்பும் பிறந்து", †"மாதரார் வனமுலைப்பயனே பேணி", இப்படி விபரீதப்ரவ்ருத்தி பண்ணி 9 (க்ஷிபாமி) 10 (ந க்ஷமாமி) க்கிலக்காய் இருக்கிற எனக்கு உபாயமல்ல. இப்படி மாறிமாறிப்பல பிறப்பும் பிறக்கிற பிறவிகளில் இதுக்கு முன்பில்லையேயாகிலும், இனிப்பிறக்கும் பிறவிகளிலேயாகிலும் ஸாதநாநுஷ்டாநம் பண்ணத்தட்டென்? என்னில்: (கல்பகோடி ஸஹஸ்ரேணாபி) ஓட்டடையை ஆயிரம் நாள் நீரிலேயிட்டுவைத்தாலும் முளையாதாப்போலே காலதத்வமுள்ளதனையும் திரிந்தாலும் அதிகாரமுண்டாகமாட்டாது. (ஸாதநமஸ்தி) இத்தைக் கீழ் கூட்டினாப்போலே கீழையதான நஞ்ஞை இங்கே கூட்டி, (ஸாதநம் நாஸ்தி) என்றாகிறது. எல்லாம் செய்தாலும க்ருதப்ராயஶ்சித்தமாமத்தனை போக்கி, அபிமதபலத்தை ஸாதித்துத்தரமாட்டாது. (ஸாதநம் நாஸ்தி) என்றால் ஸ்வரஸமாகத்தோற்றுவது ஸாதநமில்லையென்றிறே. அங்ஙனல்ல; (ஸாதநம் ந பவதி) எனக்கு ஸாதநமாகமாட்டாது என்றபடி. (இதி மந்வாந:) இப்ரகாரத்திலே அறுதியிட்டு. (மந்வாந:) இந்நினைவு உருவ நடக்கவேணுமென்கிறது வர்த்தமானத்தாலே.

* திருவாய் (2-6-8) † பெரியதிரு (1-6-1)

(தஸ்யைவ பகவதோ நாராயணஸ்ய) கீழ் (பகவந்தம் நாராயணம்) என்று ப்ரஸ்துதமான அவன் தன்னுடைய. கீழ் (பகவந்தம் நாராயணம்) என்று, 112 (ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா) என்கிறபடியே ப்ராப்யத்வோபயோகியான குணங்களையும் குணாஶ்ரயமான தர்மியையும் சொல்லிற்று. இங்கு (பகவதோ நாராயணஸ்ய) என்று ப்ராபகத்வோபயோகியான குணங்களையும் குணியையும் சொல்லுகிறது. இனிமேல் பகவந்நாராயணஶப்தங்களால் ஸூசிதமான குணங்களையும் குணியையும் விவரிக்கிறது. (அகிலஸத்வ தயைகஸாகரஸ்ய) ஸகலஸத்வவிஷயமாக தயைக்கு ஒரு கடலாயிருக்கும். (அகில ஸத்வ) இன்னான் இனையான் என்று வரையாதே ஸகலஜந்துவிஷயமென்றபடி. (தயா) ஸ்வார்த்தநிரபேக்ஷபரது:க்காஸஹிஷ்ணுத்வம். தான் ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதே பிறர் நோவு கண்டால் ஐயோவென்கை. (ஏகஸாகரஸ்ய) தயையாகிற ஜலத்துக்கு வேறோராச்ரயமின்றிக்கே இவனே ஆச்ரயமாயிருக்கை. (அகிலஸத்வதயைகஸாகரஸ்ய) என்றது பரபீடாநிரூபணம் பண்ணியோவென்னில்: (அநாலோசிதகுணகுணகண்ட ஜநாநுகூலாமர்யாத ஶீலவத:) இப்படி குணதோஷநிரூபணம் பண்ணவொண்ணாதபடியான சீலகுணமுடையன் என்கிறது. திருவுள்ளத்தால் ஆராயப்படாதபடியான நன்மைதீமைகளை உடையராயிருக்கிற அகண்டஜநமுண்டு- பிரியப்படாத மநுஷ்யர்கள்; அவர்கள் உஜ்ஜீவிக்கைக்கீடாம்படியான நிரவதிகஶீலத்தையுடையவனுடைய. தோஷம் திருவுள்ளத்தில் படாத அம்ஶம் ஏற்றமாகிறது. உள்ள குணங்களை அங்கீகரித்திலனென்றால் இதோரேற்றமோவென்னில்: நிக்ரஹிக்கைக்கடியான தோஷங்களை நிரூபியாத மாத்ரம், ரக்ஷிக்கைக்குப் பற்றாசான குணங்களையும் அபேக்ஷியான் என்றபடி. தான் ரக்ஷிக்கும்போது குணாபேக்ஷையில்லையென்று கருத்து. (அநாலோசித) ஆலோசிதமாவது,—'இவ்வாச்ரயத்தில் நன்மையுண்டோ, தீமையுண்டோ' என்று விடுத்து ஆராய்கை. அது இன்றிக்கேயொழிகை. (குணகுண) அவையாவன,— நன்மை தீமைகள். அதாவது,—அஜ்ஞனோ ப்ராஜ்ஞனோ, நாஸ்திகனோ, ஆஸ்திகனோ, தார்மிகனோ அதார்மிகனோ, விநீதனோ அவிநீதனோ என்றேவமாதிகள். (அகண்டஜந) தேவமநுஷ்யர்களோடு, ப்ராஹ்மணக்ஷத்ரியாத்யநுலோமஜாதியோடு, ப்ரதிலோமஜாதியோடு வாசியற ஸர்வவிஷயமாக. (அநுகூல) இவை குமார்க்கங்களைத் தவிர்ந்து நல்வழிபோய்க் கரைமரம் சேருகைக்கு உறுப்பாம்படியிருக்கை.

**स्वाभाविकानवधिकातिशयगुणवत्तया देवतिर्यङ्मनुष्याद्यखिलजनहृदयानन्दनस्य आश्रितवात्सल्यैकजलधेः,**

ஸ்வாபாவிகாநவதிகாதிசய குணவத்தயா [து] தேவதிர்யங் மநுஷ்யாதி அகிலஜந ஹ்ருதயா நந்தநஸ்ய ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே:

---

(அமர்யாத) மர்யாதையாகிறது அவதி; நிரவதிகமென்றபடி. (ஶீல) பெரியவன் தாழ்ந்தவனோடு கலக்குமிடத்தில் தன் மேன்மை பார்த்து இறுமாத்தல், மற்றையவன் தண்மைபார்த்துக்கூசுதல் செய்யாதபடி புரையறப்பரிமாறுகிற நீர்மை. (ஶீலவத:) மதுப்பாலே 181 **"भूमनिन्दाप्रशंसासु नित्ययोगेऽतिशायने। संबन्धेऽस्तिविवक्षायां भवन्ति मतुबादयः॥"** (பூம நிந்தாப்ரஶம்ஸாஸு நித்யயோகேऽதிஶாயநே। ஸம்பந்தேऽஸ்திவிவக்ஷாயாம் பவந்தி மதுபாதய: ||) என்று நித்யயோகே மதுப்பாய், இக்குணம் இவனுக்கு நித்யஸித்தம் என்கிறது.

இப்படி அவன் த[ந]ன்னீர்மையாலே எல்லாரோடும் கலந்தாலும் அவர்கள் தன்னைக்கண்டால் வெருவும்படியாயிருக்குமோவென்னில்: (தேவதிர்யங்மநுஷ்யாத்யகில ஜந ஹ்ருதயாநந்தநஸ்ய) விவேகிகளோடு அவிவேகிகளோடு வாசியற எல்லாருடைய நெஞ்சும் உருகும்படியாயிருக்கும். இப்படிச் செய்கைக்கு அடியென்னென்னில்: [து] ஒரு விசேஷமுண்டு. அதுதான் ஏதென்னில்: (ஸ்வாபாவிகாநவதிகாதிஶய குணவத்தயா) ஸ்வதஸ்ஸித்தமான எல்லையில்லாத மிகுதியை உடைத்தாயிருக்கிற குணவத்தையாலே. அடியே தொடங்கி ஒருபடிப்பட குணங்களைச் சொல்லிவரச்செய்தே, புதுமைபோலே (குணவத்தயா) என்று சொல்லுகிறது என்னென்புதென்னில்: அவையெல்லாம் ஆத்மகுணங்களைச் சொல்லுகிறது. இங்கு 182 **"राम राम नयनाभिरामतामाशयस्य सदृशीं समुद्वहन्। सर्वदेवहृदयङ्गमोऽसि॥"** (ராம ராம நயநாபிராமதாமாஶயஸ்ய ஸத்ருஶீம் ஸமுத்வஹந் ஸர்வதேவஹ்ருதயங்கமோஸி) என்கிறபடியே கண்ணுக்குப் பிடிக்கும்படியான காந்திஸௌகுமார்யாதிகளான விக்ரஹகுணங்களைச் சொல்லுகிறது. (தேவதிர்யங்மநுஷ்யாத்யகிலஜந ஹ்ருதயாநந்தநஸ்ய) 183 **"बभूवेन्द्रोपमं दृष्ट्वा राक्षसी काममोहिता"** (பபூவேந்த்ரோபமம் த்ருஷ்ட்வா ராக்ஷஸீ காம மோஹிதா) 184 **"तरुणौ रूपसंपन्नौ"** (தருணௌ ரூபஸம்பந்நௌ) என்று தேவயோனியான ராக்ஷஸியும் அகப்பட்டாளிறே. அன்றிக்கே, 185 **"अधिज्यधन्वानमवेक्ष्य रामं चरन्तमेकान्तविलासिनीभिः। नूनं बभूवुर्वनदेवताश्च**

मर्त्याङ्गनाजन्मकुतूहलिन्यः ॥" (அதிஜ்யதந்வாநமவேக்ஷ்யராமம் சரந்தமேகாந்தவிலாஸிநீபி:। நூநம் பபூவுர் வநதேவதாஶ்ச மர்த்யாங்கநா ஜந்மகுதூஹலிந்ய:) என்று வனதேவதைகள் அகப்பட்டதாகவுமாம். (திர்யக்) 186 "रामः कमलपत्राक्षः सर्वसत्त्वमनोहरः" (ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர:) என்று திருவடியும் அகப்பட்டானிறே. * "வாதமாமகன் மர்க்கடம் விலங்கு" என்று மூன்றுக்கும் இதுதானே உதாஹரணமாகவுமாம். (மநுஷ்ய) 187 "रूपसंहननं लक्ष्मीं सौकुमार्यं सुवेषतां ददृशुः" (ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்। தத்ருஶு:) என்று ரிஷிகள் அகப்பட்டார்கள். (ஆதி) ஶப்தத்தாலே ஸ்தாவரங்கள். அதாவது,—188 "पाषाणगौतमवधूवपुराप्तिहेतुः" (பாஷாணகௌதமவதூவபுராப்திஹேது:) என்று கல்லுருகிப் பெண்ணும் படியாயிருக்கை. (அகிலஜந) அநுகூலரோடு ப்ரதிகூலரோடு வாசியற. (ஹ்ருதயாநந்தநஸ்ய) கண்ணுக்கு அழகியனாய், அநபிமதவிஷயமாய் நெஞ்சுக்குப் பிடியாதிருக்கையன்றிக்கே, 82 (சித்தாபஹாரிணம்) என்றும், † "கண்டவர் தம் மனம வழங்கும்" என்றும் சொல்லுகிற படியே எல்லார் நெஞ்சை உருக்கும்படியாகவும், நெஞ்சுடையார் நெஞ்சையிழந்து, § "என் நெஞ்சினாரைக்கண்டால்" என்று தன் நெஞ்சுக்குத் தூதுவிடவேண்டும்படியாயுமிறே வடிவழகிருப்பது.

'இப்படி ஸர்வஸாதாரணமாயிருக்குமித்தனைபோக்கி, ஆச்ரித விஷயத்தில் ஓரமில்லையோ?' என்னில்: (ஆச்ரிதவாத்ஸல்யைகஜலதே:) அவர்கள் விஷயத்தில் தோஷம் தானே போக்யமென்று நினைத்திருக்குமென்கிறது. (ஆஶ்ரித) 189 "भवद्विषयवासिनः" (பவத்விஷய வாஸிந:) என்றும், 5 (ஸக்ருதேவ ப்ரபந்நாய) என்றும், 190 "पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति" (பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி) என்றும் சொல்லுகிறபடியே, அவனெல்லைக்குள்ளே கிடத்தல், ஒரு பச்சிலையாதல், ஒரு மலராதல், ஒருக்கியாதல் நேர்ந்தவர்கள். (வாத்ஸல்ய) கன்றினுடம்பில் வழும்பைத்தாய் போக்யமாக நக்குமாப்போலே ‡ "குன்றனைய குற்றம் செய்யினும் குணங்கொள்ளும்" என்னும்படி ஸ்நேஹவிஷயமாகை. அதாவது,— 57 (தோஷா யத்யபி தஸ்ய ஸ்யாத்—ந த்யஜேயம் கதஞ்சந) என்றிருக்கை. (ஏகஜலதே:) ஏகாச்ரயமாயிருக்கை. இப்படி இவனாச்ரயித்தால், இத்தலைக்குப் பலம்கொடுத்துவிட்டானாயிருக்குமத்தனை

* பெரியதிருமொ (5-8-1). † பெருமாள்திரு (8-2). § திருவிரு-30.
‡ முதல்திருவ 41.

**भक्तजनसंश्लेषैकभोगस्य, नित्यज्ञानक्रियैश्वर्यादिभोगसामग्रीसमृद्धस्य, महाविभूतेः श्रीमतश्चरणारविन्दयुगलं अनन्यात्मसञ्जीवनेन तद्गतसर्वभावेन शरणमनुव्रजेत् ॥**

**२. ततश्च प्रत्यहम् आत्मोज्जीवनाय एवमनुस्मरेत् ॥**

பக்த ஜந ஸம்ச்லேஷைக போகஸ்ய நித்ய ஜ்ஞாநக்ரியைச்வர்யாதி போக ஸாமக்ரீஸம்ருத்தஸ்ய மஹாவிபூதே: ஸ்ரீமத: சரணாரவிந்தயுகளம் அநந்யாத்மஸஞ்ஜீவநேந தத்கத ஸர்வபாவேந சரணம் அநுவ்ரஜேத் ॥

2. ததச்ச ப்ரத்யஹம் ஆத்மோஜ்ஜீவநாய ஏவம் அநுஸ்மரேத் ॥

---

போக்கித் தன் பேறாக இருக்குமதில்லையோவென்னில்: (பக்தஜந-ஸம்ஶ்லேஷைகபோகஸ்ய) தனக்கு நல்லராயிருப்பாரோடு சேருகையே பரமப்ரயோஜநமாயிருக்கை. (பக்த ஜந) பக்தியாகிறது,-191 **"भज इत्येष धातुर्वै सेवायां परिकीर्तितः। तस्मात्सेवा बुधैः प्रोक्ता भक्तिशब्देन भूयसी॥"** (பஜ இத்யேஷ தாதுர் வை ஸேவாயாம் பரிகீர்த்தித: । தஸ்மாத் ஸேவா புதை: ப்ரோக்தா பக்திஶப்தேந பூயஸீ ॥) என்கிறபடியே ஸ்நேஹமாய், இது பக்தப்ரபந்நாதிஸாதாரணம். (ஸம்ஶ்லேஷைகபோகஸ்ய) 176 (க்ஷணேऽபி தே யத்விரஹோऽதிதுஸ்ஸஹ:) * "ஒரு மா நொடியும் பிரியான்" என்கிறபடியே, இப்படி அநந்யப்ரயோஜநராயிருப்பாரோடு க்ஷணமாத்ர விஶ்லேஷமும் பொறுதபடி கூடவிருக்கையே தனக்கு தாரக போஷக போக்யங்களாயிருக்கும்.

இப்படி அநந்தாத்மாக்களோடு புஜிக்குமிடத்தில் பரிகரவைகல்யமுண்டாயிருக்குமோவென்னில்: (நித்ய ஜ்ஞாந க்ரியைச்வர்யாதிபோக-ஸாம்க்ரீ ஸம்ருத்தஸ்ய) நித்யமாய் போது செய்யாததாய், போக்ய ஸமஸ்த வஸ்துக்களினுடைய ஸ்வரூபரூப குண சேஷ்டா ப்ரயோஜந காலாதி விஷய ஜ்ஞாநமென்ன, க்ரியையென்ன, போக்யங்கள்தான் நினைத்தபோது கைபுகுரும் படியாயிருக்கிற ப்ரபுத்வமாதல் ஸம்பத்தாதலான ஐச்வர்யமென்ன ஏவமாதியான போகஸாமக்ரியுண்டு—புஷ்கலகாரணம்—இவற்றால் பூர்ணனானவனுடைய. இப்படி போகமும், போகஸாமக்ரியுமுண்டானாலும் போகஸ்தாநமில்லையாகில் ப்ரயோஜநமில்லையாகாதேயென்ன,—(மஹாவிபூதே:) லீலாவிபூதிபோலே கால் கூறாய் பரிச்சின்னமாயிருக்கையன்றிக்கே அதில் மும்மடங்கு பெருமையையுடைத்தாய் போகத்துக்கு ஏகாந்தமான நித்யவிபூதியை உடையவனுடைய. இப்படிப்பட்ட ஸ்தாநத்திலேயிருந்து அநந்தாநந்த போகம் பண்ணுமிடத்தில் கூட்டின்றியே ப்ரஹ்மசாரி நாரயணனேயோ

---

* திருவாய் (10-7-8)

இருப்பதென்னில்: (ஸ்ரீமத:) போகஸ்ரோதஸ்ஸில் கரைகாண்கைக்கு ஸஹாயபூதையாக ஸாக்ஷால்லக்ஷ்மியைத் தனக்குப்ரதானமஹிஷியாய் உடையவனுடைய. [இவனுக்கு ஸம்ஸாரிஸாதாரணமான போக மன்றே.] அவாப்தஸமஸ்தகாமதயா ஆநந்தமயனுயுள்ளவனுக்கு நாச்சிமாரோட்டைச் சேர்த்தியாலே பிறக்கும் போகமாவதென்? அதில் ஸஹாயமாவதென்னென்புது? என்னில்: இவனுக்கு போக மாவது ஆச்ரிதோஜ்ஜீவநம். அதுக்குப் புருஷகாரபூதையாய் நின்று சேரவிடுகை ஸஹாயபூதையாகையாவது. இப்படியிருக்கிறவன் தன்னையோ பற்றுவது என்னில்:(சரணாரவிந்த யுகளம்) ஸ்வரூபப்ராப்த முமாய், நிரதிஶயபோக்யமுமாய், தன் சேர்த்தியழகே நிதர்சனமாம் படியாக எல்லாரையும் சேர்த்துக்கொள்ளக்கடவதாயிருக்கிற இத்திரு வடித்தாமரைகளிரண்டையும். பற்றும்படியென்னென்னில்: (அநந் யாத்ம ஸஞ்ஜீவநேந) ஆத்மோஜ்ஜீவநம் இதொழியவேறொன்றில்லை யென்றிருக்கிற நினைவோடே. (தத்கதஸர்வபாவேந) வேறொன்றில்லா மையாலே, இதுவே ரக்ஷகம் என்கிற நினைவோடும். இந்நினைவுக ளோடுகூடச் செய்யப்புகுகிற கார்யமென்னென்னில்: (ஶரணமநுவ்ர-ஜேத்) புருஷார்த்தத்துக்கு ஸாதநம் இவனேயென்று அத்யவஸிப் பான். புத்ய்ர்த்தத்துக்கு வேண்டுவது 'வ்ரஜேத்' அன்றோ. 'அநு' என்னென்னில்: "வ்ரஜ—கதௌ" என்கிறது ஜ்ஞாநமாத்ரவாசியாய், அத்யவஸாயமாகிற அதிஶயத்தை விவக்ஷிக்கிறதாவுமாம். 'அநுஸ்யூதம் வ்ரஜேத்' என்று (த்வயமர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா) என்கிறபடியே ஸர்வகாலாநுவ்ருத்தியைச்சொல்லிற்றாகவுமாம். அன்றிக்கே (ஶரணமநு) என்று உபாயோத்தேஶேந அடைவான் என்றாகவுமாம்.

இரண்டாம் சூர்ணை அவதாரிகை:—இப்படி ஒருகால் சரணம் புக்கு விடுமித்தனையோவென்னில்: (ததஶ்ச ப்ரத்யஹமாத்மோஜ் ஜீவநாயேத்யாதி) பலத்துக்கு ஒருகால் அமைந்திருந்தாலும், ஸத்தா தாரணத்துக்கு நாள்தோறும் அநுஸந்திப்பான் என்கிறது.

வ்யா:-(ததச்ச)192"तद्द्वयं सकृदुच्चारो भवति"(தத் த்வயம் ஸக்ருதுச்-சாரோ பவதி) என்றும், 5(ஸக்ருதேவ ப்ரபந்நாய) என்றும் உபாயாம் ஶத்துக்கு ஒருகால் அமைந்திருக்க, பின்னையும் வேணுமென்கிறது. ஆகிறது; அதுக்கவதியென்னென்னில்: (ப்ரத்யஹம்) ஒருகால் அநு ஸந்தித்தோமென்று விடுகையன்றிக்கே நாள்தோறும். இப்படி நாள்

३. चतुर्दशभुवनात्मकमण्डं दशगुणितोत्तरं चावरणसप्तकं समस्तं कार्यकारणजातमतीत्य परमव्योमशब्दाभिधेये ब्रह्मादीनां वाङ्मनसागोचरे श्रीमति वैकुण्ठे दिव्यलोके

3. சதுர்தச புவநாத்மகம் அண்டம் தசகுணிதோத்தரஞ் ச ஆவரண-ஸப்தகம் ஸமஸ்தம் கார்ய காரண ஜாதமதீத்ய பரமவ்யோமசப்தாபி-தேயே ப்ரஹ்மாதீநாம் வாங்மநஸ அகோசரே ஸ்ரீமதி வைகுண்டே திவ்யலோகே

---

தோறும் அநுஸந்திக்கிறது ஸாதநபூர்த்தி போராமையோவென்னில்: (ஆத்மோஜ்ஜீவநாய) 193 "यन्मुहूर्तं क्षणं वापि वासुदेवो न चिन्त्यते। सा हानिस्तन्महच्छिद्रं सा भ्रान्तिस्सा च विक्रिया॥" (யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே। ஸாஹாநிஸ் தந்மஹச் சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா॥) என்கிறபடியே க்ஷணமாத்ரமும் பகவதநுஸந்தாநம்பண்ணுதபோது ஆத்மவிநாஶமாகையாலே, நித்யாநுஸந்தாநத்தாலே ஆத்மா உஜ்ஜீவிக்கும்படியாக. ஆத்மோஜ்ஜீவநார்த்தமாக அநுஸந்திக்குமிடத்துப் போலியாக அநுஸந்திக்கவமையுமோவென்னில்: (ஏவம்) ப்ரதமபர்வத்தில் யாதோராதரம், யாதொரு க்ரமம், அப்ரகாரத்தில் ஒன்றும் குறையாதபடி. (அநுஸ்மரேத்) (ப்ரத்யஹம்) என்னச்செய்தே, (அநுஸ்மரேத்) என்கிறது,—நாள்தோறுமென்றால் ஒருநாளைக்கு ஒருகால் நினைத்தாலும் போருமிறே. அங்ஙன்றிக்கே, (த்வயமர்த்தாநுஸந்தாநேந ஸஹஸதைவம் வக்தா) என்கிறபடியே, அநவரதாநுஸந்தாநம் பண்ணவேணுமென்கிறது.

மூன்றாம் சூர்ணை அவதாரிகை:—இவ்வுபாயம் கைவந்தவன் அர்ச்சிராதிமார்க்கத்தாலே போய் ப்ராபிக்கும் நித்யவிபூதியையும், அங்குள்ள ப்ரகாரங்களையும் சொல்லுகிறது மேல் (சதுர்த்தஶபுவநாத்மகம்) இத்யாதியாலே.

வ்யா:—(சதுர்த்தஶபுவநாத்மகம்) பூம்யந்தரிக்ஷாதியான உபரிதந லோகங்கள் ஏழும், அதலவிதலாதிகளாகிற பாதாள லோகங்கள் ஏழுமாகிற பதினாலுலோகங்களுமாயிருக்கை. இப்படியிருக்கிறது தான ஏதென்னில்: (அண்டம்) இப்படிப்பட்ட லோகங்களுக்கெல்லாம் ஆச்ரயமாய், பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணமாயிருக்கிற அண்டம். (தஶகுணிதோத்தரம் சாவரண ஸப்தகம்) (உத்தரோத்தரதஶகுணிதம்) ஓராவணத்துக்கு ஓராவணம் தஶகுணிதமாய், தஶகுணிதமான

அவ்வாவரணத்துக்கு அவ்வருகிலாவரணம் அதில் தஶகுணிதமாய் இப்படி உக்தக்ரமத்தாலே உத்தரோத்தரதஶகுணிதமான ஏழு ஆவரணங்களை உடைத்தாய். ஆவரணஸப்தகமாவது,—வாரிவஹ்நி்யநிலாகாஶ அஹங்காரமஹதவ்யக்தங்களாகிற இவை. (ஸமஸ்தம்) ஓரண்டமிறே இப்படியிருப்பது. 194 **“अण्डानान्तु सहस्राणां सहस्राण्ययुतानि च। ईदृशानां तथा तत्र कोटिकोटिशतानि च”** (அண்டாநாந்து ஸஹஸ்ராணும் ஸஹஸ்ராண்யயுதாநி ச। ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடிகோடி ஶதாநி ச॥) * “எண்மீதியன்ற புறவண்டம்” என்கிறபடியே ஈத்ருஶமான ஸமஸ்தலோகங்களையும். (கார்யகாரண-ஜாதம்) ஒன்றினாலே உத்பாத்யமாயும், ஒன்றையுண்டாக்கக்கடவதாயுமுள்ள வஸ்து ஸமூஹத்தை. (அதீத்ய) 195 **“आब्रह्मभवनाल्लोकाःपुनरावर्तिनोऽर्जुन”**(ஆப்ரஹ்மபவநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந) என்கிறபடியே கர்மஶேஷமுள்ளவர்கள் மீண்டு திரியும்படியான ப்ராக்ருதமண்டலத்தை அபுந: ப்ராப்தியாகக் கழித்து.

இத்தைக் கடந்துபோய்ப் புகுகிற தேஶமிருக்கும்படியென்னென்னில்: (பரம) இதுக்கவ்வருகு இல்லையென்னும்படியாயிருக்கை. (வ்யோமஶப்தாபிதேயே) 104 (பரமே வ்யாமந் ப்ரதிஷ்டிதா) என்று கர்மபூமிபோலே தமியாயிருக்கையன்றிக்கே தெளிவிசும்பாயிருக்கை. இப்படியிருக்கிறதுதான் பரிச்சிந்நமாயிருக்குமோவென்னில், (ப்ரஹ்-மாதீநாம் வாங்மநஸாகோசரே) அல்பஜ்ஞராய், அஶக்தரான நம்மளவன்றிக்கே, அதிகரான ப்ரஹ்மருத்ராதிகளுக்குமகப்பட வாக்குக்கும் நெஞ்சுக்கும் விஷயமன்றியிலேயிருக்கும். இப்படியிருக்கும் தேஶத்தின் பேரென்னென்னில்: (ஸ்ரீமதி வைகுண்ட திவ்யலோகே) [ஸ்ரீவைகுண்டமென்று பேர்.] கர்மபூமிபோலே கைங்கர்யஸ்ரீயுண்டானாலும் விச்சேதம் பிறக்கையன்றிக்கே, கைங்கர்யஸ்ரீ நித்யமாயிருக்கை. (வைகுண்டே) கர்மதிரோதாநமில்லாமையாலே ஜ்ஞாநஶக்த்யாதிகள் குண்டிதமன்றிக்கேயிருக்கும் தேஶம். (திவ்யலோகே) மாநுஷலோகமாயிருக்கையன்றிக்கே அதில் வ்யாவ்ருத்தமாயிருக்கை. தேஶம் சொல்லி, தேஶாதிபதிகளைச் சொல்லுகிறது மேல். (ஸநக-விதிஶிவாதிபிரப்யசிந்த்ய ஸ்வபாவைச்வர்யை:) ப்ரஹ்மபாவநா நிஷ்டரான ப்ரஹ்மாதிகளோடு கர்மபாவநாநிஷ்டரான ஸநகாதிகளோடு

* திருவாய் (6-9-5)

**सनकविधिशिवादिभिरप्यचिन्त्यस्वभावैश्वर्यैर्नित्यसिद्धैरनन्तैर्भगवदानुकूल्यैक - भोगैः दिव्यपुरुषैर्महात्मभिरापूरिते तेषामपीयत्परिमाणम् इयदैश्वर्यम् ईदृश - स्वभावम् इति परिच्छेत्तुमयोग्ये दिव्यावरणशतसहस्रावृते दिव्यकल्पकतरूप- शोभिते दिव्योद्यानशतसहस्रकोटिभिरावृते अतिप्रमाणे दिव्यायतने कस्मिंश्चि - द्विचित्रदिव्यरत्नमये दिव्यास्थानमण्डपे दिव्यरत्नस्तम्भशतसहस्रकोटिभिरुप - शोभिते दिव्यनानारत्नकृतस्थलविचित्रिते दिव्यालङ्कारालङ्कृते**

ஸநக விதி சிவாதிபிரபி அசிந்த்யஸ்வபாவ ஐச்வர்யை: நித்யஸித்தை: அநந்தை: பகவதாநுகூல்யைக போகை: திவ்ய புருஷை: மஹாத்மபி: ஆபூரிதே: தேஷாமபி இயத் பரிமாணம் இயதைச்வர்யம் ஈத்ருச ஸ்வபா- வமிதி பரிச்சேத்தும் அயோக்யே திவ்ய ஆவரண சத ஸஹஸ்ர ஆவ்ருதே திவ்ய கல்பகதரு உபசோபிதே திவ்யோத்யாந சத ஸஹஸ்ர கோடிபி: ஆவ்ருதே அதிப்ரமாணே திவ்ய ஆயதநே கஸ்மிம்ச்சித் விசித்ர திவ்ய ரத்ந- மயே திவ்ய ஆஸ்தாந மண்டபே திவ்ய ரத்நஸ்தம்ப சத ஸஹஸ்ரகோடிபி: உபசோபிதே திவ்ய நாநா ரத்ந க்ருத ஸ்தல விசித்ரிதே திவ்ய அலங்கார அலங்க்ருதே

---

வாசியற நினைக்கவொண்ணாதபடியான ப்ரகாரவைபவங்களையுடையராய். (நித்யஸித்தை:) முக்தரைப்போலே காதாசித்கபகவல்லாபராயிருக்கை யன்றிக்கே, ஸர்வதா லப்த பகவதநுபவராயிருக்கை. (அநந்தை:) இப்படி யிருக்குமவர்களுக்கு ஓரெல்லையில்லை. இவர்கள் தங்களுக்கோரந்தமில்லை யென்னவுமாம். (பகவதாநுகூல்யைகபோகை:) பகவதநுபவமே யாத்ரை யாயிருக்கை. (திவ்யபுருஷை:) பூமியில் கால்பாவா திருக்கை. (மஹாத்மபி) 176 (க்ஷணேऽபி தே யத்விரஹோऽதி துஸ்ஸஹ:) என்றும், "ஒருமா நொடியும் பிரியான் என்றும் சொல்லுகிறபடியே ஸர்வேச்வரனும் அவர்களோட்டை க்ஷணமாத்ரவிச்லேஷமும் பொறுக்கமாட்டாதா னும்படியான பெருமையை உடையராயிருக்கை. (ஆபூரிதே) ஏகதேஶ மும் பாழே கிடவாமே அவர்களாலே நிரந்தரமாயிருக்கை. தேசம் தான் ப்ரஹ்மாதிகளால் அளவிடப்போகாதபடியிருந்ததேயாகிலும் இவர்களுக்குத்தான் அளவிடலாயிருக்குமோவென்னில்: (தேஷாமபி) தங்களைப் பிறரால் அளவிடவொண்ணாதிருக்கிறவர்களுக்கும். (தேஷா- மபி) அநந்தமாயிருக்கிறவர்களிலே ஒருவரால்தான் அளவிடலாயி ருக்குமோவென்னில்: ஒரொருத்தருங்கூட அளவிடவொண்ணாதிருக்கு மென்கிறது. மேல் வாக்யமேதென்னில்: (பரிச்சேத்து மயோக்யே)

பரிச்சேதிக்கைக்கு அயோக்யமென்கிறது. இப்படிப் பரிச்சேதிக்கைக்குத்தான் அயோக்மாயிருக்கிறதேதெனனில்: (இயத்பரிமாணம்) இவ்வளவென்றும்; (இயதைச்வர்யம்) இவ்வளவு ஸம்பத்தென்றும். (ஈத்ருஶஸ்வபாவம்) இப்படிப்பட்ட ஸ்வபாவத்தையுடையதென்றும். (இதி பரிச்சேத்துமயோக்யே) இப்புடைகளில் இன்னபடியென்றும் அளவிடப்போகாது. (திவ்யாவரணஶதஸஹஸ்ராவ்ருதே) லோகவ்யாவ்ருத்தமான ஆயிரம் திருமதிளை உடைத்தாயிருக்கும். ஸமஸ்தக்லேஶரஹிதமான தேசத்துக்குத் திருமதிள்களென்னென்னில்: 196 "पुरं हिरण्मयं" (புரம் ஹிரண்மயம்) என்று எழுந்தருளியிருக்கும் திருப்படைவீடாகையாலே, இதுக்குள்ள லக்ஷணங்களையுடைய வேண்டுகையாலும் 197"ततस्त्वहं चोत्तमचापबाणधृक् स्थितोऽभवं तत्र स यत्र लक्ष्मणः। अतन्द्रिभिर्ज्ञातिभिरात्तकार्मुकैर्महेन्द्रकल्पं परिपालयंस्तदा" (ததஸ் த்வஹம் சோத்தமசாப பாணத்ருக் ஸ்திதோऽபவம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண:। அதந்த்ரிபிர் ஜ்ஞாதிபிராத்தகார்முகைர் மஹேந்த்ரகல்பம் பரிபாலயம்ஸ்ததா) என்றும், * "மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா உன்சேவடி செவ்வி திருக்காப்பு" என்றும் அஸ்தாநே பயஶங்கிகளாய், அத்தலை இத்தலையாய் ரக்ஷகனையும் ரக்ஷிக்கத் தொடங்குவர்களிறே. ஆகையால் அநேகம் திருமதிள்களுண்டாயிருக்கும். இப்படி ரக்ஷகமேயாய் போக்யதையற்றிருக்குமோவென்னில்: (திவ்ய கல்பக தருபஶோபிதே) அர்வாசீந ஸ்வர்க்காதிகளில் கல்பகதருக்கள் போலன்றிக்கே அப்ராக்ருதமான கல்பகச்சோலையாலே நிரதிஶயபோக்யமாயிருக்கும். (திவ்யோத்யாந ஶதஸஹஸ்ரகோடிபிராவ்ருதே) நாய்ச்சிமாருக்கும் ஸ்ரீவைகுண்டநாதனுக்கும் லீலாவிஹாரம் பண்ணுகைக்கிடாயிருந்துள்ள திருச்சோப்புகளநேகங்களாலே சூழப்பட்டிருக்கும். (அதிப்ர-மாணே) இத்தனையகலமும் ஆயாமமும் என்று சொல்லவொண்ணாதபடியிருக்கும். (திவ்யாயதநே) இப்படியிருக்கும் ஸ்ரீவைகுண்டக் கோயிலிலே.

(கஸ்மிம்ஶ்சித்) ஒரு ப்ரதேசத்திலே. (விசித்ர ரத்நமயே) நாநாவிதமான ரத்நங்களாலே ப்ரசுரமாயிருப்பதான. (திவ்யாஸ்தாந மண்டபே) திருவோலக்கமண்டபத்திலே. (திவ்யரத்ந ஸ்தம்ப ஶதஸஹஸ்ர கோடி ஶோபிதே) அநேகமாயிரம் மாணிக்கத்தூண்களாலே அலங்க்ருதமாய். (திவ்ய நாநா ரத்ந க்ருத ஸ்தல விசித்ரிதே) நாநாவிதமான மாணிக்கங்களாலே செறிந்த ஸ்தலத்தையுடைத்தாய்.

**परितः पतितैः पतमानैः पादपस्थैश्च नानागन्धवर्णैर्दिव्यपुष्पैः शोभमानै-र्दिव्यपुष्पोपवनैरुपशोभिते संकीर्णपारिजातादिकल्पद्रुमोपशोभितैरसङ्कीर्णैश्च -कैश्चिदन्तःस्थपुष्परत्नादिनिर्मितदिव्यलीलामण्डपशतसहस्रकोटिशोभितैस्सर्वदा अनुभूयमानैरपि अपूर्ववदाश्चर्यमावहद्भिः क्रीडाशैलशतसहस्रैरलङ्कृतैः कैश्चिन्नारा-यणदिव्यलीलाऽसाधारणैः कैश्चित्पद्मवनालयादिव्यलीलाऽसाधारणैस्सधारणैश्च कैश्चिच्छुकशारिकामयूरकोकिलादिभिः कोमलकूजितैराकुलैर्दिव्योद्यानशतसह-स्रैरावृते मणिमुक्ताप्रवालकृतसोपानैर्दिव्यामलामृतरसोदकैर्दिव्याण्डजवरैरति-रमणीयदर्शनैरतिमनोहरमधुरस्वरैराकुलैः अन्तःस्थमुक्तामयदिव्यक्रीडास्थानोप-शोभितैर्दिव्यसौगन्धिकवापीशतसहस्रैर्दिव्यराजहंसावलीविराजितैरावृते**

பரித: பதிதை: பதமாநை: பாதபஸ்தைச் ச நாநா கந்தவர்ணை: திவ்ய புஷ்பை: சோப மாநை: திவ்ய புஷ்ப உபவநை: உபசோபிதே ஸங்கீர்ண பாரிஜாதாதி கல்ப த்ரும உபசோபிதை: அஸங்கீர்ணைச் ச கைச்சித் அந்தஸ் ஸ்த புஷ்பரத்நாதி நிர்மித திவ்ய லீலா மண்டப*சத ஸஹஸ்ரகோடி சோபிதை: ஸர்வதா அநுபூயமாநை ரபி அபூர்வவத் ஆச்சர்யம் ஆவஹத்பி: க்ரீடாசைலசதஸஹஸ்ரை ரலங்க்ருதை: கைச்சித் நாராயண திவ்யலீலா அஸாதாரணை: கைச்சித் பத்மவநாலயாதிவ்யலீலா அஸாதாரணை: ஸாதா-ரணைச் ச கைச்சித் சுகசாரிகாமயூரகோகிலாதிபி: கோமலகூஜிதை: ஆகுலை: திவ்யோத்யாந சதஸஹஸ்ரகோடிபி: ஆவ்ருதே மணிமுக்தாப்ர-வாலக்ருத ஸோபாநை: திவ்ய அமல அம்ருத ரஸோதகை: திவ்ய அண்டஜ வரை: அதிரமணீய தர்சநை: அதிமநோஹர மதுர † ஸ்வரை: ஆகுலை: அந்தஸ்ஸ்த முக்தாமய திவ்ய க்ரீடாஸ்தாந உபசோபிதை: திவ்ய ஸௌகந் திகவாபீ சத ஸஹஸ்ரை: திவ்யராஜ ஹம்ஸாவளீ விராஜிதை: ஆவ்ருதே

---

(திவ்யாலங்காராலங்க்ருதே) திருமேற்கட்டி, திருத்திரை, தூக்கன் தூணுடைத்தூங்குபள்ளிக்கட்டில் தொடக்கமான அலங்காரங்களாலே அலங்க்ருதமாய். (பரித: பதிதை:) நாலுதிக்குகளிலும் உதிர்ந்து நிற்பனவாய். (பதமாநை:) விழுந்துகொடுநிற்பனவாய். (பாதபஸ்-தைஂச) மரங்களிலே நிற்பனவாய். (நாநா கந்த வர்ணை:) நாநாவித மாயிருக்கிற நாற்றமென்ன, நிறமென்ன, இவற்றையுடைத்தாய். (திவ்ய புஷ்பை: சோபமாநை:) இப்படிப்பட்ட திவ்யபுஷ்பங்களாலே விளங்காநிற்பனவாய். (திவ்யபுஷ்போபவநைருபசோபிதே) ஊடைய வளைந்து கொடு நிற்கிற திருத்தோப்புக்களாலே சோபிதமாய். (ஸங்கீர்ண பாரிஜாதாதி கல்பத்ருமோபசோபிதை:) பாரிஜாதம், ஸந்தா

நம், ஹரிசந்தநம் தொடக்கமான வ்ருக்ஷவிசேஷங்களோடு கூடின ஸாமாந்யகல்பக வ்ருக்ஷங்களாலே சோபிதமாய். (அஸங்கீர்ணைஸ்ச கைஸ்சித்) தன்னில் தான் சேர்ந்திருக்கையன்றிக்கேயிருப்பன சிலவற்றாலே. (அந்தஸ்த புஷ்பரத்நாதி நிர்மித திவ்யலீலாமண்டப * ஸதஸஹஸ்ர கோடிசோபிதை:) இத்தோப்புக்களுக்குள்ளே சமைந்த புஷ்பமண்டபம், மாணிக்கமண்டபம், இவற்றினுடைய அநேகங்களாலே அலங்க்ருதங்களாய். (ஸர்வதாநுபூயமாநைரப்யபூர்வவதாஸ்சர்யமாவஹத்பி:) எப்போதும் அநுபவியாநின்றாலும் புதுமைபோலே விஸ்மயநீயமாயிருப்பதுகளாய். (க்ரீடாசைலஸதஸஹஸ்ரை ரலங்க்ருதை:) அநேகமாயிரம் க்ரீடாசைலங்களாலே அலங்க்ருதங்களாய். (கைஸ்சிந் நாராயண திவ்யலீலாஸாதாரணை:) என்று தொடங்கி, (ஸாதாரணைச்ச கைஸ்சித்) என்கிறதளவாக; எம்பெருமானதாயும், நாய்ச்சிமாரதாயும் இருவருக்கும் பொதுவாயுமுள்ள திருத்தோப்புக்களாலே. (ஸுகஸாரிகா மயூர கோகிலாதிபி.) கிளிகள், அவற்றில் அவாந்தர ஜாதியான ஸாரிகைகள், மயில்கள், குயில்கள் இவை தொடக்கமான பக்ஷிகளாலே. அவற்றில் ஸுகமாகிறது பைங்கிளி. ஸாரிகையாகிறது பூவை. ஆதிஸப்தத்தாலே அன்னம் குருகு தொடக்கமானவை. (கோமளகூஜிதைராகுலை:) இனிய பேச்சையுடைய பக்ஷிகளாலே ஆகுலங்களாயுள்ள. (திவ்யோத்யாநஸதஸஹஸ்ரகோடிபிராவ்ருதே) இப்படிப்பட்ட அநேகம் தோப்புக்களாலே சூழப்பட்டிருப்பதாய். (மணிமுக்தா ப்ரவாளக்ருத ஸோபாநை:) ரத்நம், முத்து, பவளம் தொடக்கமானவைகளாலே பண்ணப்பட்ட படியொழுங்குகளை உடைத்தாயிருப்பனவாய். (திவ்யாமலாம்ருதரஸோதகை:) அப்ராக்ருதமாய், நிர்மலமாய், அம்ருதம்போலே ரஸவத்தான நீர்ப்பரப்பையுடையவையாய். (திவ்யாண்டஜவரை:) அப்ராக்ருதமான பக்ஷிச்ரேஷ்டங்களாலே. (அதிரமணீய தர்ஸநை:) கண்ணுக்கு அழகியவாயிருப்பனவாய். (அதிமநோ ஹர மதுர † ஸ்வரை:) மிக்க மநோஹாரியான பேச்சிலினிமையை உடையனவாய். (அந்தஸ்த முக்தாமய திவ்யக்ரீடாஸ்தாநோபஸோபிதை:) உள்ளேயுண்டான முத்துக்களாலே சமைந்த லீலாஸ்தாநங்களாலே சோபிதங்களாய். (திவ்ய ஸௌகந்திகவாபீ ஸதஸஹஸ்ரை:) அப்ராக்ருதமான செங்கழுநீரையுடைத்தான நீர் வாவிகளுடைய நூறாயிரங்களாலே. (திவ்ய ராஜஹம்ஸாவலீ விராஜிதைராவ்ருதே) ஸுத்த ஸத்வமயமான ராஜஹம்ஸங்களுடைய

* (பா) ஸதஸஹஸ்ரோபஸோபிதை: † (பா) ஸ்வநை:

निरस्तातिशयानन्दैकरसतया चानन्त्याच्च प्रविष्टानुन्मादयद्भिः क्रीडोद्देशैर्विराजिते तत्र तत्र कृतदिव्यपुष्पपर्यङ्कोपशोभिते नानापुष्पासवास्वादमत्तभृङ्गावलीभिरुद्गीयमानदिव्यगान्धर्वेणापूरिते चन्दनागरुकर्पूरदिव्यपुष्पावगाहिमन्दानिलासेव्यमाने मध्ये दिव्यपुष्पसञ्चयविचित्रिते महति दिव्ययोगपर्यङ्के अनन्तभोगिनि श्रीमद्वैकुण्ठैश्वर्यादिदिव्यलोकम् आत्मकान्त्या विश्वमाप्याययन्त्या शेषशेषाशनादिसर्वपरिजनं भगवतस्तत्तदवस्थोचितपरिचर्यायामाज्ञापयन्त्या शीलरूपगुणविलासादिभिरात्मानुरूपया श्रिया सहासीनम्, प्रत्यग्रोन्मीलितसरसिजसदृशनयनयुगलम्, स्वच्छनीलजीमूतसङ्काशम्, अत्युज्ज्वलपीतवाससम् स्वया प्रभया अतिनिर्मलया अतिशीतलया स्वच्छया माणिक्याभया कृत्स्नं जगद्भासयन्तम्,

நிரஸ்தாதிசய ஆநந்தைகரஸதயா ச ஆநந்த்யாச்ச ப்ரவிஷ்டாந் உந்மாதயத்பி: க்ரீடோத் தேசை: விராஜிதே தத்ர தத்ர க்ருத திவ்ய புஷ்ப பர்யங்க உபசோபிதே நாநாபுஷ்ப *ஆஸவ ஆஸ்வாத மத்த ப்ருங்க ஆவலீபி: உத்கீயமாந திவ்ய காந்தர்வேண ஆபூரிதே சந்தந அகரு கர்ப்பூர திவ்ய புஷ்ப அவகாஹி மந்தாநில ஆஸேவ்யமாநே மத்யே (திவ்ய) புஷ்பஸஞ்சய விசித்ரிதே மஹதி திவ்ய †யோக பர்யங்கே அநந்தபோகிநி ஸ்ரீமத் வைகுண்டைச்வர்யாதி திவ்யலோகம் ஆத்ம காந்த்யா விச்வம் ஆப்யாயயந்த்யா சேஷ சேஷாசநாதி ஸர்வபரிஜநம் பகவத: தத்ததவஸ்தோசிதபரிசர்யாயாம் ஆஜ்ஞாபயந்த்யா சீல ரூப குண விலாஸாதிபி: ஆத்மாநுரூபயா ஸ்ரியா ஸஹ ஆஸீநம் ப்ரத்யக்ர உந்மீலித ஸரஸிஜ ஸத்ருச நயந யுகளம் ஸ்வச்ச நீல ஜீமூத ஸங்காசம் அத்யுஜ்ஜ்வல பீத வாஸஸம் ஸ்வயா ப்ரபயா அதிநிர்மலயா அதிசீதலயா ஸ்வச்சயா மாணிக்யாபயா க்ருத்ஸ்நம் ஜகத் பாஸயந்தம்

---

ஒழுங்குகளாலே விளங்காநின்றுள்ள முன் சொன்னவற்றாலே சூழப்பட்டிருப்பதாய்.

(நிரஸ்தாதிசயாநந்தைக ரஸதயா ச) நிரஸ்தமான மிகுதியை உடைத்தாய். ஆநந்தமாய், முடிவின்றிக்கேயிருக்கிற ஸுகமாயிருக்கையாலும். (ஆநந்த்யாச்ச) முடிவில்லாமையாலும். (ப்ரவிஷ்டாநுந்மாத்யத்பி:) ரஸ்யதையாலே உட்புகுந்தவர்களைப் பிச்சேற்றவற்றான. (க்ரீடோத்தேசைர் விராஜிதே) இப்படிப்பட்ட க்ரீடோத்தேசங்களாலே விளங்காநிற்பதாய். (தத்ர தத்ர க்ருத திவ்யபுஷ்ப பர்யங்கோபசோபிதே) அவ்வோ இடங்களிலே பண்ணப்பட்ட பூம்படுக்கைகளாலே

அலங்க்ருதமாய். (நாநா புஷ்ப*ஆஸவாஸ்வாத மத்த ப்ருங்காவளீபிருத்கீய-மாந திவ்ய காந்தர்வேணாபூரிதே) நாநாவிதமான புஷ்பங்களிலுண்டான மதுவைப் பானம் பண்ணி, அத்தாலேகளித்த வண்டுகளின் ஒழுங்குகளாலே பாடப்படாநின்ற காந்தர்வவித்யையாலே நிறைந்திருப்பதாய். (சந்தநாகரு கர்ப்பூர திவ்யபுஷ்பாவ காஹி மந்தாநிலாஸேவ்யமாநே) சந்தநம், அகில், கர்ப்பூரம், பூக்கள், இவற்றிலே உள்புகுந்து, அங்குள்ள பரிமளங்களைக் கொய்து கொண்டு வருகிற தென்றலாலே ஸேவிக்கப் படுமதாய். (மத்யே புஷ்பஸஞ்சய விசித்ரிதே) நடுவில் விடுபூக்களாலே விசித்ரிதமாய். (மஹதி திவ்ய†யோக பர்யங்கே) பெரிய திருப்பள்ளிக்கட்டிலாயிருக்கிறதிலே. (அநந்த போகிநி) திருவநந்தாழ்வான் மேலே.

இப்படியிருக்கிற படுக்கையிலே, நாய்ச்சிமாருடன் கூடி எழுந்தருளியிருக்கும்படி சொல்லுகிறது மேல். (ஸ்ரீமத் வைகுண்டைச்வர்-யாதி திவ்யலோகம்) இப்படியிருக்கிற திவ்யலோகத்தை. (ஆத்ம காந்த்யா) தன்னுடைய காந்தியாலே. (விஶ்வமாப்யாயயந்த்யா) விச்வத்தையும் ஆப்யாயநம் பண்ணுவிப்பியா நின்றுகொண்டு. (ஶேஷஶேஷாஶநாதி ஸர்வ பரிஜநம்) திருவநந்தாழ்வான் ஸேனை முதலியாருள்ளிட்ட பரிஜநமெல்லாவற்றையும். (பகவதஸ் தத்தவஸ்-தோசித பரிசர்யாயாமாஜ்ஞாபயந்த்யா) ஸர்வேச்வரனுக்கு அந்தந்த அவஸ்தைகளுக்கீடாம்படியான கைங்கர்யத்திலே நியமியாநிற்பாளாய். (ஶீலரூப குண விலாஸாதிபிராத்மாநுரூபயா) ஶீலகுணோபலக்ஷிதமான ஆத்மகுணமென்ன, ரூபகுணோபலக்ஷிதமான ஸௌந்தர்யாதிகுணமென்ன, விலாஸமென்ன இவை தொடக்கமானவற்றாலே ஸர்வேச்வரனுக்கு ஸத்ருஶையாயுள்ளவளாய். (ஸ்ரியா ஸஹாஸீநம்) இப்படிப்பட்ட பெரியபிராட்டியோடே கூடியிருப்பானாய்.

(ப்ரத்யக்ரோந்மீலித ஸரஸிஜ ஸத்ருஶ நயநயுகளம்) அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களை உடையவனை. (ஸ்வச்ச நீல ஜீமூத ஸங்காஶம்) தெளிந்த காளமேகம்போலே இருக்கிறவனை. (அத்யுஜ்ஜ்வல பீதவாஸஸம்) அறப் பளபளத்த திருப்பீதாம்பரத்தை உடையவனை. (ஸ்வயா ப்ரபயா) தன்னுடையதான காந்தியாலே. (அதிநிர்மலயா) மிகவும் அழுக்கற்று. (அதிஶீதளயா) அறக்குளிர்ந்திருப்பதாய். (ஸ்வச்சயா) மிகவும் அச்சமாயிருப்பதாய். (மாணிக்யாபயா) மாணிக்யம்போலே இருக்கிற ப்ரபையை உடைத்தாய். (க்ருத்ஸ்நம் ஜகத் பாஸயந்தம்) எல்லா ஜகத்தையும் ப்ரகாசிப்

* (பா) ரஸாஸ்வாத † (பா) போக (भोग) பர்யங்கே

**अचिन्त्यदिव्याद्भुतनित्ययौवनस्वभावलावण्यमयामृतसागरम्, अतिसौकुमार्यादीषत्प्रस्विन्नवदालक्ष्यमाणललाटफलकदिव्यालकावलीविराजितम्, प्रबुद्ध-मुग्धाम्बुजचारुलोचनम्, सविभ्रमभ्रूलतम्, उज्ज्वलाधरम्, शुचिस्मितम्, कोमलगण्डम्, उन्नसम् उदग्रपीनांसविलम्बिकुण्डलालकावलीबन्धुरकम्बु-कन्धरम्, प्रियावतंसोत्पलकर्णभूषणश्लथालकाबन्धविमर्दशंसिभिश्चतुर्भिराजानु-विलम्बिभिर्भुजैर्विराजितम्, अतिकोमलदिव्यरेखालङ्कृताताम्रकरतलम्, दिव्याङ्गुलीयकविराजितम्, अतिकोमल (दिव्य) नखावलीविराजितमतिरक्ताङ्गुली-भिरलङ्कृतम्, तत्क्षणोन्मीलितपुण्डरीकसदृशचरणयुगलम्, अतिमनोहरकिरीटमकुटचूडावतंसमकरकुण्डलग्रैवेयक हारकेयूरकटकश्रीवत्सकौस्तुभमुक्तादामोदरबन्धनपीताम्बरकाञ्चीगुणनूपुरादिभिरत्यन्तसुखस्पर्शैर्दिव्यगन्धैर्भूषणैर्भूषितम्, श्रीमत्या वैजयन्त्या वनमालया विराजितम्, शङ्खचक्रगदासिशार्ङ्गादिदिव्यायुधैस्सेव्यमानम्,**

அசிந்த்ய திவ்ய அத்புத நித்ய யௌவந ஸ்வபாவலாவண்யமய அம்ருத ஸாகரம் அதிஸௌகுமார்யாத் ஈஷத்ப்ரஸ்விந்நவத் ஆலக்ஷ்யமாண லலாடபலக திவ்யாலக ஆவலீ விராஜிதம் ப்ரபுத்த முக்தாம்புஜ சாருலோசநம் ஸவிப்ரம ப்ரூலதம் உஜ்ஜ்வல அதரம் சுசி ஸ்மிதம் கோமல கண்டம் உந்நஸம் உதக்ர பீந அம்ஸ விலம்பி குண்டல அலகாவலீ பந்துர கம்பு கந்தரம் ப்ரியா அவதம்ஸ உத்பலகர்ண பூஷண ச்லத அலகாபந்த விமர்த சம்ஸிபி: சதுர்ப்பி: ஆஜாநு விலம்பிபி: புஜை: விராஜிதம் அதிகோமல திவ்யரேகா அலங்க்ருத ஆதாம்ர கரதலம் திவ்ய அங்குலீயக விராஜிதம் அதிகோமல நகாவலீ விராஜிதம் அதிரக்தாங்குலீபி: அலங்க்ருதம் தத்க்ஷண உந்மீலித புண்டரீக ஸத்ருச சரண யுகளம் அதிமநோஹர கிரீட மகுட சூடாவதம்ஸ மகர குண்டல க்ரைவேயக ஹார கேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தாதாம உதரபந்த பீதாம்பர காஞ்சீ குண நூபுராதிபி: அத்யந்தஸுகஸ்பர்சை: திவ்யகந்தை: பூஷணை: பூஷிதம் ஸ்ரீமத்யா வைஜயந்த்யா வந மாலயா விராஜிதம் சங்க சக்ர கதா அஸி சார்ங்காதி திவ்யாயுதை: ஸேவ்யமாநம்

---

*பிக்குமவனாய், (அசிந்த்ய) சிந்தயிதுமசக்யமாய். (திவ்ய) அப்ராக்ருதமாய்- (அத்புத) மிக ஆச்சர்யபூதமாய். (நித்ய யௌவநஸ்வபாவ லாவண்யமயாம்ருதஸாகரம்) போது செய்யாதபடியான நித்யயௌவநத்தையே ஸ்வபாவமாக உடைத்தாய், அழகாகிற அம்ருதத்துக்குக் கடலாய். (அதிஸௌகுமார்யாதீஷத் ப்ரஸ்விந்நவதாலக்ஷ்யமாண லலாடபலக திவ்யாலகாவளீ விராஜிதம்) அற மெல்லியதானகயாலே, தளிர்*

போலே புரைந்து தோற்றுகிற திருநெற்றியிலே அலையெறிகிற திருக்குழற்கற்றையாலே விளங்காநிற்பானாய். (ப்ரபுத்த) தொடங்கி (விராஜிதம்) அறுதியாக உள்ள பதங்களுக்குப் பொருள் † ஸ்தோத்ர பாஷ்யத்தில் கண்டுகொள்வது.

(அதிகோமள திவ்யரேகாலங்க்ருதாதாம்ரகரதலம்) அதிகோமளமாய், சால அழகியதாயிருக்கிற திவ்யரேகையுண்டு—தாமரை, ஶங்கம், சக்ரம் தொடக்கமான ரேகைகள். அவற்றைத் திருக்கைத் தலத்திலே உடையவனாய். (திவ்யாங்குளீயக விராஜிதம்) திருவிரலில் சாத்தின அறுகாழிமோதிரத்தாலே விளங்காநிற்பானாய். (அதிகோமளநகாவலீவிராஜிதம்) மிகவும் ஸுகுமாரமாயிருக்கிற திருவுகிரொழுங்குகளாலே விளங்காநிற்பானாய். (அநுரக்தாங்குளீபிரலங்க்ருதம்) சிவந்த திருவிரல்களாலே விளங்காநிற்பானாய். (தத்க்ஷணோந்மீலித புண்டரீக ஸத்ருஶ சரணயுகளம்) அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற இரண்டு திருவடிகளை உடையவனாய். (அதிமநோஹர கிரீடேத்யாதி) கண்டார் நெஞ்சு பறியுண்ணும்படியான கிரீடாதிகளாலே அலங்க்ருதனென்கிறது. (கிரீட மகுட) கிரீட மகுடமென்ன; அன்றிக்கே கிரீடமான மகுடமென்ன. (சூடா) அதிலே சாத்தின திருச்சூட்டென்ன. (அவதம்ஸ) திருச்செவிமலரென்ன. (மகரகுண்டல) திருமகரக்குழையென்ன. (க்ரைவேயக) திருக்கழுத்தணியென்ன. (ஹார) திருமார்பிலே தழையச்சாத்தும் திருவாரமென்ன. (கேயூர) பாஹுவலயமென்ன. (கடக) முன் கையில் சாத்தும் கடகவலயமென்ன. (ஸ்ரீவத்ஸ) திருமார்பில் அஸாதாரணமான திருமறுவென்ன. (கௌஸ்துப) ஸ்ரீகௌஸ்துபமென்ன. (முக்தாதாம) திருமுத்துவடமென்ன. (உதரபந்தந) திருவுதரபந்தநமென்ன. (பீதாம்பர) கநகசேலமென்ன. (காஞ்சீகுண) அரைநூல் பட்டிகையென்ன. (நூபுர) திருச்சிலம்பென்ன. (ஆதிபி:) இவை தொடக்கமான. (அத்யந்த ஸுக ஸ்பர்ஶை:) திருமேனிக்குப் பூத்தொடுமாப்போலே ஸ்பர்சிக்கும்போது ஸுககரமாயிருப்பனவாய். (திவ்யகந்தை:) அப்ராக்ருதமான திவ்ய பரிமளத்தை உடைத்தாயிருப்பனவாய். (பூஷணை: பூஷிதம்) இப்படிப்பட்ட திவ்யாபரணங்களாலே அலங்க்ருதனாயிருப்பானாய். (ஸ்ரீமத்யா வைஜயந்த்யா வநமாலயா விராஜிதம்) அழகையுடைத்தாய் வைஜயந்தியென்று பேர் பெற்றிருக்கிற வநமாலையாலே விளங்காநிற்பானாய். (ஶங்கசக்ரகதா஽ஸி ஶார்ங்காதி திவ்யாயுதைஸ் ஸேவ்யமாநம்)

† இதிலிருந்து ஸ்தோத்ரகத்யபாஷ்ய கர்த்ரைக்யம்விளங்குகிறது.

स्वसङ्कल्पमात्रावक्लृप्तजगज्जन्मस्थितिध्वंसादिके श्रीमति विष्वक्सेने न्यस्त -
समस्तात्मैश्वर्यम्, वैनतेयादिभिस्स्वभावतो निरस्तसमस्तसांसारिकस्वभावैर्भग-
वत्परिचर्याकरणयोग्यैर्भगवत्परिचर्यैकभोगैर्नित्यसिद्धैरनन्तैर्यथायोगं सेव्यमानम्,
आत्मभोगेन अनुसंहितपरादिकालदिव्यामलकोमलावलोकनेन विश्वमाह्लाद-
यन्तम्, ईषदुन्मीलितमुखाम्बुजोदरविनिर्गतेन दिव्याननारविन्दशोभाजनकेन
दिव्यगाम्भीर्यौदार्यमाधुर्याद्यनवधिकगुणगणविभूषितेन अतिमनोहरदिव्यभाव -
गर्भेण दिव्यलीलालापामृतेन अखिलजनहृदयान्तराण्यापूरयन्तम् भगवन्तम्
नारायणम् ध्यानयोगेन दृष्ट्वा

ஸ்வஸங்கல்ப மாத்ர அவக்லுப்த ஜகத் ஜந்ம ஸ்திதி த்வம்ஸாதிகே ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே ந்யஸ்தஸமஸ்த ஆத்மைச்வர்யம் வைநதேயாதிபி: ஸ்வ பாவதோ நிரஸ்த ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபாவை: பகவத் பரிசர்யா கரண யோக்யை: பகவத் பரிசர்யைக போகை: நித்யஸித்தை: அநந்தை: யதாயோகம் ஸேவ்யமாநம் ஆத்ம போகேந அநுஸம்ஹித பராதிகால திவ்ய அமல கோமல அவலோகநேந விச்வம் ஆஹ்லாதயந்தம் ஈஷத் உந்மீலித முகாம்புஜ உதர விநிர்க்கதேந திவ்யாநநாரவிந்த ஶோபா ஜநகேந திவ்யகாம்பீர்ய ஔதார்ய ஸௌந்தர்ய மாதுர்யாதி அநவதிக குணகண விபூஷிதேந அதிமநோஹர திவ்யபாவகர்ப்பேண திவ்யலீலா லாப அம்ருதேந அகில ஜநஹ்ருதயாந்தராணி ஆபூரயந்தம் பகவந்தம்
நாராயணம் த்யாநயோகேந த்ருஷ்ட்வா

---

ஸ்நேஹத்தாலே அஸ்தாநஶங்கா (ரக்ஷா?) வ்யஸநிகளான பஞ்சாயுதம் துடக்கமான திவ்யாயுதங்களாலே சூழ்ந்திருந்தேத்தப்படுமவனாய்.

(ஸங்கல்பமாத்ராவக்லுப்த ஜகஜ்ஜந்மஸ்திதி த்வம்ஸாதிகே) நினைத்தமாத்ரத்திலே நிர்வஹிக்கப்பட்ட ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸமஸ்தவஸ்துக்களினுடைய உத்பத்திஸ்திதி விநாஶங்களென்ன, நியமநாதிகளென்ன இவற்றை உடையராய். (ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே) கைங்கர்யலக்ஷ்மிக்கு இட்டுப்பிறந்த ஸேனை முதலியார் பக்கலிலே. (ந்யஸ்த ஸமஸ்தாத்மைச்வர்யம்) வைக்கப்பட்ட தம்முடைய எல்லா நியந்த்ருத்வத்தை உடையவராயுள்ளவரை. பெரியதிருவடிநாயனார் துடக்கமான ஸூரிபரிஷத்தாலே ஸேவ்யனாயிருக்குமென்கிறது மேல். (வைநதேயாதிபி:) பெரியதிருவடி நாயனார் துடக்கமான பார்ஷதாத்யர், கணநாயகர்கள் துடக்கமானவர்களாலே. பார்ஷதாத்யராகிறார் கஜவக்த்ராதிகள். கணநாயகர்களாகிறார் குமுதாதிகள். (ஸ்வபாவதோ

நிரஸ்த ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபாவை:) ஒரு நாள் வரையிலன்றிக்கே ஸ்வஸத்தாநிபந்தநமாக இன்றியிலேயிருக்கிற ஸகலஸாம்ஸாரிகஸ்வபாவத்தை உடையராய். (பகவத் பரிசர்யா கரண யோக்யை:) உடையவன் திருவடிகளிலே கைங்கர்யம் பண்ணுகைக்கு இட்டுப் பிறந்தவர்களாய். (பகவத் பரிசர்யைக போகை:) 'பகவத்கைங்கர்ய மொழியத் தங்களுக்கு தாரகமின்றியிலேயிருப்பாராய். (நித்ய ஸித்தை:) இப்படியிருக்கிற நித்யஸூரிகளாலே. (அநந்தை:) இன்னதனையென்று முடிவில்லாதவர்களாலே. (யதா யோகம் ஸேவ்யமாநம்) நின்ற நிலைகளுக்கீடாக ஸேவிக்கப்படுமவனை.

(ஆத்மபோகேந அநுஸம்ஹித பராதிகால திவ்யாமலகோமளாவலோகநேந) இக்கடாக்ஷம் பரார்த்தமாகவன்றிக்கே, காலதத்வமுள்ள தனையும் ஸ்வப்ரயோஜநமாக அநுஸந்திக்கப்பட்டு, விலக்ஷணமாய் அபராதங்களை நினைத்துக் கலங்குகையன்றிக்கே ஸுப்ரஸந்நஸுந்தரமான கடாக்ஷத்தாலே. (விஶ்வமாஹ்லாதயந்தம்) ஸமஸ்தவஸ்துக்களையும் உகப்பிக்கக்கடவனாய். (ஈஷதுந்மீலித முகாம்புஜோதர விநிர்க்கதேந) சிறிது அலர்ந்த திருமுகத்தாமரையிடையினின்றும் புறப்பட்டிருப்பதாய். (திவ்யாநநாரவிந்தஶோபாஜநகேந) திருப்பவளத்துக்கு ஆபரணம் சாத்தினப்போலே அழகை உண்டாக்கக்கடவதாய். (திவ்ய காம்பீர்யௌதார்ய மாதுர்யாத்யநவதிக குண கண விபூஷிதேந) பெரிய முழக்கமென்ன, அர்த்தபோதகத்வமென்ன, இனிமையென்ன, ஓஜ: ப்ரஸாதாதிகளென்ன, இவை தொடக்கமான எண்ணிறந்த குணகணங்களாலே அலங்க்ருதமாயிருப்பதாய். (அதிமநோ ஹர திவ்ய பாவகர்ப்பேண) நெஞ்சை வருத்தக்கடவதாய், திவ்யமான அபிப்ராயத்தை உள்ளே உடையதாய். (திவ்யலீலாலாபாம்ருதேந) ஹர்ஷம் வழிந்த சொல்லாகிற அம்ருதத்தாலே. (அகில ஜந ஹ்ருதயாந்தராண்யாபூரயந்தம்) எல்லாருடைய நெஞ்சுகளின் அவகாஶமடைய நிறைப்பானுயுள்ளவனை. (பகவந்தம் நாராயணம்) இப்படி ஹேயப்ரதிபடமான கல்யாணகுணங்களுக்கு ஆகரனான நாராயணனை. (த்யாந யோகேந த்ருஷ்ட்வா) மாநஸ ஸாக்ஷாத்காரம் பண்ணி. "'த்யாநயோகேந த்ருஷ்ட்வா' என்கையாலே, பக்தியைப் பண்ணினால் தத்பலமாக வரும் ஸாக்ஷாத்காரம் சொன்னப்போலே இராநின்றது; 'ஶரணமநுவ்ரஜேத்' என்று ப்ரபத்திபண்ணினது நிஷ்பலமாமோ" என்னில்: அன்று; ப்ரபத்திபலமான ஸாக்ஷாத்காரத்தையே சொல்லுகிறது.

**[ततो] भगवतो नित्यस्वाम्यम्, आत्मनो नित्यदास्यं च यथावस्थितमनुसन्धाय, "कदाऽहं भगवन्तं नारायणं मम नाथं मम कुलदैवतं मम कुलधनं मम भोग्यं मम मातरं मम पितरं मम सर्वं साक्षात्करवाणि चक्षुषा; कदाऽहं भगवत्पादाम्बुजद्वयं शिरसा धारयिष्यामि, कदाऽहं भगवत्पादाम्बुजद्वयपरिचर्याकरणयोग्यः [तदेकभोगः] तत्पादौ परिचरिष्यामि, कदाऽहं भगवत्पादाम्बुजद्वयपरिचर्याशया निरस्तसमस्तेतरभोगाशः अपगतसमस्तसांसारिकस्वभावः तत्पादाम्बुजद्वयं प्रवेक्ष्यामि, कदा मां भगवान् स्वकीयया अतिशीतलया दृशा अवलोक्य स्निग्धगम्भीरमधुरया गिरा परिचर्यायामाज्ञापयिष्यति" इति भगवत्परिचर्यायाम् आशां वर्धयित्वा,**

(ததஃ) பகவதஃ நித்ய ஸ்வாம்யம் ஆத்மநஃ நித்யதாஸ்யம் ச யதாவஸ்திதம் அநுஸந்தாய கதா அஹம் பகவந்தம் நாராயணம் மம நாதம் மம குல தைவதம் மம குல தநம் மம போக்யம் மம மாதரம் மம பிதரம் மம ஸர்வம் ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா கதா அஹம் பகவத் பாதாம்புஜத்வயம் சிரஸா தாரயிஷ்யாமி [ஸங்க்ரஹீஷ்யாமி] கதா அஹம் பகவத் பாதாம் புஜத்வய பரிசர்யா கரணயோக்ய: [ததேக போக:] தத்பாதௌ பரிசரிஷ்யாமி கதா அஹம் பகவத்பாதாம்புஜ த்வய பரிசர்யாசயா நிரஸ்த ஸமஸ்தேதர போகாச: அபகத ஸமஸ்த ஸாம்ஸாரிகஸ்வபாவ: தத்பாதாம்புஜத்வயம் ப்ரவேக்ஷ்யாமி கதா மாம் பகவாந் ஸ்வகீயயா அதிசீதலயா த்ருசா அவலோக்ய ஸ்நிக்த கம்பீர மதுரயா கிரா பரிசர்யாயாம் ஆஜ்ஞாபயிஷ்யதி இதி பகவத் பரிசர்யாயாம் ஆசாம் வர்த்தயித்வா

---

*ஆனால், (த்யாந யோகேந) என்றது செய்யும்படியென்னென்னில்: த்யாந யோகத்தாலே காணுமாப்போலே கண்டு என்கிறது. (த்யாந யோகேந த்ருஷ்ட்வா) என்று, (ப்ரத்யஹமாத்மோஜ்ஜீவநாயை வமநுஸ்மரேத்) என்று சொன்ன காலக்ஷேபாநுஸந்தாநம் முற்றி வெளிப் பட்டதாகவுமாம்.*

(பகவதோ நித்யஸ்வாம்யமாத்மநோ நித்ய தாஸ்யஞ்ச யதாவஸ்தித மநுஸந்தாய) இருவருடையவும் *ஶாஸ்த்ரஸித்தமான ஸ்வஸ்வாமி ஸம்பந்தத்தை உணர்ந்து. இனி, அந்த ஸாக்ஷாத்காரலாபமான பேற்றில் மநோரதப்ரகாரம் சொல்லுகிறது,*—(கதாஹமித்யாதியாலே). (கதா) *'அந்நாள் எந்நாள்?" என்று பதறுகிறார்.* (அஹம்) *அவ்ய பிசாரியான உபாயம் கைபுகுந்து பேற்றில் பதற்றத்தை உடையனான நான்.* (பகவந்தம் நாராயணம்) *ஆறியிருக்கவொண்ணாதபடியான குணங்களையும் ப்ராப்தியையுமுடையவனை.* (மம நாதம்) *எனக்கு*

வகுத்த ஶேஷியாயுள்ளவனே. (மம குலதைவதம்) ஸாமாந்யமாயிருக்கையன்றிக்கே, எங்களுக்குக் குலக்ரமாகதனான நாதனாயுள்ளவனே. (மம குலதநம்) எனகுக் குலக்ரமமாக ஆபத்துக்கு ஜீவிக்கக்கைம் முதலாயுள்ளவனே. (மம போக்யம்) எனக்கு போக்யனானவனே. (மம மாதரம்) எனக்கு தாரகனுமாய், ஹிதப்ரவர்த்தகனுமாயுள்ளவனே. (மம பிதரம்) எனக்கு உத்பாதகனுமாய் ஹிதப்ரவர்த்தகனுமாயுள்ளவனே. (மம ஸர்வம்) 99 (மாதா பிதா ப்ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:) என்றும், (த்வமேவ மாதா ச பிதா த்வமேவ) என்றும், * "சேலேய் கண்ணியரும்" என்றும் சொல்லுகிறபடியே அநுக்தமான ஸமஸ்தவஸ்துக்களுமானவனே. (ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா) இப்போதை மாநஸஸாக்ஷாத்காரமொழிய 198 "सदा पश्यन्ति" (ஸதாபஶ்யந்தி) என்கிறபடியே † 'கண்டுகொண்டென் கண்ணிணைகளென்றுகொலோகளிக்கும் நாள்' என்கிறார். (கதாஹம் பகவத்பாதாம்புஜத்வயம் ஶிரஸாதாரயிஷ்யாமி) 199 "मदीयमूर्धानमलङ्करिष्यति" (மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி) என்றும், § "தளிர் புரையும் திருவடியென் தலைமேலவே" என்றும் சொல்லுகிறபடியே வகுத்த ஶேஷியானவனுடைய நிரதிஶயபோக்யமான திருவடித்தாமரைகளை நான் சிரஸா வஹிப்பதென்றோ என்கிறார். (கதாऽஹம் பகவத்பாதாம்புஜத்வய பரிசர்யாஶயா நிரஸ்த ஸமஸ்தேதரபோகாஶ: அபகத ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபாவ: தத்பாதாம்புஜத்வயம் ப்ரவேக்ஷ்யாமி) ஸர்வேச்வரன் திருவடிகளில் கைங்கர்யருசியாலே போக்கடிக்கப்பட்ட புறம்புள்ள விஷயங்களிலுண்டான போகஶ்ரத்தையை உடையனாய், தன்னடையே பாறிப்போன ராகத்வேஷாதிகளாகிற ஸமஸ்த ஸாம்ஸாரிகஸ்வபாவத்தை உடையேனாய்க்கொண்டு, நான் என்றைக்கோ அந்தப் பாதாம்புஜத்வயத்தைக் கிட்டுவேன் என்கிறார். (கதா மாம் பகவாந் ஸ்வகீயயாதிஶீதளயா த்ருஶாவலோக்ய, ஸ்நிக்த கம்பீர மதுரயா கிரா பரிசர்யாயாமாஜ்ஞாபயிஷ்யதி) புருஷோத்தமனானவன் தன்னுடைய அறக்குளிர்ந்த திருக்கண்களாலே கடாக்ஷித்து முழக்கி, இனிதான பேச்சாலே ‡ "முகப்பே கூவிப் பணிகொள்ளாய்" என்கிறபடியே கைங்கர்யத்தில் என்னை ஏவப்புகுகிறது எப்போதா? (இதி பகவத் பரிசர்யாயாமாஶாம் வர்த்தயித்வா) என்று இப்புடைகளிலே பகவத்கைங்கர்யத்தில் ஆசையை வளர்த்தி.

---

* திருவாய்[5-1-8] † பெருமா-திரு[1-1] § திருநெடு-1 ‡ திருவாய்[8-5-7]

तयैवाशया तत्प्रसादोपबृंहितया भगवन्तमुपेत्य, दूरादेव भगवन्तं शेषभोगे श्रिया सहासीनं वैनतेयादिभिस्सेव्यमानं "समस्तपरिवाराय श्रीमते नारायणाय नमः" इति प्रणम्य, उत्थायोत्थाय पुनःपुनः प्रणम्य अत्यन्तसाध्वसविनयावनतो भूत्वा, भगवत्पारिषदगणनायकैर्द्वारपालैः कृपया स्नेहगर्भया दृशाऽवलोकितो भूत्वा सम्यगभिवन्दितैस्तैरेवानुमतः भगवन्तमुपेत्य श्रीमता मूलमन्त्रेण "भगवन्! माम् ऐकान्तिकात्यन्तिकपरिचर्याकरणय परिगृह्णीष्व" इति याचमानः प्रणम्यात्मानं भगवते निवेदयेत्॥

४. ततो भगवता स्वयमेवात्मसञ्जीवनेन [अमर्यादशीलवताऽतिप्रेमान्वितेन] अवलोकनेनावलोक्य सर्वदेशसर्वकालसर्वावस्थोचितात्यन्तशेषभावाय स्वीकृतः अनुज्ञातश्च अत्यन्तसाध्वसविनयावनतः किङ्कुर्वाणः कृताञ्जलिपुटः भगवन्तमुपासीत॥

தயைவ ஆசயா தத்ப்ரஸாத உபப்ரும்ஹிதயா பகவந்தம் உபேத்ய தூராத் ஏவ பகவந்தம் சேஷ போகே ச்ரியா ஸஹ ஆஸீநம் வைநதேயாதிபி: ஸேவ்யமாநம் 'ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:' இதி ப்ரணம்ய உத்தாய உத்தாய புந:புந: ப்ரணம்ய அத்யந்த ஸாத்வஸ விநயாவநத: பூத்வா பகவத்பாரிஷத கணநாயகை: த்வாரபாலை: க்ருபயா ஸ்நேஹ கர்ப்பயா த்ருசா அவலோகித: பூத்வா ஸம்யக் அபிவந்திதை: தைரேவ அநுமத: பூத்வா பகவந்தம் உபேத்ய ஸ்ரீமதா மூலமந்த்ரேண 'பகவந் மாம் ஐகாந்திக ஆத்யந்திக பரிசர்யாகரணாய பரிக்ருஹ்ணீஷ்வ' இதி யாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் பகவதே நிவேதயேத்

4. ததோ பகவதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந [அமர்யாதசீலவதா அதிப்ரேமாந்விதேந] அவலோகநேந அவலோக்ய ஸர்வதேச ஸர்வ கால ஸர்வாவஸ்தோசிதாத்யந்த சேஷபாவாய ஸ்வீக்ருத: அநுஜ்ஞாதச் ச அத்யந்த ஸாத்வஸ விநயாவநத: கிங்குர்வாண: க்ருதாஞ்ஜலிபுட: பகவந்தம் உபாஸீத.

---

(தயைவாஶயா தத்ப்ரஸாதோபப்ரும்ஹிதயா பகவந்தமுபேத்ய) பகவத்ப்ரஸாதத்தாலே மேன்மேலெனக்கரைபுரண்டு பெருகிவருகிற அந்த ஆசையோடே கூட ஸர்வேச்வரனைக் கிட்டி. (தூராதேவ பகவந்தம் ஶேஷபோகே ஶ்ரியா ஸஹாஸீநமித்யாதி). (தூராதேவ ப்ரணம்ய) என்று மேலே அந்வயம். திருவநந்தாழ்வான் மடியிலே பெரிய பிராட்டியாரோடே கூட இருப்பானாய்,பெரியதிருவடி நாயனார் தொடக்கமான நித்ய ஸூரிகளால் ஸதா ஸேவ்யமானனாயிருக்கிற பகவானை. (ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:) என்று

தூரத்திலே தண்டனிட்டு, விழுவதெழுவதாய், பின்னையும் ஆதராதி ஶயத்தாலே பலகால் தண்டனிட்டு. (அத்யந்த ஸாத்வஸேத்யாதி) மிகவு முண்டான உள்ளச்சத்தாலே புடைவையொதுக்குவது, வாயைப் புதைப்பதாய்க்கொண்டு தலைசாய்த்து. பகவானுடைய பாரிஷதத் திருவோலக்கத்திலவர்கள், கணநாயகர், படைத்தலைவர், திருவாசல் காப்பார் இவர்களாலே ஸ்நேஹத்தைப் பொதிந்துகொண்டிருக்கிற க்ருபையாலே பார்க்கப்பட்டு. (ஸம்யகபிவந்திதைஸ் தைரேவாநுமதோ பூத்வா பகவந்தமுபேத்ய ஸ்ரீமதா மூலமந்த்ரேண பகவந் மாமைகாந்தி-காத்யந்திக பரிசர்யாகரணாய பரிக்ருஹ்ணீஷ்வேதி யாசமாந:, ப்ரணம்-யாத்மாநம் பகவதே நிவேதயேத்) புத்திபூர்வகமாக தண்டனிடப்பட்டி ருக்கிற அவர்களாலே அநுமதனாய்க்கொண்டு ஸ்ரீவைகுண்டநாதன் அருகேசென்று பெரியதிருமந்த்ரத்தாலே, 'அடியேனை அநந்யபரனுக்கி நிரவதிகமான கைங்கர்யத்தின் பொருட்டுக் கைக்கொண்டருள வேணும்' என்று ப்ரார்த்தியாநிற்கிற தன்னை, எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கக்கடவன்.

---

நாலாம் சூர்ணை அவதாரிகை:—இனிமேல், இப்படி ப்ரார்த்த நாநுகுணமாக அங்கீக்ருதனாய், கைங்கர்யம் பண்ணிக்கொண்டிருப் பான் என்கிறது (ததோ பகவதேத்யாதியாலே).

வ்யா:—(தத:) ஆத்மஸமர்ப்பணம் பண்ணின அநந்தரம். (பகவதா) புருஷோத்தமனாலே. (ஸ்வயமேவ) இனி இவன் அபேக்ஷித்தபடி தானே. (ஆத்மஸஞ்ஜீவநேந அவலோகநேந) ஆத்மஸமுஜ்ஜீவநஹேது வான பார்வையாலே. (அவலோக்ய) கடாக்ஷித்து, (ஸர்வ தேஶ ஸர்வ கால ஸர்வாவஸ்தோசிதாத்யந்த ஶேஷபாவாய) எல்லா தேஶத்திலும், எல்லாக் காலத்திலும் எல்லா அவஸ்தைகளிலும் உசிதமான முடி வில்லாத ஶேஷபாவத்தின்பொருட்டு. (ஸ்வீக்ருதோऽநுஜ்ஞாதஶ்ச) அங்கீகரிக்கப்பட்டவனாயும், அநுமதிபண்ணப்பட்டவனாயுங்கொண்டு. ஸ்வரூபாநுரூபமான அஞ்ஜலியைப் பண்ணிக்கொண்டு. (பகவந்தமு-பாஸீத) 112 (ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்-சிதா) என்கிறபடியே ஸ்ரீவைகுண்டநாதனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாணகுணங்களை அநுஸந்தித்து, 70 (ஏதத் ஸாம காயந்நாஸ்தே) என்றும், * "அடியரோடிருந்தமை" என்றும் சொல்லுகிறபடியே ஸேவித்திருப்பானென்கிறார்.

---

* திருவாய் (10-9-11)

५. ततश्चानुभूयमानभावविशेषः निरतिशयप्रीत्या अन्यत् किञ्चित्कर्तुं द्रष्टुं स्मर्तुमशक्तः पुनरपि शेषभावमेव याचमानः भगवन्तमेव अविच्छिन्नस्रोतोरूपेणावलोकनेनावलोकयन्नासीत॥

६. ततो भगवता स्वयमेवात्मसञ्जीवनेनावलोकनेनावलोक्य सस्मितमाहूय समस्तक्लेशापहं निरतिशयसुखावहम् आत्मीयं श्रीमत्पादारविन्दयुगलं शिरसि कृतं ध्यात्वा

5. ததச் ச அநுபூயமாந பாவவிசேஷ: நிரதிசயப்ரீத்யா அந்யத் கிஞ்சித் கர்த்தும் த்ருஷ்டும் ஸ்மர்த்தும் அசக்த: புநரபி சேஷபாவமேவ யாசமாந: பகவந்தமேவ அவிச்சிந்ந ஸ்ரோதோரூபேண அவலோகநேந அவலோகயந் ஆஸீத.

6. ததோ பகவதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந அவலோநேந அவலோக்ய ஸஸ்மிதமாஹூய ஸமஸ்தக்லேசாபஹம் நிரதிசய ஸுகாவஹம் ஆத்மீயம் ஸ்ரீமத் பாதாரவிந்தயுகலம் சிரஸி க்ருதம் த்யாத்வா

---

ஐந்தாம் சூர்ணை அவதாரிகை:—அநுபவஜநிதப்ரீதிப்ரகர்ஷத்தாலே வேறொன்றுக்கு ஆளாகாதபடி ஸதா தர்ஶநம் பண்ணிக்கொண்டிருப்பான் என்கிறது (ததச்ச) இத்யாதியாலே.

வ்யா:—(ததச்ச) பின்னையும். (அநுபூயமாந பாவவிஶேஷ:) அநுபவிக்கப்படாநிற்கிற ஸர்வேச்வரனுடைய ரக்ஷகத்வாதி ஸ்வபாவ விஶேஷத்தை உடையனாய்க்கொண்டு. 200 "तद्भावभावमापन्नः" (தத்பாவ பாவமாபந்ந:) என்கிறபடியே பகவத்ஸ்வபாவமான அபஹதபாப்மத்வாதிகுணாஷ்டகத்தை அநுபவித்துக்கொண்டிருக்குமவனாய் என்றுமாம். (நிரதிஶயப்ரீத்யா) தன்னோபாதி புறம்பில் மிகுதியில்லை என்னும்படியான ப்ரீதியாலே. (அந்யத் கிஞ்சித் கர்த்தும் த்ரஷ்டும் ஸ்மர்த்துமஶக்த:) 201 "प्रहर्षेणावरुद्धा सा व्याजहार न किञ्चन" (ப்ரஹர்ஷேணாவருத்தா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந) என்று பிராட்டி ப்ரீதிப்ரகர்ஷம் மிடறுபிடிக்கப் பேசாதிருந்தாப்போலே, ஆநந்தாதிஶயத்தாலே வேறொன்றைப் பண்ணுதல் நினைத்தல் பார்த்தல் செய்யமாட்டாதானாய் என்னுதல்; 202 "नोपजनं स्मरन्निदं शरीरं" (நோபஜநம் ஸ்மரந் நிதம் ஶரீரம்) என்கிறபடியே ஸாம்ஸாரிகவ்யாபாரங்களைத் தவிர்த்து

என்னவுமாம். (புநரபி ஶேஷபாவமேவ யாசமாந:) ஶேஷபாவம் பெற்றிருக்கச்செய்தேயும் அதின் இனிமையாலே இது நிலைநிற்கப் போகிறதோ என்கிற அதிஶங்கையாலே பின்னையும் இப்படிப்பட்ட ஶேஷபாவம் குலையாதே நிற்கவேணுமென்று வேண்டிக்கொண்டு. (பகவந்தமேவ) ஸ்ரீவைகுண்டநாதனையே. (அவச்சிந்ந ஸ்ரோதோரூபேணுவலோகநே) இடைவிடாமலிருக்கும் தாராரூபமான பார்வையாலே. (அவலோகயந் நாஸீத) பார்த்துக்கொண்டிருக்கக்கடவன். (அந்யத் கிஞ்சித் கர்த்து மித்யாதி) 203 "नाश्नन्ति न पिबन्ति एतदेवामृतं दृष्ट्वा तृप्यन्ति" (நாஶ்நந்தி ந பிபந்தி ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி) என்கிறபடியே புறம்புள்ள அந்நபாநாதிகளைப் பேணாதே ஸதாதர்ஶநம் பண்ணியிருப்பானென்றாகவுமாம்.

ஆறம் சூர்ணை அவதாரிகை:—அநந்தரம் கைங்கர்யஸாம்ராஜ்யத்திலே முடிசூடுமரசாய் ஸுகமே வர்த்திப்பானென்கிறது.

வ்யா:—(ததோ பகவதேத்யாதி) * "அவனெவ்விடத்தான் யானார்" என்று ஸ்வரூபத்தை நினைத்து அகலநிற்க, அழகிய கடாக்ஷத்தாலே குளிரப்பார்த்து, "'ஈஶ்வரோஹம்' என்றிருந்தவன் 'தாஸோऽஹம்' என்று ஒதுங்குவதே!" என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலே முறுவல் செய்து, 204 "आशया यदि वा रामः पुनः शब्दापयेदिति" (ஆஶயா யதிவா ராம: புந: ஶப்தாபயேதிதி) என்று ஸுமந்த்ரன் ஆசைப்பட்டாப்போலே, அழகிய திருமிடற்றோசையாலே அருளப்பட்டு. (ஸமஸ்தக்லேஶாபஹம்) ஸாம்ஸாரிகமான ஸமஸ்த க்லேசங்களையும் போக்கக்கடவதாய். (நிரதிஶயஸுகாவஹம்) நிரதிஶயமான ஸுகத்தைப் பண்ணக்கடவதாய். (ஆத்மீயம்) தன்னுடையதாய். (ஸ்ரீமத்) நிரதிஶயபோக்யமான. (பாதாரவிந்த யுகளம்) திருவடித்தாமரைகளை. (ஶிரஸிக்ருதம் த்யாத்வா) தன் தலையிலே வைத்தானாக த்யாநம்பண்ணி. (அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத) ஆநந்தமாகிற அம்ருத ஸமுத்ரத்துக்குள்ளே முழுகின ஸர்வாவயவங்களை உடையனாய்க்கொண்டு ஸுகமேவர்த்திப்பான். ஒன்றாகச் சொல்லிற்றாய்த்து,—ஸ்வரூபாநுரூபமான ப்ரபத்தியையே

* திருவாய் (5-1-7).

अमृतसागरान्तर्निमग्नसर्वावयवः सुखमासीत ॥

॥ इति श्रीवैकुण्ठगद्यं समाप्तम् ॥

அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத.

॥ இதி ஸ்ரீவைகுண்டகத்யம் ஸமாப்தம் ॥

इति श्रीभगवद्रामानुजमुनिभिरनुगृहीतं
गद्यत्रयं
॥ समाप्तम् ॥

---

உபாயமாகக்கொண்டு ப்ராக்ருதமண்டலத்தைவிட்டு அப்ராக்ருதமான தேஶத்திலே சென்று, ஸூரிபரிஷத்ஸேவ்யனான ஸ்ரீவைகுண்டநாதனைக்கிட்டிக் கைங்கர்ய ப்ரார்த்தநாபூர்வகமாகக் கைங்கர்யத்தைப் பெற்று, யாவதாத்மபாவி ஆநந்த நிர்ப்பரனாயிருக்குமென்கிறது.

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த
ஸ்ரீவைகுண்டகத்யவ்யாக்யாநம் முற்றிற்று.

கத்யத்ரய வ்யாக்யாநம் முற்றிற்று

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8-புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத் க்ருஷ்ணஸூரயே நம:



## கத்ய த்ரய வ்யாக்யாந ப்ரமாணத்திரட்டு.

1. தத் த்வமஸி

[(ச்வேதகேதுவே!) நீ அந்த ப்ரஹ்மமாக (ப்ரஹ்மாத்மகனாக) இருக்கிறாய்]

2. ஸத்யம் தபோ தம: ஶமோ தாநம் தர்ம: ப்ரஜநநமக்நயோக்நி ஹோத்ரம் யஜ்ஞோ மாநஸம் ந்யாஸோ த்வாதஶ.

[உண்மையுரைத்தல், (காயக்லேசரூபமான) தவம், (பாஹ்யேந்த்ரிய நிக்ரஹமான) தமம், (அந்தரிந்த்ரியமான மநஸ்ஸை நிக்ரஹிப்பதாகிற) சமம், தானம், தர்மம், ப்ரஜோத்பத்தி, அக்நிகள், அக்நிஹோத்ரம், யஜ்ஞம், (மநஸ்ஸாலே பகவானை மநநம் செய்வதால்) மாநஸம் எனப் படும் பக்தி, ந்யாஸமெனப்படும் ப்ரபத்தி ஆகிய பன்னிரண்டும் கிரம மாக ஒன்றுக்கொன்று உயர்ந்த உபாயங்களாகும்.]

3. தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:

[ஆகையால் ஶரணாகதியாகிற ந்யாஸத்தை இந்த உபாயங்களுள் உயர்ந்ததாக உரைக்கிறார்கள்.]

4. தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச

[தருமமறிந்தவர்களின் ஆசாரமே முக்கியப்ரமாணம்; வேதங்களும் ப்ரமாணம்.]

5. ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம॥

[ஒரு தடவை சரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கு அடியேனா கிறேன்' என்று பிரார்த்திப்பவன் பொருட்டும், எல்லா ப்ராணிகளி டத்தினின்றும் அபயமளிக்கிறேன். இது எனக்கு வ்ரதம்.]

6. ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்தந:।
மாம் நயேத் யதி காகுத்ஸ்தஸ் தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்॥

[ஶத்ருக்களின் பலத்தை ஒழிப்பவரான ஸ்ரீராமபிரான் லங்கையை

---

1. சாந் (6-8-7). 2. தை-நா (49, 50, 51). 3. தை-நா 50. 4. ஆபஸ் தம்பஸூத்ரம். 5. ரா-யு (18-33). 6. ரா-ஸு (39-30).

பாணங்களாலே கலங்கச்செய்து என்னை அழைத்துப் போவாராகில் அப்படிச் செய்வது அவருக்கே தகுந்ததாகும்.]

7. தேவேந்த்ரஸ் த்ரிபுவந மர்த்தமேக பிங்கஸ்
ஸர்வர்த்திம் த்ரிபுவநகாஞ்ச கார்த்தவீர்ய: ।
வைதேஹ: பரமபதம் ப்ரஸாத்ய விஷ்ணும்
ஸம்ப்ராப்தாஸ் ஸகல பலப்ரதோ ஹி விஷ்ணு: ॥

[விஷ்ணுவை ஆராதித்து தேவேந்திரன் மூவுலகங்களையும், குபேரன் செல்வத்தையும், கார்த்தவீர்யன் மூவுலகங்களிலும் பரவிய எல்லாப் பெருமைகளையும், ஜநகமஹாராஜன பரமபதத்தையும் அடைந்தனர்; விஷ்ணு பகவான் வேண்டிற்றெல்லாம் தரும் வள்ளலன்றோ.]

8. போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம் ருச்சதி ॥

[யஜ்ஞங்களையும், தவங்களையும் புஜிப்பவனும், எல்லா உலகங்களுக்கும் மஹேஶ்வரனும், எல்லா ஜீவராசிகளுக்கும் நண்பனுமான என்னை அறிந்து சாந்தியை அடைகிறான்.]

9. தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் ।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு ॥

[(என்னை) த்வேஷிப்பவர்களும், கொடூரமானவர்களும், மனிதர்களுள் கீழ்மையானவர்களும், சுபமற்றவர்களுமான அவர்களை ஸம்ஸாரத்தில், அதிலும் அஸுரயோனிகளில் எப்போதும் தள்ளுகிறேன்.]

10. மத்பக்தம் ஶ்வபசம் வாऽபி நிந்தாம் குர்வந்தி யே நரா: ।
பத்மகோடிஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே ॥

[பூதேவி! சண்டாளனாயிருந்தபோதிலும், என்னுடைய பக்தனை எந்த ஜனங்கள் நிந்தை செய்கிறார்களோ, அவர்களை கோடிக்கணக்கான பத்மகாலங்களானாலும் பொறுக்கமாட்டேன்.]

11&12. மைத்ரேய! பகவச்சப்தஸ் ஸர்வகாரணகாரணே ।
ஸம்பர்த்தேதி ததா பர்த்தா பகாரோऽர்த்தத்வயாந்வித: ॥
நேதா கமயிதா ஸ்ரஷ்டா ககாரார்த்தஸ் ததா முநே ॥
ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரிய: ।

7. ஸ்ரீவிஷ்ணுதர்மம். 8. கீதை (5-29). 9. கீதை (16-19). 10. வராஹ புராணம். 11&12. வி. பு. (6-5-72....78).

ஜ்ஞாநவைராக்யயோஶ்சைவ ஷண்ணாம் பக இதீரணா ॥
வஸந்தி தத்ர பூதாநி பூதாத்மந்யகிலாத்மநி ।
ஸ ச பூதேஷ்வஶேஷேஷு வகாரார்த்தஸ் ததோऽவ்யய: ॥
ஜ்ஞாநஶக்தி பலைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷத: ।
பகவச்சப்தவாச்யாநி விநா ஹேயைர் குணாதிபி: ॥
ஏவமேஷ மஹாஶப்தோ மைத்ரேய! பகவாநிதி ।
பரமப்ரஹ்மபூதஸ்ய வாஸுதேவஸ்ய நாந்யக: ॥
தத்ர பூஜ்யபதார்த்தோக்திபரிபாஷாஸமந்வித: ।
ஶப்தோऽயம் நோபசாரேண த்வந்யத்ர ஹ்யுபசாரத: ॥

[மைத்ரேயரே! 'பகவான்' என்னும் சப்தம் ஸர்வகாரணங்களுக்கும் காரணபூதனான ஸர்வேச்வரன் விஷயத்தில் சொல்லப்படுகிறது. '(ப்ரக்ருதியை) கார்யதசை அடையச்செய்பவன்', 'ஸ்வாமி' என்னும் இரண்டு அர்த்தங்களுடன் கூடியது பகாரம்; முனிவரே! அப்படியே 'ரக்ஷிப்பவன், ஸம்ஹரிப்பவன், ஸ்ருஷ்டிப்பவன்' என்பது ககாரத்தின் அர்த்தம். ஸம்பூர்ணமான ஐச்வர்யம், வீர்யம், யசஸ் செல்வம், ஜ்ஞானம், வைராக்யம் என்னும் இந்த ஆறு குணங்களுக்கும் 'பக' என்னும் பதம் வாசகமாயிருக்கிறது. பூதங்களை சரீரமாகக்கொண்டவனும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருப்பவனுமான அவனிடத்தில் பூதங்கள் வஸிக்கின்றன. அவனும் எல்லா பூதங்களிலும் வஸிக்கிறான். ஆகையால் அழிவற்றவனான பகவான் வகாரத்துக்கு அர்த்தமாகிறான். கீழானவையான முக்குணங்கள் முதலியவற்றுடன் சேராத 'ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ்' என்னும் எல்லா குணங்களும், 'பகவாந்' என்னும் சப்தத்தினால் சொல்லப்படுகின்றன. மைத்ரேயரே! இம்மாதிரியாக பகவான் என்னும் இந்த மஹாசப்தம் பரப்ரஹ்மமான வாஸுதேவனுக்கே உரித்தானது, வேறொருவரையும் குறிக்காது. 'பூஜிக்கத்தக்க பொருளைக் குறிப்பது' என்னும் பரிபாஷையுடன் கூடிய இந்தசப்தம் அவன் விஷயத்தில் ஔபசாரிகமாகச் சொல்லப்படுவதில்லை. மற்ற விஷயங்களில் ஔபசாரிகமாக (அமுக்யமாக) சொல்லப்படுகிறது.]

13. ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: ।
நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம் ॥

[பாற்கடலில் பள்ளிகொண்டவனான இந்த ஸ்ரீமந்நாராயணனே பைந்நாகப்பாயை விட்டு மதுராபுரிக்கு வந்திருக்கிறான்.]

13. ஹரிவம்சம் (113-62)

14. அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணு பத்நீ
[இவ்வுலகிற்கு ஈச்வரியாகவும் விஷ்ணுவுக்குப் பத்நியாகவும் இருப்பவள் பிராட்டி.]

15. நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ।
யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம ॥
[ஜகந்மாதாவாய், விஷ்ணுவுக்குச் செல்வமாயிருப்பவளாய், இறையும் அகலகில்லாதவளான இந்தப் பிராட்டி நித்யையே. ப்ராஹ்மணோத்தமரே! எப்படி பகவான் ஸர்வவ்யாபியாயிருக்கிறானே, அப்படியே இவளும் ஸர்வவ்யாபினியாயிருக்கிறாள்.]

16. த்வம் மாதா ஸர்வலோகாம் தேவதேவோ ஹரி: பிதா।
த்வயைதத் விஷ்ணுநா சாம்ப ஜகத் வ்யாப்தம் சராசரம்॥
[தாயே! எல்லாவுலகங்கட்கும் நீ அன்னை; தேவனாகிய ஹரி தந்தை. உன்னாலும் விஷ்ணுவாலும் இவ்வுலகம் வியாபிக்கப்பட்டுள்ளது.]

17. யுக்தா ராமஸ்ய பவதீ தர்மபத்நீ யஶஸ்விநீ।
ப்ரதிஸந்திஶ மாம் தேவி கமிஷ்யே யத்ர ராகவ:॥
[பிராட்டியே! தேவரீர் ராமபிரானுக்குத் தகுந்தவராகவும், தர்மபத்னியாகவும், கீர்த்திமிக்கவராகவும் இருப்பவர். என்னை ஆஜ்ஞையிடுவீர்; நான் ராமனிருக்குமிடம் செல்வேன்.]

18. ஸ்வவைச்வரூப்யேண ஸதாऽநுபூதயாऽப்யபூர்வ்வத் விஸ்மயமாததாநயா।
குணேந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா தவைவோசிதயா தவ ஸ்ரீயா॥
[தன் விச்வரூப நிலையுடன் எப்போதும் அனுபவிக்கப்பட்டபோதிலும் குணங்களாலும், வடிவழகாலும், அழகிய செயல்களாலும் புதியது போல் ஆச்சர்யத்தைத்தருபவளாய், (பரம், வ்யூஹம், விபவம் முதலிய) எல்லா நிலைகளிலும் உனக்கே தகுந்தவளாய், உனக்குச் செல்வமாயிருப்பவளான பிராட்டி]

19. அர்த்தோ விஷ்ணுரியம் வாணீ நீதிரேஷா நயோ ஹரி:।
போதோ விஷ்ணுரியம் புத்தி: தர்மோऽஸௌ ஸத்க்ரியா த்வியம்॥
[விஷ்ணுவானவர் பொருளாயிருப்பவர்; இப்பிராட்டி (பொருளைச் சொல்லும்) சப்தமாயிருப்பவள். இவள் ந்யாய ஶாஸ்த்ரமாயிருப்

14. யஜு-ஸம் (4-4-12). 15. வி. பு. (1-8-17). 16. வி. பு. (1-9-126)
17. ரா-யு (116-47). 18. ஸ்தோ-ர 38. 19. வி. பு. (1-8-18)

பவள்; ஹரியானவர் ந்யாயமாகவே இருப்பவர். பகவான் ஞானமாயிருப்பவர்; இவள் (அதற்கு உபகரணமான) புத்தியாயிருப்பவள். அவர் தர்மமாயிருப்பவர்; இவள் அதை ஸாதிக்கும் நற்கருமமாயிருப்பவள்.]

20. அணோரணீயாந் மஹதோ மஹீயாந்
ஆத்மா குஹாயாம் நிஹிதோऽஸ்ய ஜந்தோ:।
தமக்ரதும் பச்யதி வீதசோகோ
தாது: ப்ரஸாதாந் மஹிமாநமீசம்॥

[அணுவைக் காட்டிலும் அணுவாய், மஹத்தைக் காட்டிலும் மஹத்தான பரமாத்மா இந்த ஜீவனுடைய ஹ்ருதயகுஹையிலிருக்கிறான். கர்மபந்தமற்றவனாய், மஹிமசாலியான அப்பரமாத்மாவை அவனருளாலே கண்டு சோகம் நீங்கப்பெறுகிறான் ஜீவன்.]

21. இயம் ஸா தயிதா பார்யா ராக்ஷஸீவசமாகதா।
ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய பர்த்ருஸ்நேஹபலாத்க்ருதா॥
அசிந்த்தயித்வா து:க்காநி ப்ரவிஷ்டா நிர்ஜநம் வநம்॥

[ராமபிரானுடைய பிரிய பத்தினியும், (அவர் விபூதியிலும் விஞ்சியுள்ள) லீலோபகரணபோகோபகரணங்கள் எல்லாவற்றையும் விட்டு, அவரிடம் அன்பாலே உந்தப்பட்டவளாய், துக்கங்களைக் கணிசியாமல் நிர்மாநுஷமான காட்டை அடைந்தவளுமான இவளன்றோ ராக்ஷஸிகளுக்கு வசப்பட்டு நிற்கிறாள்.]

22. யோ யோ ஜகதி பும்பாவ: ஸ விஷ்ணுரிதி நிச்சய:।
யோ யஸ்து நாரீபாவ: ஸ்யாத் தத்ர லக்ஷ்மீர் வ்யவஸ்திதா॥
ப்ரக்ருதே: புருஷாச்சாந்யஸ் த்ருதீயோ நைவவித்யதே।
அத கிம் பஹுநோக்தேந நரநாரீமயோ ஹரி:॥

[உலகில் ஆண்மை காணப்படுமிடமெல்லாம் ஹரியிருக்கிறான் என்பது நிச்சயம். பெண்மையுள்ள விடமெல்லாம் பிராட்டியிருக்கிறாள். ப்ரக்ருதிக்கு அபிமானியாகிற பிராட்டியையும், புருஷாபிமானியான பகவானையும் தவிர மூன்றாவதொன்றுமில்லை. பல சொல்லியென்? ஸ்த்ரீபுருஷர்கள் எல்லாமாயிருப்பவன் ஸ்ரீமந்நாராயணனே.]

23. ஹேலாயாமகிலம் சராசரமிதம் போகே விபூதி: பரா
தந்யாஸ்தே பரிசாரகர்மணி ஸதா பச்யந்தி யே ஸூரய:।

---

20. வி. பு. (1-8-35) 21. ரா-ஸு (16-19) 22. ஸநத்குமார ஸம்ஹிதை. 23. ஸ்ரீகுண-22.

ஸ்ரீரங்கேச்வரதேவி கேவலக்ருபாநிர்வாஹ்யவர்க்கே வயம்
ஶேஷித்வே பரம:புமாந் பரிகரா ஹ்யேதே தவ ஸ்பாரணே॥

[ஸ்ரீரங்கநாயகியே! அசைவதும் அசையாததுமடங்கிய இவ்வுலகெல்லாம் உன் விளையாட்டின்பொருட்டாகிறது. மேலான நித்யவிபூதி உன் போகத்திற்காக இருக்கிறது. பாக்யசாலிகளாய், எப்போதும் உங்களைக் கண்டுகொண்டிருக்கும் நித்யஸூரிகள் உனக்குக் கைங்கரியம் செய்வதற்காக ஏற்பட்டவர்கள். உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலே ரக்ஷிக்கப்படுமவர்களின் கோஷ்டியிலே நாங்களும் நிற்கிறோம். பரமபுருஷன் உனக்கு ஸ்வாமியாயிருக்கிறான். இவையெல்லாம் உன் பெருமையை வெளிப்படுத்தும் பரிகரங்களாயுள்ளன.]

24. மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்தாநம் பரீப்ஸதா।
வதம் சாऽநிச்சதா கோரம் த்வயாऽஸௌ புருஷர்ஷப:॥

[(ராவண!) நீ உன்னுடைய குடியிருப்பை விரும்பினாயாகில், கோரமான வதத்தை விரும்பாமலிருந்தாயாகில், இந்தப் புருஷ ச்ரேஷ்டரான ஸ்ரீராமபிரானை நண்பனாகக்கொள்வது தகுந்தது.]

25. விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞச் ஶரணாகதவத்ஸல:।
தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி॥

[(ராவணா!) ஸ்ரீராமபிரான் தர்மத்தை அறிந்தவராகவும், சரணமடைந்தவரிடம் வாத்ஸல்யமுடையவராகவும் பிரஸித்தமானவர். நீ உயிர் வாழ விரும்பினாயாகில் அவருடன் உனக்கு நட்பு உண்டாகட்டும்.]

26. ததஸ் ஸா ஹ்ரீமதீ பாலா பர்த்துர் விஜயஹர்ஷிதா।
அவோசத் யதி தத் தத்யம் பவேயம் ஶரணம் ஹி வ:॥

[லஜ்ஜை நிரம்பியவளாய், கணவனின் ஜயத்தைக் கேட்டு ஆனந்தமடைந்தவளான அப்பிராட்டி அக்கனவு உண்மையானால் உங்களுக்கு நான் அடைக்கலமாகிறேன் என்று உரைத்தாள்.]

27. ராஜஸம்ச்ரயவச்யாநாம் குர்வதீநாம் பராஜ்ஞயா।
விதேயாநாஞ்ச தாஸீநாம் க:குப்யேத் வாநரோத்தம॥

[வானரர் தலைவ! ராஜாவை ஆச்ரயித்தும், அவனுக்கு வசப்பட்டும், அவனுடைய ஆணையினால் காரியம் செய்பவராயும், அவனுக்கு விதேய

24. ரா-ஸு (21-19) 25. ரா-ஸு (21-20) 26. ரா-ஸு (58-90)
27. ரா-யு (116-38)

ராயும், தாவிகளாயுமுள்ள இந்த ராக்ஷஸிகளிடம் எவன் கோபம் கொள்வான்?]

28. த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரச்சாக்ஷர ஏவ ச।
க்ஷரஸ் ஸர்வாணி பூதானி கூடஸ்தோऽக்ஷர உச்யதே॥
உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:।
யோ லோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர:॥
யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராதபி சோத்தம:।
அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:॥

[க்ஷரன் என்றும், அக்ஷரன் எனறும் லோகத்தில் புருஷர்கள் இரு விதமானவர்கள்; எல்லா பூதங்களும் க்ஷரனுகும்; கூடஸ்தனுன முக்தாத்மா அக்ஷரனெனப்படுகிருன். எவனொருவன் மூவுலகங்களிலும் நுழைந்து (அவற்றை) தரிப்பவனுகவும், குறைவற்றவனுகவும், நியமிப்பவனுகவும், பரமாத்மாவென்று சொல்லப்படுபவனுகவும் விளங்குகிருனே அந்தப் புருஷோத்தமன் (முன் சொல்லப்பட்ட புருஷர்களைக்காட்டிலும்) வேறுபட்டவன். நான் ஞானத்தில் ஏற்றத்தாழ்வுகளுள்ள க்ஷரபுருஷனை அதிக்ரமித்திருப்பதாலும், ஞானத்தில் ஏற்றத்தாழ்வுகளற்ற முக்தபுருஷனைக்காட்டிலும் மேலானவனுயிருப்பதாலும், ச்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமனென்று பிரஸித்தி பெற்றிருக்கிறேன்.]

29. சதஹ்ரதாநாம் லோலத்வம் சஸ்த்ராணாம் தீக்ஷ்ணதாம் ததா।
கருடாநிலயோ: சைக்ர்யம் அநுகச்சந்தி யோஷித:॥
இயம் து பவதோ பார்யா தோஷைரேதைர் விவர்ஜிதா।
ச்லாக்யா ச வ்யபதேச்யா ச யதா தேவீ ஹ்யருந்ததீ॥

[ஸ்த்ரீகள் மின்னலைப்போல் நிலையற்றவராயும், ஆயுதங்களைப்போல் கொடியவர்களாயும், கருடனையும் காற்றையும்போல் வேகமுள்ளவராயும் உள்ளனர். ராம! உன் பத்தினியான ஸீதையோவெனில் இந்த தோஷங்களற்றவள். அருந்ததி தேவியைப்போல் மிகவும் கொண்டாடத்தக்கவள்; புகழத்தக்கவள்.]

30. க்ரோதமாஹாரயத் தீவ்ரம் வதார்த்தம் ஸர்வரக்ஷஸாம்।
துஷ்ப்ரேக்ஷ: ஸோऽபவத் க்ருத்தோ யுகாந்தாக்நிரிவ ஜ்வலந்॥

[(ராமபிரான்) எல்லா ராக்ஷஸர்களையும் கொல்வதற்காகக் கடுங் கோபத்தை வரவழைத்துக்கொண்டார். (அப்படிக்) கோபங்கொண்ட

28. ரா-யு (116-44) 29. ரா-ஆ (13-7) 30. ரா-ஆ (24-34)

அவர் ப்ரளயாக்னிபோல் ஜ்வலிப்பவராய், காணவொண்ணுதவரா யிருந்தார்.]

31. ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:

[(பரமாத்மா) எல்லா கந்தங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையுமுடையவன்.]

32. ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம்।
தத்தாऽபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஶஸே॥

[(உன்னுடைய) திவ்யாத்மஸ்வரூபமானது உனக்காக இராது; (ஸ்வதந்த்ரமான அது ஆச்ரிதர்களுக்காகப் பரதந்த்ரமாகவும் ஆகும் என்று தாத்பர்யம்) திவ்யமங்களவிக்ரஹமும் உனக்காயிராது; திவ்யாயுதங்களும் உனக்காயிருக்கவில்லை; இருப்பிடமான வைகுண்டம் முதலியவைகளும் உனக்காயிருக்கவில்லை; (இவையெல்லாம் உன் அடியார்களுக்காயிருக்கும் என்று பொருள்) பக்தர்களுடைய உடைமையான நீ, இப்படி ஆச்ரிதபரதந்த்ரமான ஸ்வரூபரூபகுண விபூதிகளை உடையனுயிருந்தபோதிலும், புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸர்வாதிகனுயிருக்கும் தன்மையுடன் விளங்குகிருய்.]

33. க்ருதாபிஷேகா மஹிஷீ போகிந்யோऽந்யா ந்ருபஸ்த்ரிய:

[அரசனுடன் பட்டாபிஷேகம் செய்யப்பெற்றவள் மஹிஷியெனப் படுவாள்; மற்ற ராஜபத்னிகள் போகினி(போகபத்நி)களாவர்.]

34. ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி:।
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் கத:॥
ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம்।
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்॥

[அந்தக் காகாஸுரன், தந்தையினுலும், (தாயினுலும்), மஹர்ஷிகளுடன் கூடிய தேவர்களாலும் கைவிடப்பட்டவனுய், மூன்று உலகங்களையும் சுற்றித்திரிந்து அந்த ராமனையே சரணமடைந்தான். சரணமடைந்தவனும், பூமியில் விழுந்தவனுமான அவனை, கொல்லத் தகுந்தவனுயிருந்தபோதிலும், சரணமடையத்தகுந்தவனுன ஸ்ரீராம பிரான் (தன்) அருளாலே காப்பாற்றினுன்.]

---

31. சாந் (3-14-2). 32. ஜிதந்தே (1-5) 33. அமர (2-6-5)
34. ரா-ஸு (38-34&35)

35. சந்த்ராம் ப்ரபாஸாம் யஶஸா ஜ்வலந்தீம்
ஶ்ரியம் லோகே தேவஜுஷ்டாமுதாராம் ।
தாம் பத்மநேமிம் ஶரணமஹம் ப்ரபத்யே
அலக்ஷ்மீர் மே நஶ்யதாம் த்வாம் வ்ருணே ॥

[ஆநந்தரூபையும், மிகவும் விளங்குமவளும், கீர்த்தியினாலே பிரகாசிப்பவளும், எம்பெருமானுடன் (எப்போதும்) கூடியிருந்து அவனை ஸேவிப்பவளும், வண்மை மிகுந்தவளும், பத்மத்திலிருப்பவளுமான அந்த ஸ்ரீதேவியை நான் சரணமடைகிறேன். என்னுடைய அலக்ஷ்மியானது நசிக்கட்டும். (அதற்காக) உன்னை சரணமாக வரிக்கிறேன்.]

36. நிவாஸஶய்யாஸநபாதுகாம்ஶுகோபதாநவர்ஷாதபவாரணாதிபி: ।
ஶரீரபேதைஸ் தவ ஶேஷதாம் கதைர் யதோசிதம் ஶேஷ இதீரிதே ஜனை: ॥

[(பகவானுக்கு) எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாகவும், கண் வளர்ந்தருளுகிற படுக்கையாகவும், ஸிம்ஹாஸநமாகவும், பாதுகையாகவும், திருப்பரியட்டமாகவும், அணையாகவும், மழைக்கும், வெயிலுக்கும் குடையாகவும், மற்றும் பலபடியாகவும் ஆகின்றவையாய் அந்தந்த காலத்திற்குத் தக்கபடி உனக்கு அடிமைப்பட்டவையான பல ஶரீரங்களாலே ஶேஷன் என்று எல்லா ஜனங்களாலும் சொல்லப் படுமவனுமான திருவனந்தாழ்வானுடைய திருமேனியில் எழுந்தருளியிருக்கிறவன்.]

37. நிர்க்குணம்

[ப்ரஹ்மமானது (தாழ்ந்த) குணங்களற்றது.]

38. ஸமஸ்தகல்யாணகுணாத்மகோऽஸௌ
ஸ்வஶக்திலேஶோத்த்ருதபூதஸர்க்க: ।
இச்சாக்ருஹீதாபிமதோருதேஹஸ்
ஸம்ஸாதிதாऽஶேஷஜகத்திதோऽஸௌ ॥

[இந்த பகவான் ஸகலகல்யாணகுணங்களையும் இயற்கையாகவே உடையவன்; தன்னுடைய சக்தியில் ஒரு சிறிய பகுதியினாலேயே தரிக்கப்பட்ட பூதங்களை உடையவன்; இச்சையினாலேயே எடுக்கப் பட்டவையும், இஷ்டமானவையுமான பல தேஹங்களை உடையவன்; இவன் எல்லா ஜகத்துக்கும் நன்மையைச் செய்பவன்.]

35. ஸ்ரீஸூக்தம்-5. 36. ஸ்தோ-ர 40. 37. ஆத்மோபநிஷத் 38. வி.பு. (6-5-84)

39. அவிகாராய ஶுத்தாய நித்யாய பரமாத்மநே।
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே॥

[(அசேதனத்தைப்போலல்லாமல்) விகாரம் அற்றவனாகவும், (ஸம்ஸாரிசேதனனைப்போலல்லாமல்) அசுத்தி இல்லாதவனாகவும், (முக்தாத்மாவைப்போலல்லாமல்) நித்ய சுத்தனாகவும், (நித்யஸூரிகளைப்போலல்லாமல்) தனக்குமேல் ஒருவனற்றவனாகவும், எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் திவ்யமங்களவிக்ரஹத்தை உடையவனாகவும், ஸர்வவ்யாபியாகவும், எல்லாவற்றையும் ஜயிப்பவனாகவுமுள்ள பகவானுக்கு (நமஸ்காரம்).]

40. யுவாऽகுமார:

[யௌவனத்தையுடையவனாகவும், சிறிது பாலனாகவுமிருப்பவன்.]

41. யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:।
தம் ப்ரணம்ய ஹரிம் ஶாஸ்த்ரம் ந்யாயதத்த்வம் ப்ரசக்ஷ்மஹே॥

[எவனொருவன், எப்போதும் எல்லா வஸ்துக்களையும் ஒரே சமயத்தில் தானாகவே நேரில் அறிகிறானோ, அந்த ஹரியை வணங்கி ந்யாய தத்வம் என்னும் கிரந்தத்தைச் சொல்லுகிறோம்.]

42. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி:।
தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி॥

[அந்தப் பரமபுருஷனிடத்தில் ஸூர்யனும் பிரகாசிக்கிறதில்லை; சந்த்ரநக்ஷத்திரங்களும் பிரகாசிக்கிறதில்லை; மின்னல்களும் பிரகாசிக்கிறதில்லை; இந்த அக்னியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? பிரகாசிக்கும்படியான அவனைப் பின்பற்றியே எல்லாம் பிரகாசிக்கின்றன; அவனுடைய ஒளியினாலே இவையெல்லாம் ஒளிவிடுகின்றன.]

43. மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷ
ஸ்வபாவத்வம் ஶீலம்

[ஶீலமென்பது, பெரியவன் மந்தர்களோடு நெருங்கிச் சேரும் தன்மை.]

44. அப்ரவீத் த்ரிதஶஶ்ரேஷ்டாந் ராமோ தர்மப்ருதாம் வர:।
ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தஶரதாத்மஜம்॥

39. வி-பு (1-2-1) 40. ருக்வே-ஆ (2-8-25) 41. (நாதமுனிகளருளிய) ந்யாயதத்வம். 42. கடோப (2-5) 44. ரா-யு(120-11)

["நான் என்னை மனுஷ்யனாகவும் தசரதன் பிள்ளை ராமனாகவும் நினைக்கிறேன்" என்று தர்மவான்களில் மேலான ராமன் தேவஶ்ரேஷ்டர்களைக் குறித்துச் சொன்னான்.]

45. கோபாலத்வம் ஜுகுப்ஸிதம்

[வெறுக்கத்தக்கதான இடைச்சாதியை பகவான் மேற்கொண்டான்.]

46. அநித்ரஸ் ஸததம் ராம: ஸுப்தோऽபி ச நரோத்தம:।
ஸீதேதி மதுராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபுத்யதே ॥

[(ஸீதையைப் பிரிந்த) ராமன் எப்போதும் தூக்கமற்றவராகவே இருக்கிறார்; நரச்ரேஷ்டரான அவர் தூங்கினாலும் 'ஸீதே' என்னும் அழகிய சொல்லை உச்சரித்துக் கொண்டே விழித்தெழுகிறார்.]

47. குஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா

[ராமபிரான் குஹனோடும், லக்ஷ்மணனோடும், சீதையோடும் கூடியவரானார்.]

48. ஶபர்யா பூஜித: ஸம்யக் ராமோ தஶரதாத்மஜ:

[தாசரதியான ராமபிரான் சபரியாலே நன்கு பூஜிக்கப்பட்டான்.]

49. ஸ்வார்த்த நிரபேக்ஷபரது:க்காஸஹிஷ்ணுத்வம்

[தனக்குப் பலனை எதிர்பாராமல் பிறர் துன்பம் பொறுமலிருத்தல் தயையாகும்.]

50. ததாவிதம் த்விஜம் த்ருஷ்ட்வா நிஷாதேந நிபாதிதம்।
ருஷேர் தர்மாத்மநஸ் தஸ்ய காருண்யம் ஸமபத்யத ॥

[வேடனால் அடிபட்ட அப்பறவையைப் பார்த்தவுடன் தர்மாத்மாவான அந்த வால்மீகி மஹர்ஷிக்குக் காருண்யமுண்டாயிற்று.]

51. ஏஹ்யேஹி புல்லாம்புஜ பத்ரநேத்ர
நமோऽஸ்து தே தேவவராऽப்ரமேய।
ப்ரஸஹ்ய மாம் பாதய லோகநாத
ரதோத்தமாத் பூதஶரண்ய ஸங்க்யே ॥

[மலர்ந்த தாமரையிதழ்போன்ற திருக்கண்களையுடையவனே! வாராய்! வாராய்! ஸர்வபூதங்களுக்கும் ஶரண்யனே! யுத்தத்தில் என்னை இந்தச் சிறந்த ரதத்திலிருந்து பலாத்கரித்து வீழ்த்துவாய். லோகநாதனே! தேவச்ரேஷ்டனே! அளத்தற்கரியாய்! உனக்கு நமஸ்காரம்.]

---

45. 46. ரா-ஸு (36-44). 47. ரா-பா (2-30).
48. ரா-பா (2-58). 50. ரா-பா (2-13). 51. பார-பீஷ்மபர்வம். (59-98)

52. அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா ।
க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே பாரதம் புரம் ॥
[ஸூர்யமற்றவிடத்தில் ஸூர்யன்உதித்தாற்போலவும், காற்றில்லா இடத்தில் காற்றடித்தாற்போலவும் க்ருஷ்ணன வந்ததும் பாரதராஜதாநி ஆநந்தித்தது.]

53. ய ஆத்மதா பலதா:
[எந்தப் பரமபுருஷன் தன்னையும் கொடுத்துத் தன்னை அனுபவிக்கத் தக்க பலத்தையும் கொடுக்கிறானோ.]

54. அத மத்யமகக்ஷ்யாயாம் ஸமாகச்சத் ஸுஹ்ருஜ்ஜனை: ।
ஸ ஸர்வாநர்த்திநோ த்ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்ய ச ॥
[அந்த ஸ்ரீராமன் யாசிப்பவர்களைக் கண்டு, (அவர்களை) எதிர்கொண்டு, ஆநந்தப்படுத்திப் பிறகு நடுக்கட்டில் நண்பர்களுடன் சேர்ந்தார்.]

55. உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்
[இவர்கள் எல்லாரும் உதாரமானவர்களே; ஜ்ஞாநியோ எனக்கே ஆத்மா (தாரகன்) என்று என் ஸித்தாந்தம்.]

56. உத்ஸ்மயித்வா மஹாபாஹு: ப்ரேக்ஷ்ய சாஸ்தி மஹாபல: ।
பாதாங்குஷ்டேந சிக்ஷேப ஸம்பூர்ணம் தசயோஜநம் ॥
[மஹாபலரும் நீடந்தோளருமான ராமபிரான் சிரித்துக்கொண்டு அந்த துந்துபியின் எலும்பைப் பார்த்து, பத்து யோஜனை தூரம் முழுவதும் தன் கால் கட்டைவிரலாலே தள்ளினார்.]

57. மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம் ॥
[நண்பனுடைய பாவத்தோடு நெருங்கின இவ்விபீஷணனை ஒருபொழுதும் கைவிடமாட்டேன். அவனிடம் தோஷமிருந்தாலும் இருக்கட்டுமே. நல்லோர்களுக்கு இவனை ஸ்வீகரிப்பது நிந்திக்கத் தக்கதல்ல.]

58. அபியாதா ப்ரஹர்த்தா ச ஸேநாநயவிசாரத:
[ராமபிரான் (எதிரியிருக்குமிடம்) சென்று சண்டை செய்பவர்; ஸைந்ய நீதிகளை நன்கறிந்தவர்.]

---

53. யஜு-காட (7-5-36). 54. ரா-அ (16-27). 55. கீதை (7-18).
56. ரா-பா (1-65). 57. ரா-யு (18-3). 58. ரா-அ (1-29).

59. சிந்நம் பிந்நம் ஶரைர் தக்தம் ப்ரபக்நம் ஶஸ்த்ர பீடிதம்।
பலம் ராமேண தத்ருஶுர் ந ராமம் ஶீக்ரகாரிணம்॥

[ராக்ஷஸஸேனையானது அப்புகளால் வெட்டப்பட்டும் பிளக்கப்பட்டும், எரிக்கப்பட்டும் துன்புறுத்தப்பட்டும் கிடப்பதை அனைவரும் கண்டனர். மிகவேகமாகக் காரியம் செய்யும் ராமனைக் கண்டாரில்லை.]

60. அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்।
க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ॥

[லங்கையில் ராக்ஷஸச்ரேஷ்டனான விபீஷணனை அபிஷேகம் செய்து தன் காரியத்தைச் செய்துமுடித்தவனான ராமன், கவலை நீங்கப்பெற்று ஸந்தோஷித்தான்.]

61. கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்।
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி॥

[த்ரௌபதியானவள் வெகுதூரத்திலிருந்த என்னைக்குறித்து 'கோவிந்தா!' என்று கூக்குரலிட்டது (வட்டியினால்) வ்ருத்தியடைந்த கடனைப்போல் என்னுடைய ஹ்ருதயத்திலிருந்து அகலுகிறதில்லை.]

62. தம் து மே ப்ராதரம் த்ரஷ்டும் பரதம் த்வரதே மந:।
மாம் நிவர்த்தயிதும் யோऽஸௌ சித்ரகூடமுபாகத:॥
ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா॥

[என்னைத் திருப்பியழைத்துச்செல்ல எவனொருவன் சித்திரக்கூடத்திற்கு வந்தானோ அந்த என்னுடைய தம்பியாகிய பரதனைப் பார்க்க என் மனம் விரைகிறது. தலையாலே யாசித்த அவனுடைய வார்த்தை என்னால் செய்யப்படவில்லை.]

63. வர்ஷாயுதைர் யஸ்ய குணா ந ஶக்யா
வக்தும் ஸமேதைரபி ஸர்வலோகை:।
மஹாத்மந: ஶங்கசக்ராஸிபாணேர்
விஷ்ணோர் ஜிஷ்ணோர் வஸுதேவாத்மஜஸ்ய॥

[மஹாபுருஷனும், சங்கசக்ரங்கள் வாள் ஆகியவற்றைக் கையில் ஏந்தியிருப்பவனும், ஸர்வவ்யாபியும், ஜயஶீலனும், வஸுதேவபுத்ரனுமான எவனுடைய குணங்கள் பதினாயிரம் வருஷங்களிலும் எல்லா உலகங்களும் கூடியும் பேசமுடியாதவையோ.]

64. சதுர்முகாயுர் யதி கோடிவக்த்ரோ பவேந்நர: க்வாபி விஶுத்தசேதா:।
ஸ தே குணாநாமயுதைகதேஶம் வதேந்ந வா தேவவர ப்ரஸீத॥

---

59. ரா-யு (94-22) 60. ரா-பா (1-85) 61. பார-உத்யோ (47-22)
62. ரா-யு (124-19) 63. பார-பீஷ்மபர்வம் கர்ணவாக்யம். 64. வராஹ (73-94)

[பல ப்ரஹ்மாக்களின் ஆயுளை உடையவனுய், கோடிக்கணக்கான முகங்களை உடையவனுய், மிகவும் சுத்தமான மனத்தையுடையவனுன ஒரு மனிதன் இருப்பானேயாகில், அவன் உன்னுடைய குணங்களில் பதினுயிரத்தில் ஒரு பங்கைச் சொல்லுவானே மாட்டானே அறியோம். தேவர்களில் சிறந்தவனே! அருள் புரியவேண்டும்.]

65. ஸ்ரக்வஸ்த்ராபரணைர் யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை:।
சிந்மயை: ஸ்வப்ரகாஶைஶ்ச அந்யோந்யருசிரஞ்ஜகை:॥

[தனக்குத் தகுந்தவையும், ஒப்பற்றவையும், ஞானமயமாயிருப்பவையும், ஸ்வயம் ப்ரகாசமானவையும், ஒன்றுக்கொன்று (சேர்த்தியினுலுண்டான) காந்தியினுல் அழகாயிருப்பவையுமான மாலைகளோடும், வஸ்த்ரங்களோடும், ஆபரணங்களோடும் கூடியிருப்பது பரப்ரஹ்மம்.]

66. பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண।
த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம॥

[லக்ஷ்மணு! நினைவறிந்து காரியம் செய்பவனும், (தசரத சக்ரவர்த்தி எனக்குச்)செய்யுமவற்றை அறிபவனும், (ஶேஷத்வ) தருமமறிந்தவனுமான உன்னைப் பிள்ளையாகப் பெற்ற தந்தை எனக்கு இறக்கவில்லை.]

67. பவந்தமேவாநுசரந் நிரந்தரம் ப்ரஶாந்தநிஶ்ஶேஷமநோரதாந்தர:।
கதாऽஹமைகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித:॥

[உன்னையே இடைவிடாமல் அனுஸரித்துக்கொண்டு மற்ற எல்லா ஆசைகளும் வாஸனையுமில்லாமல் நீங்கப்பெற்றவனுய், ஒருபடிப்பட்டதாய் நித்யமான கைங்கர்யத்தை உடையவனுய், ப்ரயோஜனத்துடன் கூடிய வாழ்வை உடையவனுய் என்று நான் (உன்னையே) மிகவும் உகப்பிக்கப்போகிறேன்?]

68. தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி ஶதம் மாலா ஹஸ்தா:
ஶதமஞ்ஜநஹஸ்தா: ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம் வாஸோஹஸ்தா:
ஶதம் பணஹஸ்தாஸ் தம் ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி॥

[அந்த முக்த புருஷனிடம் ஐந்நூறு மதிமுக மடந்தையர் விரைகின்றனர்; நூற்றுவர் மாலையைக் கைக்கொண்டும், நூற்றுவர் மையைக் கைக்கொண்டும், நூற்றுவர் அஞ்ஜநப்பொடியைக் கைக்கொண்டும், நூற்றுவர் ஆடைகளைக் கைக்கொண்டும், நூற்றுவர் ஆபரணங்களைக் கைக்கொண்டும் அவனை ப்ரஹ்மத்தின் அலங்காரத்தினுல் அலங்கரிக்கின்றனர்.]

---

65. பௌஷ்கரஸம்ஹிதை. 66. ரா-ஆ (15-28) 67. ஸ்தோ-ர 46.
68. கௌஷிதகீ (1-34)

69. முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்வேதத்வீபவாஸிநாம் ।
நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந: ॥
[ச்வேதத்வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும்; அதாவது:—எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டிருப்பார்கள்; (அதனால்) ஆநந்திப்பார்கள்; வாயால் 'நம:' என்றே சொல்லும் தன்மையுடையவர்களாயிருப்பார்கள்.]

70. ஏதத் ஸாம காயந்நாஸ்தே। ஹா வுஹா வுஹா வு।
அஹமந்நமஹமந்நமஹமந்நம்। அஹமந்நாதோऽஹமந்நாதோऽஹமந்நாத:।
[முக்தாத்மா (பரமாத்மாவையடைந்து) இந்த ஸாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்,—ஹா வுஹா வுஹா வு; நான் (பரமாத்மாவுக்கு) அன்னமாயிருப்பவன்; அந்நமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன். நான் (பரமாத்மாவின் ப்ரீதியாகிற) அன்னத்தை புஜிப்பவன்; அன்னத்தை புஜிப்பவன்; அன்னத்தை புஜிப்பவன்.]

71. காரணம் து த்யேய:
[காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.]

72. யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை।
தம் ஹி தேவமாத்மபுத்திப்ரஸாதம் முமுக்ஷுர் வை ஶரணமஹம் ப்ரபத்யே ॥
[எவன் பிரமனை முன் படைத்தானோ, எவன் வேதங்களையும் அவனுக்கு உபதேசித்தானோ, அப்படிப்பட்ட தேவனும், தன் விஷயமான ஞானத்தை ப்ரகாசிப்பிப்பவனுமான பரமபுருஷனை, மோக்ஷமடைய விரும்பும் நான் சரணமடைகிறேன்.]

73. அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம்।
ததேகோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாகதி: ॥
[தன்னுடைய இஷ்டம் வேறொன்றாலுமாகாதபோது, மஹாவிச்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு, அவனொருவனையே உபாயமாக இருக்க வேண்டுமென்று யாசிப்பது ப்ரபத்தி; அதுவே ஶரணாகதி.]

74. காம்ய: ஸ்ப்ருஹா ஸ்மர: காம:
[காமஶப்தம், காமிக்கப்படும் வஸ்துவையும், ஆசையையும், மன்மதனையும் குறிக்கும்.]

---

69. பார-சாந்தி (344-45) 70. தை-ப்ருகு (10-6) 71. அதர்வசிகை.
72. ச்வே(6-18) 73. பரதமுனி; விஷ்வக்-ஸம். 74. வைஜயந்தீ-த்வயகூர (1-17)

75. ஶுகோ முக்தோ வாமதேவோ விமுக்த:
[சுகர் முக்தரானார்; வாமதேவர் முக்தரானார்.]

76. வேதா மே பரமம் சக்ஷு: வேதா மே பரமம் தப: ।
வேதா மே பரமம் தாம வேதா மே ப்ரஹ்ம சோத்தமம் ॥
[வேதங்களே எனக்கு உயர்ந்த கண்; வேதங்களே எனக்கு மேலான தவம்; மறைகளே எனக்கு மேலான தேஜஸ்; வேதங்களே எனக்கு உயர்ந்த ப்ரஹ்மம்.]

77. ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோऽஸ்ருஜத ।
[அந்தப் பரப்ரஹ்மம் '(நானே) பலவாக ஆகக்கடவேன' என்று ஸங்கல்பித்தது; அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டி செய்தது.]

78. வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:।
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ ॥
[மேலான உலகமான வைகுண்டத்தில், ஜகத்பதியும், நினைக்கவொண்ணாத ஸ்வரூபத்தை உடையவருமான விஷ்ணு, பக்தர்களுடனும், பாகவதர்களுடனும் கூடியவராய், ஸ்ரீதேவியுடன கூட எழுந்தருளியிருக்கிறார்.]

79. ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா ।
விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவண: ஸ்வயம் ॥
[வானரர்களுள் சிறந்தவனான ஸுக்ரீவனே! இவனை அழைத்துவா; விபீஷணனாயிருந்தாலும், ராவணன் தானேயாயிருந்தாலும், இவனுக்கு என்னால் அபயமளிக்கப்பட்டது.]

80. நாஹம் தேவோ ந கந்தர்வோ ந யக்ஷோ ந ச தாநவ: ।
அஹம் வோ பாந்தவோ ஜாதோ நைதச்சிந்த்யமிதோऽந்யதா ॥
[நான் தேவனல்லன்; கந்தருவனல்லன்; யக்ஷனல்லன்; அஸுரனுமல்லன்; நான் உங்களுக்கு உறவினனாகப் பிறந்திருக்கிறேன். என் பிறப்பு இதைத்தவிர வேறு விதமாக (உங்களால்) நினைக்கத்தக்கதல்ல.]

81. ஸகே! ராகவ! தர்மஜ்ஞ! ஶத்ரூணாமபி வத்ஸல!।
அப்யநுஜ்ஞாதுமிச்சாமி கமிஷ்யாமி யதாகதம் ॥
[நண்பரே! ரகுகுலத்தில் உதித்தவரே! தர்மத்தை அறிந்தவரே! சத்துருக்களுக்கும் வாத்ஸல்யத்தை உடையவரே! விடைபெற்றுக் கொள்ள விரும்புகிறேன். வந்தவாறே போய்விடுகிறேன்.]

76. பார-ஶாந்தி (357-31) 77. சாந்-உப (6-2-3) 78. சிவபுராணம் 79. ரா-யு (18-34) 80. வி-பு(5-13-12) க்ருஷ்ணவாக்யம். 81. ரா-யு(50-56)

82. ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்
[வடிவழகு, வண்மை, குணங்கள் முதலியவற்றால் ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் அபஹரிக்கும் ராமனை]

83. ந தர்மநிஷ்டோऽஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே।
அகிஞ்சநோऽநந்யகதி: ஶரண்ய! த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே॥
[ஶரணமடையத்தகுந்த எம்பிரானே! (அடியேன்) கர்மயோகத்தில் நிலைநின்றவன் அல்லேன்; உன் திருவடித்தாமரைகளில் பக்தியை உடையவன் அல்லேன்; ஒரு உபாயமுமற்றவனும் வேறு புகலற்றவனுமான அடியேன் உன் திருவடித்தாமரைகளை உபாயமாக நிச்சயிக்கிறேன்.]

84. ரகுவர! யதபூஸ்த்வம் தாத்ருஶோ வாயஸஸ்ய
ப்ரணத இதி தயாளுர் யச்ச சைத்யஸ்ய க்ருஷ்ண!।
ப்ரதிபவமபராத்துர் முக்த! ஸாயுஜ்யதோபூ:
வத கிமபதமாகஸ்தஸ்ய தேऽஸ்தி க்ஷமாயா:॥
[ரகுகுலத்தில் மேலானவனான ராமனாக அவதரித்தவனே! அப்படிப்பட்ட (பெரும் பாவம் செய்த) காகாசுரன் விஷயத்தில், ஶரணாகதன் என்று நினைத்து அருளினையன்றோ. தோஷங்களை அறியாத க்ருஷ்ணனே! ஜந்மந்தோறும் அபராதம் செய்த சேதிகுலத்தவனான சிசுபாலனுக்கு மோக்ஷம் கொடுத்தருளினையல்லவா. அப்படிப்பட்ட உன்னுடைய பொறுமைக்குப் பாத்திரமல்லாத பாபம் என்ன இருக்கிறது? அருளிச்செய்யவேணும்.]

85. 34-வது ப்ரமாணத்தைக் காண்க.

86. 55-வது ப்ரமாணத்தைக் காண்க.

87. மாத்ருதேவோ பவ। பித்ருதேவோ பவ।
ஆசார்யதேவோ பவ। அதிதிதேவோ பவ॥
[தாயை தெய்வமாகக்கொள்; தந்தையை தெய்வமாகக்கொள்; ஆசாரியனை தெய்வமாகக்கொள்; அதிதியை தெய்வமாகக்கொள்.]

88. ஜிதந்தே புண்டரீகாக்ஷ! நமஸ்தே விஶ்வபாவந!।
நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேஶ! மஹாபுருஷ! பூர்வஜ!॥
[செந்தாமரைக்கண்ணா! உன்னால் (இவ்வாத்மவஸ்து) ஜயிக்கப்பட்டது; (இது) என்னுடையதல்லவே; உன்னுடையதாயிற்றே; உலகெல்லாம் உண்டாக்கினவனே! இந்திரியங்களை நியமிப்பவனே! கொடுப்பதில்

---

82. ரா-அ (3-29) 83. ஸ்தோ-ர 22. 84. ஸ்தோ-ர 63.
87. தை-சீக்ஷா (11-2) 88. ஜிதந்தே-1.

சிறந்தவனே! முற்பாடனாகப் பிறப்பவனே! (இவ்வாத்மவஸ்து) எனக்காகை தவிர்ந்து உனக்கே ஆகவேணும்.]

89. குஶப்தஸ் த்வந்தகார: ஸ்யாத் ருஶப்தஸ் தந்நிரோதக:।
அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதீயதே॥

['கு'ஶப்தம் அந்தகாரம் என்னும் பொருளையுடையது. 'ரு'ஶப்தம் அதைத் தடுப்பது; அந்தகாரத்தைத் தடுப்பவராகையால் ஆசாரியன் குருவெனப்படுகிறார்.]

90. லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்।
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்॥

[ஸ்ரீமந்நாராயணனுடன தொடங்குவதும், நாதயாமுநர்களை நடுவாகக் கொண்டதும் நம்முடைய ஆசாரியருடன் முடிவதுமான குருபரம்பரையை வணங்குகிறேன்.]

91. உத்பாதகப்ரஹ்மபித்ரோர் கரீயாந் ப்ரஹ்மத: பிதா

[பிறப்பித்த தந்தைக்கும் ப்ரஹ்மோபதேசம்செய்த தந்தைக்குமிடையே ப்ரஹ்மோபதேசம் செய்த தந்தை சிறந்தவன்.]

92. பித்ருமாத்ரு ஸுத ப்ராத்ரு தாரமித்ராதயோऽபி வா।
ஏகைகபலலாபாய ஸர்வலாபாய கேஶவ:॥

[தாய், தந்தை, மக்கள், உடன்பிறந்தோர், மனைவி, நண்பன் முதலிய அனைவரும் ஒவ்வொரு பலனை அடைவதன் பொருட்டு ஆவர். கேசவனோவென்னில் எல்லாப் பலன்களையும் அடைவதன் பொருட்டு ஆவான்.]

93. மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:।
பந்தாய விஷயாஸங்கி முக்த்யை நிர்விஷயம் மந:॥

[மனிதர்களுக்கு ஸம்ஸாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனதுதான் காரணம். சப்தாதிவிஷயங்களில் ஈடுபட்ட மனம் ஸம்ஸாரஹேதுவாகிறது. விஷயங்களில் பற்றற்ற மனம் முக்திஹேதுவாகிறது.]

94. யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேऽப்யநாஶ்யம்
தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே।

[யாதொரு பாபம், பல்லாயிரம் ப்ரஹ்மகல்பங்கள் அனுபவித்தாலும் நசிக்காதோ, அந்தப் பாபத்தை இந்த ஜந்து இங்கு அரை க்ஷணநேரத்தில் செய்கிறான்.]

---

90. கூரத்தாழ்வான் அருளிய தனியன். 93. வி-பு (6-7-28)
94. வைகுண்டஸ்தவம்-60.

95. விதுஷோऽதிக்ரமே தண்டபூயஸ்த்வம்
[ஞானியாயிருப்பவன் விதியை மீறினுகில் அவனுக்கு தண்டனை அதிகமாகும்.]

96. ஶக்தாஸ்யாதீவ தோஷவத்
[சக்தியுள்ளவன் சாஸ்திரவிதியை அநுஷ்டியாதிருந்தாணுகில் தோஷம் அதிகமாகும்.]

97. தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥
[தேவணுகிற என்னுல் நிர்மிக்கப்பட்டதும், முக்குணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது. என்னையே எவர்கள் சரணமடைகிருர்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிருர்கள்.]

98. சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோऽர்ஜுந ।
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப ॥
[அர்ஜுநு! புண்யசாலிகளான நான்கு வகைப்பட்ட ஜனங்கள் என்னிடம் பக்திசெய்கிருர்கள். அவர்களாவார்,—(செல்வத்தையிழந்து) வருந்துமவன், (புதிய செல்வத்தை) விரும்புமவன, ஆத்மஸ்வரூபத்தை அடைய விரும்புமவன், பகவானையே அடையவிருப்பும் ஞானி என்பவர்கள்.]

99. மாதா பிதா ப்ராதா நிவாஸஶ் ஶரணம் ஸுஹ்ருத் கதிர்
நாராயண:
[நாராயணன் தாயாகவும், தந்தையாகவும், தன்னுடன் பிறந்தவனுகவும், தங்குமிடமாகவுப், மோக்ஷோபாயமாகவும், நண்பனுகவும், மோக்ஷத்தில் அடையப்படுமவனுகவுமிருப்பவன்.]

100to103. ஆத்யாத்மிகாதி மைத்ரேய ஜ்ஞாத்வா தாபத்ரயம் புத: ।
உத்பந்ந ஜ்ஞாநவைராக்ய: ப்ராப்நோத்யாத்யந்திகம் லயம் ॥
ஆத்யாத்மிகோऽபி த்விவித: ஶாரீரோ மாநஸஸ் ததா ।
ஶாரீரோ பஹுபிர் பேதைர் பித்யதே ஶ்ரூயதாம் ச ஸ: ॥
ஶிரோரோக ப்ரதிஶ்யாய ஜ்வர ஶூலபகந்தரை: ।
குல்மார்ஶ ச்வயது ஶ்வாஸச் சர்த்யாதிபிரநேகதா ॥

---

97. கீதை (7-14). 98. கீதை (7-13). 99. ஸுபாலோபநிஷத்-16.
100....103. வி. பு. (6-5-1....8).

ததாக்ஷிரோகாதிஸார குஷ்டாங்காமய ஸம்ஜ்ஞிதை: ।
பித்யதே தேஹஜஸ் தாபோ மாநஸம் ஶ்ரோதுமர்ஹஸி ॥
காம க்ரோத பயத்வேஷ லோபமோஹ விஷாதஜ: ।
ஶோகாஸூயாவமாநேர்ஷ்யா மாத்ஸர்யாதி மயஸ் ததா ॥
மாநஸோऽபி த்விஜச்ரேஷ்ட தாபோ பவதி நைகதா ।
இத்யேவமாதிபிர் பேதைஸ் தாபோ ஹ்யாத்யாத்மிக: ஸ்ம்ருத:॥
பஶு பக்ஷிமநுஷ்யாத்யை: பிஶாசோரகராக்ஷஸை: ।
ஸரீஸ்ருபாத்யைஂச நருணாம் ஜாயதே சாதிபௌதிக: ॥
ஶீத வாதோஷ்ண வர்ஷாம்பு வைத்யுதாதி ஸமுத்பவ: ।
தாபோ த்விஜவரஶ்ரேஷ்டை: கத்யதே சாதிதைவிக: ॥

[மைத்ரேயரே! ஆத்யாத்மிகம் முதலானமூன்று தாபங்களையும் அறிந்த வித்வானவன், ஜ்ஞாநவைராக்யங்கள் உண்டாகப்பெற்ற வனாய், மோக்ஷமடைகிறான். ஆத்யாத்மிகமானது,—சரீரத்திலுண் டாவது (வ்யாதி) என்றும், மநஸ்ஸிலுண்டாவது (ஆதி) என்றும் இருவகைப்படும். சரீரத்திலுண்டாகும் வ்யாதியானது பல பிரிவு களையுடையது; அதைக் கேட்பீராக. தலைவலி, ப்ரதிஶ்யாயம் (பீநஸம்), ஜ்வரம், ஶூலம், பகந்தரம், குல்மார்ஶம், ச்வயது (ஶோபம்), ச்வாஸச்சர்த்தி முதலான பலவகைப்பட்டது. அப்படியே கண்நோய், அதிஸாரம், குஷ்டம், அங்கவ்யாதி என்னும் பல பெயர் களுடன் வியாதியானது வேறுபடுகிறது. மநஸ்ஸிலுண்டாகும் ஆதியைப்பற்றிக் கேட்பீராக. காமம், கோபம், பயம், விரோதம், பேராசை, துன்பம் ஆகியவற்றினாலுண்டாகும் கவலை, அஸூயை, அவமாநம், பொறாமை, மாத்ஸர்யம் முதலானவையாக மநஸ்ஸி லுண்டாகும் தாபமும் பலபடிப்பட்டிருக்கிறது. ஆத்யாத்மிகதாபமா னது இப்படிப்பட்ட பேதங்களை உடையதாகச் சொல்லப்படுகிறது. ப்ராணிகள், பக்ஷிகள் மநுஷ்யர்கள் முதலியவற்றாலும், பிசாசம், பாம்புகள், ராக்ஷஸர்கள் முதலியவற்றாலும், ஊர்வன முதலியவற் றாலும் மனிதர்களுக்கு ஆதிபௌதிகமான தாபம் உண்டாகிறது. குளிர், காற்று, வெப்பம், மழை, ஜலம், மின்னல் முதலானவற்றால் உண்டாகும் தாபம் ஆதிதைவிகம் என்று ப்ராஹ்மணச்ரேஷ்டர்களால் சொல்லப்படுகிறது.]

104. ஸைஷா வாருணீ பார்க்கவீ வித்யா । பரமே வ்யோமந் ப்ரதிஷ்டிதா ।

---

104. தை-ப்ருகு-6

[வருணனால் ப்ருகுவுக்குச் சொல்லப்பட்ட இந்த வித்யை பரமபதத்தில் நிலைநிற்கிறது.]

105. 70-வது ப்ரமாணத்தைப் பார்க்கவும்.

106. ப்ராயஶ: பாபகாரித்வாந் ம்ருத்யோருத்விஜதே ஜந: ।
க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம் ॥

[பெரும்பாலும், பாபம் செய்பவனாயிருப்பதாலேயே மனிதன் மரணத்தைக் கண்டு பயப்படுகிறான். செய்யவேண்டியதைச் செய்தவர்கள் மரணத்தைப்பிரியனான விருந்தாளியைப்போலே எதிர்பார்க்கிறார்கள்.]

107. ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாநுஷித்வா ஶாச்வதீ: ஸமா: ।
ஶுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே ॥

[யோகத்திலிருந்து நழுவினவன் புண்ணியம் செய்தவர்களுடையும் லோகத்தை அடைந்து பல வருடங்கள் வாழ்ந்து, சுத்தர்களாய் தகுதியுள்ளவர்களாயிருப்பாருடைய வீட்டில் பிறக்கிறான்.]

108. ஸ து மேதாவிநௌ த்ருஷ்ட்வா வேதேஷு பரிநிஷ்டிதாந் ।
வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு: ॥

[அந்த வால்மீகிபகவான் மேதாவிகளாய், வேதங்களில் தேர்ந்தவர்களான அவர்களைக் கண்டு, வேதத்தை விவரிப்பதற்காக அவர்களைச் சேர்த்துக்கொண்டார்.]

109. இதிஹாஸ புராணம் பஞ்சமம்

[இதிஹாஸ புராணங்கள் ஐந்தாவது வேதமாகும்.]

110. பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥

[அர்ஜுனா! எதிரிகளை அழிப்பவனே! ஒரு பலனை எதிர்பாராத பக்தியினாலேயே இப்படிப்பட்டவனான நான், உண்மையாக அறிவதற்கும், பார்ப்பதற்கும், நுழைவதற்கும் தக்கவன்.]

111. ஆராதநாநாம் ஸர்வேஷாம் விஷ்ணோராராதநம் பரம் ।
தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் ததீயாராதநம் பரம் ॥

[எல்லா ஆராதநங்களுக்குள்ளும் விஷ்ணுவை ஆராதிப்பது சிறந்ததாகும். அதிலும் வேறுபட்டதான அவனடியார்களை ஆராதிப்பது அதிலும் மிகச்சிறந்ததாகச் சொல்லப்படுகிறது.]

---

106. இதிஹாஸஸமுச்சயம் (7-38). 107. கீதை (6-42). 108. ரா-பா (4-6). 110. கீதை (11-54).

112. ஸோऽச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா
[முக்தன் எல்லாக் கல்யாணகுணங்களையும், ஸர்வஜ்ஞனான ப்ரஹ்மத்துடன் கூட அனுபவிக்கிறான்.]

113. யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி।
தத் யதா தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் சாயா வா ஸத்வமநுகச்சேத் ததாப்ரகாரம்॥
[எப்படி, இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவையும், நிழல் பிராணியையும் பின்தொடர்கின்றனவோ அப்படியே எப்படி எப்படிப் பரமபுருஷன் செல்கின்றானோ, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப்போகிறான்.]

114. அவித்யாஸ்மிதாபிநிவேசராகத்வேஷா: பஞ்ச க்லேசா:।
[அவித்யை, அஹங்காரம், பேராசை, விருப்பம், கோபம் இவ்வைந்தும் க்லேசங்கள்.]

115. உபர்யுபர்யப்ஜபுவோऽபி பூருஷாந் ப்ரகல்ப்ய தே யே சதமித்யநுக்ரமாத்।
கிரஸ் த்வதேகைககுணாவதீப்ஸயா ஸதா ஸ்திதா நோத்யமதோऽதிசேரதே॥
[ப்ரஹ்மாக்களுக்கு மேலும் மேலும் "தே யே சதம்" என்று அடிக்கடி படிப்பதன் மூலம் ப்ரஹ்மாக்களைக் கற்பித்து, உன்னுடைய ஒவ்வொரு குணத்தினுடையவும் எல்லையைக் காண்கையிலே இச்சையாலே, எப்போதும் இருக்கின்றவையான வேதவாக்கியங்களானவை, ஆரம்பதசையைக் கடந்து மேல் செல்லவில்லை.]

116. யதா ஸந்நிதிமாத்ரேண கந்த: க்ஷோபாய ஜாயதே।
மநஸோ நோபகர்த்ருத்வாத் ததாஸௌ பரமேச்வர:॥
[எப்படி தான் விகாரமடையாமலிருந்தபோதிலும் வாஸனையானது மனஸ்ஸைக் கலக்குகின்றதோ அப்படியே பரமேச்வரனும் தான விகாரமடையாமல் பிற வஸ்துக்களை விகாரமடையச் செய்கிறான்.]

117. ஜ்யோதீம்ஷ்யாதித்யவத்ராஜந் குரூந் ப்ரச்சாதயந் ச்ரியா
[ஸ்ரீக்ருஷ்ணபகவான் கௌரவர்களைத் தன் தேஜஸ்ஸாலே ஸூர்யன் மற்ற சோதிகளைப்போலே மழுங்கச் செய்துகொண்டு வந்தார்.]

---

112. தை-ஆ (1-2). 113, பரமஸம்ஹிதை. 114. பாதஞ்ஜலயோக ஸூத்ரம் (2-3). 115. ஸ்தோ-ர-19. 116. வி. பு. (1-2-30). 117. பார-உத் (94-45).

118. ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யாநி ப்ரியாணி மதுராணி ச।
ஹ்ருத்யாந்யம்ருதகல்பாநி மந: ப்ரஹ்லாதநாநி ச॥

[பிரியமாயும், இனியவையாயும், ஹ்ருதயத்திலிருந்து வெளிவருபவையாயும், அம்ருதம் போன்றவையாயும், மனத்தை உகப்பிப்பவையாயுமுள்ள அந்த பரதனுடைய வாக்கியங்களை நினைக்கிறேன்.]

119. வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி துஃக்கித:।
உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி॥

[(ராமன்) மனுஷ்யர்களுடைய துக்கங்களில், (அவர்களைக்காட்டிலும்) அதிகமாக துக்கிக்கிறான். (அவர்களுடைய) எல்லா உத்ஸவங்களிலும் தந்தையைப்போல் ஆனந்தப்படுகிறான்.]

120. இயம் ஸா யத்க்ருதே ராமச் சதுர்ப்பி: பரிதப்யதே।
காருண்யேநாந்ருஶம்ஸ்யேந ஶோகேந மதநேந ச॥
ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாதாச்ரிதேத்யாந்ருஶம்ஸ்யத:।
பத்நீ நஷ்டேதி ஶோகேந ப்ரியேதி மதநேந ச॥

[எவளுக்காக ஸ்ரீராமபிரான் கருணை, இரக்கம், சோகம், காமம் என்னும் நான்கினாலும் வருந்துகிறாரோ அந்த ஸீதை இவளே. (ஸ்ரீராமபிரான்) 'ஒரு பெண்பிள்ளை அபஹரிக்கப்பட்டாளே' என்னும் கருணையினாலும், 'நம்மைச் சேர்ந்தவள் (அபஹரிக்கப் பட்டாளே)' என்னும் இரக்கத்தாலும், 'நம்முடைய மனைவி நஷ்டமாயினளே' என்னும் சோகத்தினாலும், 'நமக்கு இனியவள் (அபஹரிக்கப் பட்டனளே)' என்னும் காமத்தினாலும் (வருந்துகிறார்).]

121. பிபேத ச புநஸ் ஸாலாந் ஸப்தைகேந மஹேஷுணா।
கிரிம் ரஸாதலம் சைவ ஜநயந் ப்ரத்யயம் ததா॥

[(துந்துபியின் எலும்பை எறிந்த பிறகு) மறுபடியும் ஸுக்ரீவனுக்கு நம்பிக்கையுண்டாவதற்காக ஏழு ஸாலமரங்களையும், மலையையும், ரஸாதலத்தையும் ஒரு பெரிய அம்பினாலே பிளந்தான் ராமன்.]

122. அப்திம் ந தேரித ந ஜிக்யித ராக்ஷஸேந்த்ரம்
நைவாஸ்ய ஜிஜ்ஞித யதா ச பலாபலம் த்வம்।
நிஸ்ஸம்ஶயஸ் ஸபதி தஸ்ய பதேऽப்யஷிஞ்சஸ்
தஸ்யாநுஜம் கதமிதம் ஹி விபீஷணஞ்ச॥

[எம்பிரானே! நீ கடலையும் கடக்கவில்லை; ராக்ஷஸாதிபதியை ஜயிக்கவுமில்லை; அவனுடைய பலாபலங்களைக் கூட அறியவில்லை; அப்படி

118. ரா-ஆ (16-39). 119, ரா-அ (2-40). 120. ரா-ஸு (15-49 &50). 121. ரா-பா (1-66). 122- அதிமாநுஷஸ்தவம்-24.

யிருக்கும்போது அவன் தம்பி விபீஷணனை உடனே எப்படி அவனுடைய ஸ்தானத்தில் ஐயமின்றியே அபிஷேகம் பண்ணிவைத்தாய்?]

123. ப்ரஹர்த்தாரம் ஶரீரேஷு ந தே பச்யந்தி ராகவம்।
இந்த்ரியார்த்தேஷு திஷ்டந்தம் பூதாத்மாநமிவ ப்ரஜா:॥

[தங்கள்சரீரத்திலே அடிக்கும் ராகவனை அந்த ராக்ஷஸர்கள் காணவில்லை. (எதுபோலவென்னில்:) இந்திரிய விஷயங்களை அநுபவிக்கும் பஞ்சபூதாத்மாவான ஜீவாத்மாவை மனிதர்கள் காணாததுபோலே.]

124. இதம் ஜ்ஞாநமுபாச்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:।
ஸர்க்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச॥

[இந்த ஞானத்தை அடைந்து, என்னைப்போல் ஆனவர்கள், ஸ்ருஷ்டி காலத்திலும் பிறப்பதில்லை; ப்ரளயகாலத்திலும் அழிவதில்லை.]

125. ப்ரமாணத்திரட்டில் 28-வது இலக்கமிட்டு அச்சிடப்பட்டிருக்கும் ப்ரமாணம் காண்க.

126. அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்யமுபாகத:

[நான் இவருடைய நினைவினால் (இவருக்குத்) தம்பி; (உண்மையில்) இவருடைய குணங்களால் அடிமைப்பட்டவன்.]

127. 36-வது ப்ரமாணம் காண்க.

128. கிம் ஸைநாம் ப்ரதிவக்ஷ்யாமி க்ருத்வா விப்ரியமீத்ருஶம்।
யதா யதா ஹி கௌஸல்யா தாஸீவச்ச ஸகீவ ச॥
பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்டதி॥

[கௌஸல்யை தாஸியைப்போலும், ஸகியைப்போலும், மனைவியைப்போலும், ஸஹோதரியைப்போலும், தாயைப்போலும் ஶுஶ்ரூஷை செய்யும்போதெல்லாம், இப்படிப்பட்ட அநிஷ்டமான காரியத்தைச் செய்துவிட்டு அவளுக்கு என்ன பதில் சொல்லுவேன?]

128 A. ஶமோ தமஸ் தபஶ்ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச।
ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்ராஹ்மம் கர்ம ஸ்வபாவஜம்॥

[வெளியிந்திரியங்களையும், மநஸ்ஸையும் (முறையே) அடக்குவதாகிற ஶமதமங்கள், காயக்லேஶரூபமான தவம், பரிசுத்தி, பொறுமை, நேர்மை, ஞானம், விசேஷமான ஞானம், ஆஸ்திகத்தன்மை ஆகிய இவை ப்ராஹ்மணனுக்கு இயற்கையிலுள்ளவை.]

129. அஹமஸ்ம்யபராதாநாமாலயோऽகிஞ்சநோऽகதி:।
த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:॥
ஶரணாகதிரித்யுக்தா ஸா தேவேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம்॥

123. ரா-யு(94-23). 124. கீதை(14-2). 126. ரா-கி(4-12). 128. ரா-அ(12-68). 128A. கீதை(18-42). 129. அஹிர்-ஸம்ஹிதை(37-30).

[“நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். (என்னை ரக்ஷித்துக்கொள்ள) ஒரு உபாயமுமற்றவனாயிருக்கிறேன்; (உன்னையொழிய) வேறு கதியில்லாதவனாக இருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக” என்று ப்ரார்த்திக்கும் புத்தியே ஶரணாகதி எனப்படுகிறது. அது இந்த பகவான் விஷயத்தில் செய்யப்படட்டும்.]

130. தாருண்யக்நிர் யதா தைலம் திலே தத்வத் புமாநபி।
ப்ரதாநேऽவஸ்திதோ வ்யாபீ சேதநாத்மாऽऽத்மவேதந:॥

[அறிவதையே ஸ்வரூபமாக உடையவனும், தனக்குத்தானே பிரகாசிப்பவனுமான ஜீவன, மரத்தில் நெருப்புபோலவும், எள்ளினுள் எண்ணைபோலவும் ப்ரக்ருதியினுள் மறைந்து நிற்கிறான்.]

131. மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநந்து மஹேஶ்வரம்

[ப்ரக்ருதியை ஆச்சரியமான ஸ்ருஷ்டிக்கு ஹேதுவாயிருப்பதால் மாயை என்றும், அந்த மாயையைத் தூண்டுபவனை மஹேச்வரனென்றும் அறியக்கடவன்.]

132. 34-வது ப்ரமாணம் காண்க.

133. ஸஸுராஸுரகந்தர்வம் ஸயக்ஷோரகராக்ஷஸம்॥
ஜகத் வஶே வர்த்ததேதம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம்॥

[தேவர், அஸுரர், கந்தர்வர்களோடு கூடியதும், யக்ஷர், நாகர், ராக்ஷஸர்களுடன் சேர்ந்ததும், அசையக்கூடியதும், அசையக்கூடாததும் சேர்ந்ததுமான இந்த உலகம் கிருஷ்ணனின் வசத்திலிருக்கிறது.]

134. நித்யோ நித்யாநாம் சேதநஶ் சேதநாநாம்
ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந்

[நித்யர்களான பல ஜீவர்களுக்கு, நித்யனான யாவனொரு பரமசேதநன் விருப்பங்களை அளிக்கின்றானோ.]

135. அசேதநா பரார்த்தா ச நித்யா ஸததவிக்ரியா॥
த்ரிகுணா கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூபமுச்யதே॥

[அறிவற்றதென்றும், பிறருக்காகவேயிருப்பதென்றும், ஸ்வரூபநாசமற்றதென்றும், எப்போதும் (குணங்களில்) மாறுபாடடைந்து கொண்டேயிருப்பதென்றும், ஸத்வரஜஸ்தமோகுணங்களை உடையதென்றும், கர்மங்களைச் செய்யும் ஜீவர்கள் அதையனுபவிக்குமிடமாயிருப்பதென்றும் ப்ரக்ருதியின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறது.]

136. நாநாத்மாநோ வ்யவஸ்தாத:

130. வி-பு (2-7-28) 131. ச்வே (4-10) 133. ஸஹஸ்ரநாமாத்யாயம். 134. கட (2-5-13); ச்வே(6-13) 135. பரமஸம்ஹிதை2. 136. வைசேஷிகஸூத்ரம்3-2-20

[ஸுகது:க்காதிபேதம் காணப்படுவதால் ஆத்மாக்கள் பலர் உள்ளனர் என்று ஸித்திக்கிறது.]

137. க்லேஶகர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட: புருஷவிஶேஷ ஈச்வர:

[க்லேஶம், கர்மம், விபாகம், ஆஶயம் ஆகியவற்றால் தொடப்படாததொரு புருஷன் ஈச்வரனாவான்.]

138. ஸதி மூலே தத்விபாகா ஜாத்யாயுர்போகா:

[க்லேசரூபமான காரணமிருக்கும்போது அதன் பலமான ஜாதி, ஆயுஸ், போகம் என்பவையும் உண்டாகின்றன.]

139. ஆஶயோ நாம வாஸநா

[ஆசயமென்பது வாஸனையாகும்.]

140. ஏவம்ப்ரகாரமமலம் நித்யம் வ்யாபகமக்ஷயம்।
ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ண்வாக்யம் பரமம் பதம்॥

[இப்படிப்பட்ட விஷ்ணுவின் பரமப்ராப்யமான ஸ்வரூபம், அழுக்கற்றதாயும், நித்யமாயும், ஸர்வவ்யாபியாயும், குறைவற்றதாயும், தாழ்வொன்றுமில்லாததாயுமிருக்கிறது.]

141. பராஸ்ய ஶக்திர் விவிதைவ ச்ரூயதே
ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச।

[இந்தப் பரமாத்மாவுக்குப் பலபடிப்பட்டதும், மேலானதுமான சக்தியும், இயற்கையான ஞானமும், பலமும், (ஸ்ருஷ்டித்தல் முதலிய) காரியங்களும் உண்டென்று அறியப்படுகிறது.]

142. த இமே ஸத்யா: காமா:

[அப்படிப்பட்ட இந்த பகவத்குணங்கள் என்றுமிருப்பவை.]

143. யதோ வாசோ நிவர்த்தந்தே। அப்ராப்ய மநஸா ஸஹ।
ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்। ந பிபேதி குதஶ்சநேதி॥

[எந்த ப்ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குகள், (அதை) அளவிட்டறியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்மாவின் ஆநந்தத்தை அறிந்தவன் எதனிடமும் பயப்படமாட்டான்.]

144. ஸ தாதார ப்ருதிவீம் த்யாமுதேமாம்

[அந்தப் பரமாத்மா இந்த பூமியையும் தேவலோகத்தையும் தரித்து நிற்கிறான்.]

145. அதவா பஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந।
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்திதோ ஜகத்॥

---

137. பாதஞ்ஜலஸூத்ரம் (1-24) 138. பாதஞ்ஜலஸூத்ரம் (2-13) 140. வி-பு (1-22-53) 141. ச்வே 6. 142. சான் [8-3-1] 143. தை-ஆ (9-1) 144. தைத்-ஸம் (4-2) 145. கீதை (10-42)

[அர்ஜுனா! இந்த ஞானத்தைப் பற்றிப் பல சொல்லியென்? நான் இவ்வுலகமெல்லாவற்றையும் என் சக்தியில் ஒரு சிறு பகுதியாலே தரித்து நிற்கிறேன்.]

146. க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:
க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:

[க்ஷரமெனப்படுவது ப்ரக்ருதியே; அம்ருதமாகையால் அக்ஷரமெனப் படுபவன் ஜீவனே. ப்ரக்ருதி ஜீவர்களை ஒரு தேவன் நியமிக்கிறான்.]

147. ந ச்ரமோ ந ச கேதஸ் தே ஜகத்தாரணஶாஸநே

[ஜகத்தை தரிப்பதிலும், நியமிப்பதிலும் உமக்கு சிரமமுமில்லை; துக்கமுமில்லை.]

148. ந ஹி பாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் ।
ஸ்திதௌ ஸ்திதம் மஹாப்ராஜ்ஞ பவத்யந்யஸ்ய கஸ்யசித் ॥

[மஹாபுத்திமானே! ரக்ஷணத்தில் நிலைநிற்கும் ஸர்வேஶ்வரனை ஹரியைத் தவிர வேறு எவனுக்கும் ரக்ஷிக்க ஸாமர்த்யம் கிடையாதன்றோ.]

149. சேஷ்டா தஸ்யாப்ரமேயஸ்ய வ்யாபிநோऽவ்யாஹதாத்மிகா

[அளத்தற்கரிய ஸர்வவ்யாபியான அவனுடைய செயல் தடையற்றதாகும்.]

150. ரகாராதீநி நாமாநி ராமத்ரஸ்தஸ்ய ராவண ।
ரத்நாநி ச ரதாஶ்சைவ த்ராஸம் ஸஞ்ஜநயந்தி மே ॥

[ராவணா! ராமனிடம் பயந்த எனக்கு 'ர' என்னும் எழுத்தில் ஆரம்பிக்கும் ரத்நங்கள், ரதங்கள் முதலிய நாமங்களும் பயத்தை விளைக்கின்றன.]

151. ந தஸ்யேஶே கஶ்சந தஸ்ய நாம மஹத் யஶ:

[அப்பரமாத்மாவை நியமிப்பவன் ஒருவனுமில்லை; அவன் ஒருவனுக்கே பெருங்கீர்த்தியுள்ளது.]

152. தவாநந்தகுணஸ்யாபி ஷடேவ ப்ரதமே குணா: ।
யைஸ் த்வயேவ ஜகத் குக்ஷாவந்யேऽப்யந்தர் நிவேஶிதா: ॥

[பகவானே! கணக்கற்ற குணங்களை உடையவனாயிருந்தபோதிலும் உமக்கு ஆறே குணங்கள் முக்கியமானவைகள். தேவரீர் உலகத்தை வயிற்றில் வைத்துக்கொண்டிருப்பதுபோல், இக்குணங்கள் மற்ற குணங்களைத் தமக்குள் கொண்டிருக்கின்றன.]

---

146. ச்வே (1-10). 148. வி. பு. (1-22-21). 150. ரா-ஆ (39-17). 151. தை-நா (1-9).

153. ஸங்க்யாதும் நைவ ஶக்யந்தே குண தோஷாஶ்ச ஶார்ங்கிண:।
ஆநந்த்யாத் ப்ரதமோ ராஶிரபாவாதேவ பஶ்சிம:॥

[சார்ங்கமென்னும் வில்லாண்டானுடைய குணங்களையும் தோஷங்களையும் எண்ணமுடியாது. முன்சொன்னகுணங்களை கணக்கற்றிருப்பதால் எண்ணவொண்ணாது. பின்சொன்ன தோஷங்கள் இல்லையாகையால் எண்ணமுடியாது.]

155. கல்யாணம் மங்களம் ஶுபம்

[கல்யாணம் மங்களம் சுபம் என்னுமிவை ஒருபொருளை உடையவை.]

156. தம் த்ருஷ்ட்வா தே ததா தேவா: ஶங்கசக்ரகதாதரம்।
அபூர்வ ரூபஸம்ஸ்தாநம் தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்॥

[சங்கசக்ரகதாதரனாய், அபூர்வமான திருமேனி அமைப்பையுடையவனாய், உறுதியானவனாய், தேஜோராசியான அந்த பகவானைக் கண்ட தேவர்கள் (துதிக்கத் தொடங்கினர்).]

158. ஸர்வதாऽபிகதஸ் ஸத்பிஸ் ஸமுத்ர இவ ஸிந்துபி:

[நதிகள் கடலை அடைவதுபோல் நல்லோர்களால் எப்போதும் அடையப்படுபவன் ராமன்.]

158A. தாதூநாமிவ ஶைலேந்த்ரோ குணாநாமாகரோ மஹாந்।

[ஒரு சிறந்த மலை தாதுக்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பதுபோல், ஸ்ரீ ராமபிரானும் குணத்திற்கெல்லாம் பெரியதோர் இருப்பிடமாவர்.]

159. வஶீ வதாந்யோ குணவாந் ருஜு: ஶுசிர்
ம்ருதுர்தயாளுர் மதுரஸ்ஸ்திரஸ் ஸம:।
க்ருதீ க்ருதஜ்ஞஸ்த்வமஸி ஸ்வபாவதஸ்
ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததி:॥

[(ஆச்ரிதர்களுக்கு) வசப்பட்டிருப்பவனாய், (தன்னையே தமர்க்கு நல்கும்) வள்ளலாய், ஸௌஶீலயகுணத்தை உடையவனாய், (மனோவாக்காயங்களால்) ஒருபடிப்பட்டிருப்பவனாய், (நிர்ஹேதுகமாக உபகரிக்கும்) பாவசுத்தியை உடையவனாய், அடியார்களுடன் பிரிவைப் பொறுக்கமாட்டாதவனாய், (ஆச்ரிதருடைய துக்கத்தை ஸஹிக்கமாட்டாத) தயையை உடையவனாய், (ஆச்ரிதரை ரக்ஷிக்கும் விஷயத்தில்) அசைக்கமுடியாதவனாய், (ஆச்ரயிக்குமிடத்தில் எல்லார்க்கும்) ஸமனாய், (ஆச்ரிதர்களுடைய காரியங்களைத் தன்னுடையவையாக நினைத்துக்) காரியம் செய்பவனாய், ஆச்ரிதர் செய்த சிறிய ஆநுகூல்யத்தையும்

155. அமரம் (1-4-25). 156. வி. பு (1-9-67). 158. ரா-பா (1-16).
158 A. ரா-கி (15-21). 159, ஸ்தோ-ர 18.

பெரிதாக நினைத்திருப்பனாயிருக்கும் நீ இயற்கையாகவே எல்லாக் கல்யாணகுணங்களுக்கும் அமுதக்கடலாயிருக்கிறாய்.]

160. நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்ரோ ஜாயதே
[நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறான்; நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறான்.]

161to164. பகவாந் பவித்ரம் வாஸுதேவ:। பவித்ரம் வாஸுதேவோ பகவாந்। ஸங்கர்ஷணோ பகவாந்। ப்ரத்யும்நோ பகவாந்।
[பரிசுத்தனான பகவான் வாஸுதேவன். பரிசுத்தனாய் வாஸுதேவனெனப்படும் பகவான். ஸங்கர்ஷணனான பகவான்; ப்ரத்யும்நனான பகவான்]

165. வேதே ராமாயணே சைவ புராணே பாரதே ததா।
ஆதௌ மத்யே ததாந்தே ச விஷ்ணுஸ் ஸர்வத்ர கீயதே॥
[வேதங்களிலும், ராமாயண பாரதங்களாகிற இதிஹாஸங்களிலும், புராணங்களிலும முதலிலும், நடுவிலும், முடிவிலும் மற்றெல்லாவிடத்திலும் விஷ்ணுவே பாடப்படுகிறான்.]

166. ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ
மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச।
வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம்॥
[எல்லாருடைய ஹ்ருதயத்திலும் நான் அமர்ந்திருக்கிறேன். என்னிடமிருந்தே நினைவும், ஜ்ஞானமும், மறதியும் உண்டாகின்றன. எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் நானே. வேதத்தில் சொல்லப்பட்ட பலன்களைக் கொடுப்பவனும், வேதத்தை அறிவிப்பவனும் நானே.]

167. யச்ச கிஞ்சித் ஜகத்யஸ்மிந் த்ருச்யதே ச்ரூயதேऽபி வா।
அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:॥
[இவ்வுலகில் காண்பனவும் கேட்பனவுமாயிருக்கும் பொருள்களெல்லாவற்றிலும் உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்து நிற்கிறான்.]

168. தஸ்யமத்யே வஹ்நிசிகா அணீயோர்த்வா வ்யவஸ்தித:।
நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா।
நீவாரசூகவத் தந்வீ பீதாபா ஸ்யாத் தநூபமா।
தஸ்யாச் சிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:।
ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ்ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்॥

---

160. நாராயணோபநிஷத். 161to64. ரஹஸ்யாம்நாயம். 165.
166. கீதை (15-15) 167. தை-நா 11. 168. தை-நா 11.

[அந்த இருதயகமலத்தின் நடுவில், சிறியதும் மேல்நோக்கினதுமான அக்நிஶிகை (பரமாத்மாவின் திவ்யமங்களவிக்ரஹப்) இருக்கிறது. (அது) நீலமேகத்தை உட்கொண்ட மின்னல்போல் பிரகாசமுள்ள தாகவும், நெல் நுனிபோல் சிறிதாகவும், மஞ்சள் நிறமுள்ளதாகவும், ஒப்பற்றதாகவும் இருக்கிறது. அந்த ஶிகையின் நடுவில் பரமாத்மா விளங்குகிறான். அவனே பிரமனுக்கும் அந்தர்யாமி; அவனே சிவ னுக்கும் அந்தர்யாமி; அவனே இந்திரனுக்கும் அந்தர்யாமி; (பிரமன் முதலியவர்களைக்காட்டிலும்) மேலானவனும், கர்மத்திற்கு வசப்படாத வனும், அழிவற்றவனுமான முக்தாத்மாவுக்கும் அவனே அந்தர்யாமி]

169\. ஸ்வோஜ்ஜீவநேச்சா யதி தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி।
ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர॥

[உன்னுடைய உஜ்ஜீவனத்தில் உனக்கு விருப்பமிருக்குமாகில், உன் இருப்பில் ஆசையிருக்குமாகில், ஆத்மாவினுடைய தாஸனாயிருக்கும் தன்மையையும், ஹரியினுடைய ஸ்வாமியாயிருக்கும் தன்மையையும் (இவைகளின்) ஸ்வபாவத்தையும் எப்போதும் நினைப்பாயாக.]

170\. த்வத்பாத பங்கஜ பரிக்ரஹ தந்ய ஜந்மா
பூயாஸமித்யபிநிவேஶகதர்த்யமாந:।
ப்ராம்யந் ந்ருமாம்ஸபணநாய பரேதபூமா-
வாகர்ண்ய பீருருதிதாநி தவாகதோऽஸ்மி॥

[பயந்த ஸ்வபாவமுள்ளவளே! தாமரைபோன்ற உன் பாதங்களைப் பிடிப்பதன்மூலம் பிறவிப்பயன்பெறலாம் என்னும் ஆசையினாலே மனம் வருந்தி, மனிதமாமிசத்தைப் பெறுவதன்பொட்டு மயானத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் நான், உன்னுடைய அழுகைக் குரலைக்கேட்டு வந்திருக்கிறேன்.]

171\. கிம் ஶீதலை: க்லமவிநோதிபிரார்த்ரவாதாந்
ஸஞ்சாரயாமி நளிநீதள தாலவ்ருந்தை:।
அங்கே நிதாய கரபோரு யதா ஸுகம் தே
ஸம்வாஹயாமி சரணவுத பத்மதாம்ரௌ॥

[கரபம்போன்ற துடையை உடைய சகுந்தலே! சிரமத்தைப்போக்கும் குளிர்ந்த தாமரையிதழாலான விசிறியாலே குளிர்ந்த காற்றை உன் மேல் வீசச்செய்யலாமா? அல்லது தாமரைபோல் சிவந்த உன் பாதங் களை என் மடியில் வைத்துக்கொண்டு ஸுகமாக வருடலாமோ?]

169\. விஷ்ணுதத்வம். 170. மாலதீமாதவம். 171. சாகுந்தலம் (3-18)

172. ததஸ்ய ப்ரிபமபி பாதோ அஶ்யாம் । நரோ யத்ர தேவயவோ மதந்தி।
உருக்ரமஸ்ய ஸ ஹி பந்துரித்தா । விஷ்ணோ: பதே பரமே மத்வ
உத்ஸ: ॥

[எந்த கங்காதீர்த்தவிஷயத்தில், தேவத்வத்தை விரும்பும் மனிதர்கள் ஸந்தோஷிக்கிறார்களோ, இனியதாகவிருக்கும் இந்த பகவானுடைய அந்த ஸ்ரீபாததீர்த்தத்தை ஆதாவுடன் பானம் செய்வேணுக. அப்படிக் குடிப்பவன் திரிவிக்ரமனுக்கு பந்துவாவான். இம்மாதிரியாக விஷ்ணுவினுடைய மேலான திருவடியில் அம்ருதத்தினுடைய ப்ரவாஹம் உண்டாகிறது-]

173. தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேஶிதாத்மா கதமந்யதிச்சதி?।
ஸ்திதேऽரவிந்தே மகரந்தநிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி
வீக்ஷதே ॥

[அம்ருதத்தைப் பெருக்குகிற உன் திருவடித் தாமரையில் (உன் அருளாலே) வைக்கப்பட்ட மனமானது மற்றொன்றை எப்படி விரும்பும்? தேன் நிறைந்த செந்தாமரையானது இருக்கும் பொழுது வண்டு முள்ளிப்பூவை காணவும்மாட்டாதன்றோ?]

174. தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம் ।
ஸர்வதா சரணத்வந்த்வம் வ்ரஜாமி ஶரணம் தவ ॥

[விஷ்ணுபக்தியுடையவர்களும் பகவத்பக்தியற்றவர்களும் எப்போதும் ஸமானமாகப் பற்றலாம்படியிருக்கும் உன்னுடைய திருவடியிணையை உபாயமாக நிச்சயிக்கிறேன்.]

175. விச்வத: பர்யேதி

[பரமாத்மாவைச் சுற்றிலும் ப்ரதக்ஷிணம் செய்கிறான்.]

176. ஸக்ருத் த்வதாகாரவிலோகநாஶயா த்ருணீக்ருதாநுத்தமபுக்தி-
முக்திபி: ।
மஹாத்மபிர் மாமவலோக்யதாம் நய க்ஷணேऽபி தே யத்விர -
ஹோऽதிதுஸ்ஸஹ: ॥

[எந்தப் பெரியோர்களின் பிரிவானது உனக்கு ஒரு கணப்பொழுதும் மிகவும் பொறுக்க முடியாததாயிருக்கிறதோ, ஒருதடவை உன்னுடைய திருமேனியைக் காணவேணும் என்னும் ஆசையினால் த்ருணம் போல்நினைக்கப்பட்ட மேலான போகங்களையும், மோக்ஷத்தையும் உடையவர்களான, (அந்தப்) பெரியோர்களால் கடாக்ஷிக்கத் தக்கவனாயிருக்கும் தன்மையை (அடையும்படி) என்னைச் செய்து அருளவேண்டும்.]

172.யஜுர் 2-4-6. 173.ஸ்தோ-ர 27. 174.ஜி-ஸ்தோ 2. 176.ஸ்தோ ர-56.

177. துர்க்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத:।
யதி நாஸம் ந விந்தேத தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா ॥
[தேவரீரிடத்தில் ஈடுபட்டிருக்கிற என்னுடைய மநோரதமானது மிகவும் கீழான நிலை ஏற்பட்டபோதிலும் அழியாதிருக்குமேயாகில் அவ்வளவாலே எப்பொழுதும் க்ருதக்ருத்யனாயிருக்கிறேன்.]

178. ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி
[ப்ரஹ்மத்தை அறிந்தவன் ப்ரஹ்மத்தைப் போலாகிறான்.]

179. ப்ரஹ்மவிதாப்நோதி பரம்
[ப்ரஹ்மத்தையறிந்தவன் மேலான பலனை அடைகிறான்.]

180. ஸ ஏவ ஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்க்ககர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச।
ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷ மூர்த்திர் விஷ்ணுர் வரிஷ்டோ வரதோ வரேண்ய:॥
[ஸ்ருஷ்டி செய்யப்படுபவனும் அவனே; பிரமன் முதலிய அவஸ்தைகளால் ஸ்ருஷ்டி செய்பவனும் அவனே; அவனே (உலகை) ரக்ஷிக்கிறான்; (உலகை) விழுங்குகிறான்; அவனே காப்பாற்றப்படுகிறான். எல்லாவற்றையும் சரீரமாகக்கொண்ட விஷ்ணுவே மேலானவன்; வரங்களைத் தருபவன்; வரிக்கத்தகுந்தவன்.]

181. பூமநிந்தா ப்ரஶம்ஸாஸு நித்யயோகேऽதிஶாயநே।
ஸம்பந்தேऽஸ்தி விவக்ஷாயாம் பவந்தி மதுபாதய:॥
[மதுப் (மத்) முதலான விகுதிகள் மேலே சொல்லப்போகும் அர்த்தங்களில் வருகின்றன:—(1) அதிகம் (கோமாந்—அதிகமான பசுக்களை உடையவன்) (2) நிந்தை (ரோகவாந்—வியாதியை உடையவன்) (3) ஸ்தோத்ரம் (ரூபவதீ—அழகிய உருவை உடையவள்) (4) எப்போதும் சேர்ந்திருப்பது (க்ஷீரிணோ வ்ருக்ஷா:—எப்போதும் பாலையுடைய மரங்கள்) (5) அதிக குணமுள்ளதாயிருப்பது (ஶக்திமாந்—அதிக சக்தியுள்ளவன்) (6) சேர்க்கை (தண்டீ—தடியை உடையவன்) (7) இருப்பதைச் சொல்லுவது (பர்வதோ வஹ்நிமாந்—மலையில் நெருப்பிருக்கிறது.)]

182. ராம ராம நயநாபிராமதாமாஶயஸ்ய ஸத்ருஶீம் ஸமுத்வஹந்
ஸர்வதேவஹ்ருதயங்கமோऽஸி

177. ஜி-ஸ்தோ 12. 178. முண்ட (3-2-9). 179. தை-ஆ (1).
180. வி. பு. (1-2-70). 181. வார்த்திகம் (5-2-14).

[ராமனே! (அவரவர்) விருப்பத்திற்குத் தகுந்தவாறு கண்ணுக்கு இனிமையாயிருக்கையை உடையவனும் எல்லா தேவர்களுக்கும் நெஞ்சுக்கினியனுமாயிருக்கிறாய்.]

183. ராமமிந்தீவரச்யாமம் கந்தர்ப்பஸத்ருசப்ரபம் ।
பபூவேந்த்ரோபமம் த்ருஷ்ட்வா ராக்ஷஸீ காமமோஹிதா ॥

[இந்தீவரபுஷ்பத்தைப்போல் கருநிறமுடையவனும், மன்மதனைப்போன்ற அழகையுடையவனும், இந்திரனுக்கு ஒப்பானவனுமான ராமனைக் கண்டவுடன் ராக்ஷஸியானவள் காமத்தினால் மோகமுற்றாள்.]

184. தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ ।
புண்டரீகவிஸாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ ॥

[(ராமலக்ஷ்மணர்கள்) வாலிபமானவர்கள்; அழகு நிறைந்தவர்கள்; ஸௌகுமார்யத்தை உடையவர்கள்; அதிகமான பலமுள்ளவர்கள். தாமரைபோன்ற அகன்ற கண்களை உடையவர்கள்; மரவுரியையும் மான் தோலையும் உடுத்தவர்கள்.]

185. அதிஜ்யதந்வாநமவேக்ஷ்ய ராமம்
சரந்தமேகாந்த விலாஸிநீபி: ।
நூநம் பபூவுர் வநதேவதாஸ்ச
மர்த்யாங்கநாஜந்ம குதூஹலிந்ய: ॥

[அழகிய பெண்களுடன் நாணேற்றின வில்லை ஏந்தியவனாய்ச் செல்லும் ராமனைக் கண்டதும் வநதேவதைகளும் மனிதப்பெண்ணுருக்கொள்ள ஆசைகொண்டனர்.]

186. ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர: ।
ரூபதாக்ஷிண்ய ஸம்பந்ந: ப்ரஸூதோ ஜநகாத்மஜே ॥

[ஜனகராஜன் திருமகளாரே! தாமரையிதழ்போன்ற கண்ணையுடையவனும், (விலங்காகிற என்னையுள்ளிட்ட) எல்லாப் பிராணிகளின் நெஞ்சையும் கவர்பவனும், வடிவழகையும், குணங்களையும் உடையவனுமாய்ப் பிறந்திருக்கிறான் ராமபிரான்.]

187. ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் ।
தத்ருசுர் விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந: ॥

[ராமனுடைய உருவ அமைப்பையும் அழகையும், மென்மையையும், அழகிய வேஷமுடைத்தாயிருக்கையையும் வநவாஸிகள் ஆச்சரியம் மிக்க வடிவையுடையவர்களாய்க் கண்டனர்.]

---

183. ரா-ஆ (17-9)  184. ரா-ஆ (19-14)  186. ரா-ஸு (35-8)
187. ரா-ஆ (1-13)

188. பாஷாணகௌதமவதூ வபுராப்திஹேது:
[கல்லாய்க் கிடந்த கௌதமபத்னியையும் பெண்ணாக்கக்காரணமாயிருந்த (வடிவழகு.]

189. தே வயம் பவதா ரக்ஷ்யா பவத்விஷயவாஸிந:।
நகரஸ்தோ வநஸ்தோ வா த்வம் நோ ராஜா ஜநேச்வர:॥
[உம் தேசத்தில் வஸிக்கும் நாங்கள் உம்மால் ரக்ஷிக்கப்பட வேண்டியவர்கள்; நரபதியான நீரே நகரத்திலிருந்தாலும், வநத்திலிருந்தாலும் எங்களுக்கு அரசனுவீர்.]

190. பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி।
ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மந:॥
[இலையாவது, மலராவது, பழமாவது, ஜலமாவது எவனொருவன் எனக்கு பக்தியுடன் கொடுக்கிறானோ, மநஸ்ஸை அடக்கிய அந்த பக்தனுலே பக்தியுடன் அளிக்கப்பட்ட அவற்றை (கிடைத்தற்கரியது கிடைத்தாற்போலே) உண்கிறேன்.]

191. ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்திரித்யபிதீயதே।
பஜ இத்யேஷ தாதுர்வை ஸேவாயாம் பரிகீர்த்தித:॥
தஸ்மாத்ஸேவா புதை: ப்ரோக்தா பக்திசப்தேந பூயஸீ॥
[ஸ்நேஹத்தை முன்னிட்ட தியானம் பக்தியெனப்படுகிறது. 'பஜ' என்கிற தாது 'ஸேவை' என்னும் அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மேலான ஸேவையே பெரியோர்களால் பக்தி சப்தத்தினுல் சொல்லப்படுகிறது.]

192. தத் த்வ்யம் ஸக்ருதுச்சாரோ பவதி
[த்வயத்தை ஒரு தடவை உச்சரித்தால் போதுமானது.]

193. யந்முஹூர்த்தம் க்ஷணம் வாऽபி வாஸுதேவோ ந சிந்த்யதே।
ஸா ஹாநிஸ்தந் மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா॥
[யாதொரு முஹூர்த்தத்திலாவது, கணத்திலாவது வாஸுதேவன் நினைக்கப்படுவதில்லையோ, அதுவே ஹானி; அதுவே பெருந்துன்பம்; அதுவே மயக்கம்; அதுவே விகாரம்.]

194. அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச।
ஈத்ருசாநாம் ததா தத்ர கோடிகோடிசதாநி ச॥
['அந்த ப்ரக்ருதியில் இம்மாதிரியான பல கோடிநூறுயிரம் அண்டங்கள் இருக்கின்றன' என்பது ஸாரார்த்தம்.]

---

189. ரா-ஆ(1-20) 190. கீதை(9-26) 191. லிங்கபுராணம் உத்தரபாகம்.
192. த்வயோபநிஷத். 193. காருட-பூர்வ(222-22) 194. வி-பு(2-7-27)

195. ஆப்ரஹ்ம புவநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந।
மாமுபேத்ய து கௌந்தேய புநர் ஜந்ம ந வித்யதே॥

[குந்திபுத்ரனான அர்ஜுனா! ப்ரஹ்மலோகத்திலிருந்து எல்லா உலகங்களும் அழியக்கூடியவை. என்னை அடைந்தபிறகோவென்னில் மறுபடியும் பிறப்பில்லை.]

196. புரம் ஹிரண்மயீம் ப்ரஹ்மா விவேஶாபராஜிதாம்
[அபராஜிதையென்று பெயர்பெற்ற பொன்மயமான நகரத்தினுள் ப்ரஹ்மம் பிரவேசித்தது.]

197. ததஸ் த்வஹம் சோத்தம சாபபாணத்ருக்
ஸ்திதோऽபவம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண:।
அதந்த்ரிபிர் ஜ்ஞாதிபிராத்தகார்முகைர்
மஹேந்த்ரகல்பம் பரிபாலயம்ஸ் ததா॥

[அதன் பிறகு (லக்ஷ்மணன் மேலே அதிஶங்கை கொண்ட) நான் மேலான வில்லையும் அம்பையும் ஏந்திக்கொண்டு, (என்னிடமும் அதிஶங்கைகொண்டு) சோம்பலில்லாதவர்களாய், வில்லேந்தியவர்களாயிருக்கும் என் உறவினர்களுடன் கூட மஹேந்திரனைப்போன்ற ராமனை லக்ஷ்மணனுக்கருகில் நின்று ரக்ஷித்து நின்றேன்.]

198. தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய:।
திவீவ சக்ஷுராததம்॥
தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே।
விஷ்ணோர்யத் பரமம் பதம்॥

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதத்தை நித்யஸூரிகள் எப்போதும் பார்க்கிறார்கள். அப்பரமபதம், எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பவனும், ஆகாயத்திலிருப்பவனும், உலகிற்கெல்லாம் கண்ணுயிருப்பவனுமான ஸூர்யனைபோல் ப்ரகாஶமுள்ளது. விஷ்ணுவினுடைய யாதொரு பரமபதமிருக்கிறதோ, அதில் மேதாவிகளும், துதிப்பதையே ஸ்வபாவமாக உடையவர்களும், ஜாகரூகர்களாயிருப்பவர்களுமான நித்ய ஸூரிகள் பிரகாசிக்கின்றனர்.]

199. கதா புநஶ் ஶங்கரதாங்ககல்பகத்வஜாரவிந்தாங்குஶவஜ்ரலாஞ்சநம்।
த்ரிவிக்ரம! த்வச்சரணாம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி॥

[திரிவிக்ரமாவதாரம் செய்த எம்பிரானே! சங்கு, சக்கரம், கல்பக வ்ருக்ஷம், கொடி, தாமரை, அங்குசம், வஜ்ராயுதம் இவைகளை

195. கீதை (8-16) 196. தைத்-ஆர 197. ரா-அ (87-23)
198. ருக்வேதம், ஸாமவேதம் (3-18-2-4) 199. வி. பு (6-7-95)

